2122

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன முதற்பெருங்குரவர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜைவிழா அணி மலர்

28—5—1948



வன்மைபுரி காயம் மரப்பாவைதன்னை அரன்
கன்மமெனும் சூத்திரத்தால் கட்டியே—நன்மை தின்மை
ஆட்டுவது நாடாது அறிவிலார் தம்செயலாய்
நாட்டுதல்போல் உண்டோ நகை.

—குருஞானசம்பந்தர்.



*திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன ஸ்தாபகர்*

**ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமசாரிய சுவாமிகள்**

வெளியீடு எண் ககூ௦

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன ஸ்தாபகர்,
ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்
அருளிய

# பண்டாரசாத்திரம்

(முதல் தொகுதி)

இவ்வாதீன உரு-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்
திருவுள்ளக்குறிப்பின் வண்ணம்

வெளியிடப்பெற்றது.

தருமபுர ஆதீனம்
1948.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# முன்னுரை

கிட்டாத ஈசனைக் கிட்டி யருள்புரிந்த
நிட்டாறு பூதி நிலையிலே — மூட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வருமின்பப் பூரணமா வை. (சிவபோகசாரம் ௫௫)

உலகு (தளை), உயிர், இறை என்னும் முப்பொருள்களும் என்றும் உள்ளன. இவை நித்தியப்பொருள்கள். சைவசித்தாந்தத்தில் அழிவு என்று கூறு மிடத்தில் பருப்பொருள் நுண்பொருளாதலைக் குறிப்பதென்றே கொள்ளுதல் வேண்டும். ஆக்கமாவது உள்ளது (நுண்ணிது) பருப்பொருளாகவிரிதலே. இல்லது தோன்றாது; உள்ளது தோன்றும். இவ்வுண்மையை நோக்கின், உயிர்க்கு வரும் இன்பத்துன்பங்கட்கும் காரணம் புலப்படும். இல்லாத துன்பமோ இன்பமோ உயிர் அடைதற்கு இயலாது. துன்பமும் இன்பமும் உள்ளனவே. அவை எங்கிருந்து உயிர்க்கு வருகின்றன? ஏன் வருகின்றன? எவற்றால் வருகின்றன? என்று ஆராய்வது உயிர்க்கு இன்றியமையாதது.

அம் முப்பொருளும் சத்து. அவற்றுள் இருபொருள் சித்து. அவ்விரண்டனுள் ஒன்று உணர்த்த உணர்கின்ற சித்து. ஒன்று தானே உணர்கின்ற சித்து. முன்னது "பொறியின்றி ஒன்றும் புணராத புந்தி," "கண்ட வற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்திண்டிறல்". பின்னது 'ஆறு அறிவு', 'எங்கும் எவையும் எரியுறுநீர் போல் ஏகந்தங்குவது', 'பல்லாருயி ருணரும் பான்மைஎன மேலொருவனில்லாதான்' என்னும் இயல்புடையது. "எங்கும் இருக்கும் அறிவு நீ ஏகமாய் அங்கங்குணர்த்தும் அறிவு நாம்" என்னுஞ் சிவபோகசாரத்தைச் சுவைத்தின்புறுக. இத்தகைய வேறுபாடு பல உடைமையால் முன்னதைச் சிதசித்து என்றும் பின்னதைச் சித்து என்றும் தெரித்துணர்த்துவர் சித்தாந்தச் செந்நெறிச்செல்வர்.

சிதசித்து என்று பெயர் பெற்றதற்குக் காரணம் உண்டு. மூப்பொருள்களுள் சித்து இறை. அசித்து உலகு. அச்சித்தையும் இவ்வசித்தையும் சார்ந்து அதனதன் வண்ணத்தை அடைதற்குத் தக்க ஓர் இயல்பு உயிர்க்குண்டு. உள்ளதால், அவ்வுயிரைச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையது என்று குறிப்பர். சித்துக்கெதிர் அசித்து நில்லாது. (ஒளிமுன் இருள் நில்லாது.) அதனல் அசித்து, சித்தை அறியமாட்டாது. (இருள் ஒளியை அறியமாட்டாது.) அசித்தையும் சித்தையும் அறிவது சிதசித்து எனப்படும் உயிர். (இருளையும் ஒளியையும் அறிவது கண்.) இருளும் ஒளியும் அவ்விரண்டன் சார்பும் உறத்தக்க கண்ணும் போல அசித்தும் சித்தும் அவ்விரண்டன் சார்பும் உறத்தக்க சிதசித்தும் உண்டு. சத்து என்னும் பெயர் மூன்றற்கும் பொதுவானது. ஆயினும் ஆக்கமும் அழிவும் அடைதல் இறைக்கில்லை; உலகுக்குண்டு. அதனல் அதை அசத்தென்பர். சத்தாய இறையையும் அசத்தாய உலகையும் சார்ந்து அதனதன் வண்ணமாந்தன்மை யுடையது உயிர். அதனல் அதைச் சதசத்து என்பர். உண்மை பற்றிச் சதசத்து என்றும், உணர்வுபற்றிச் சிதசித்து என்றும் குறிக்கப்பெறும் உயிர்க்கு இன்பத்துன்பங்கள் (அநுபவம் மிக்க சிவ ஞானச் செல்வர் திருவருட்காட்சியில் உணர்ந்துரைத்தியவாறு) உலகாலும் அவ் வுலகின் சார்புடைய தன்னலும் தன்னூழாலும் வருகின்றன.

உலகு உயிர் இறை என்னும் மூன்றனையும் முறையே பாசம் பசு, பதி என்ற பெயர்களால் உணர்த்துவர். பாசம் பற்றி நிகழும் ஞானம் பாசஞானம்; பசுவாகிய தன்ஞானம் பசுஞானம்; பதிக்குள்ள இயல்பான ஞானம் பதிஞானம்; இம் மூன்றனுள் பாசஞானம் என்பது பாசம்பற்றி நிகழ்வதேயன்றி, அப்பாசத்திற்கு உள்ளதன்று. ஏனைய இரண்டற்குமே ஞானம் உண்டு.

> வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
> விரும்பசபை வைகரியாதித் திறங்கள் மேலா
> நாதமுடி வான வெல்லாம் பாசஞானம்
> நணுகியான் மாவிவை கீழ் நாடலாலே
> காதலின ஞன்பிரம மென்னு ஞானம்
> கருதுபசு ஞானம் இவனுடலிற் கட்டுண்
> டோதியுணர்ந் தொன்றொன்று வுணர்ந்திடலாற் பசுவாம்
> ஒன்ருகச் சிவனியல்பின் உணர்ந்திடுவன் காணே.

பதியும் பசுவும் (தனித்தனி) இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்தி என்று மும்மூன்றுடையன. அவற்றுள் பதிக்குரிய ஞானசத்தி சிவசிற்சத்தி எனவும், பசுவிற்குரிய ஞானசத்தி ஆன்மசிற்சத்தி எனவும் வழங்கப்படும்.

முன்னைய மூன்று சத்தியும் பின்னைய மூன்று சத்தியையும் இயக்குவிக்கும் அவையிலவேல் இவைநிகழா. அவை கலாதி மூன்றனைக் கருவியா கொண்டு இவற்றை நிகழ்த்தும்.

"ஒருவிய விச்சை யாதி யுதயமா யொடுங்க வென்பான்
மருவிய கலாதி யிச்சை மறைந்திட வீசன் றன்பான்
விரவிய விச்சை யாதி விளங்கி"

என்னும் அருண்மொழியால் அதனை நன்றுணரலாம்.

இவ்வான்மசத்தி மூன்றும் பாச சம்பந்தத்தால் தொழிற்படவே இன்பத்துன்பங்கள் ஆன்மாவிற்கு(ப் பசு என்னும் நிலையில்) உண்ட கின்றன. பசுத்துவம் அகன்று, பதி சம்பந்தமுற்றால், (அழிகின், தல்லாத) பேரின்பம் அடைகின்றது. துன்பம் அடையும்வரையில் இருக்கு இன்பம் சிற்றின்பம். துன்பத்தின் தொடக்கம் இன்பத்தின் முடிவுக் எல்லை. அவ்வாறே துன்பத்திற்குங் கொள்க. கொள்ளவே, இன்பத்துன்ப இரண்டும் நிலைக்காதவை. தனக்கொரு முடிவு காணாத இன்பமே பேரின்பம். அது பதி சம்பந்தம் ஒன்றாலே உயிர்க்கு எய்தற்பால (சிவபோகசாரம் ௪௭. ௮௫. ௧௧௯ பார்க்க.) அதையடைய உயிர்க் இச்சை நிகழ்தல் வேண்டும். அந்நிகழ்ச்சியும் இறைவனால்தான் தோன்று தோன்றுதற்கு, உயிர், தான் செய்யும் வினையின் பயன் தனக்குச் சாரா வாறு, எல்லாம் இறைவன் செயல் என்று இறைபணி நிற்றல் வேண்டு இந்நிலை எளிதின் எய்தாது. அரிதின் முயன்று பெறுந் தவத்தால் தா எய்தும். அத் தவம் பிற சமயத்தினர் கூறும் தவமல்ல. அவை சை சமயத்தில் மட்டுந்தான் கூறப்படுகின்றன. அவற்றைச் சரியை, கிரியை யோகம், ஞானம் என்பர். இன்னிசைப் புலமை பெற விரும்புவார்க்கு சுரஞானம், தாளஞானம், இராகஞானம், கீர்த்தனஞானம் நான்கு ஒழுங்குற அமையவேண்டின், முறையே சுராவளி முதலியனவு அலங்காரமும், வர்ணமும், கீதமும் ஆகியவற்றின் பயிற்சி இன்றியமை யாதது. அவ்வாறே திருவருள் பெற விரும்புவார்க்கு அந்நான்கு தவமு இன்றியமையாதவை.

துன்பத்தின் நீங்கி, இன்பத்தைப் பெற விரும்பிய உயிர் அதை பெறவொட்டாது தடுக்கின்றவை நான்கு. அவை (1) உடம்பொ இயைந்த தொடர்பு. (2) பொறிகளொடு இயைந்த தொடர்பு. (3) உள்ள தொடு இயைந்த தொடர்பு. (4) உயிராகிய தன்னை விடாமை. சரியையி பயில்வார்க்கு உடற்பற்று ஒழியும். உடல் தன்வயமுறும். கிரியையி பழகுவார்க்குப் பொறிபுலன்கள் அடங்கிக் கட்டுப்படும். யோகத்தை

புரிவார்க்கு உள்ளம் ஒருமைப்படும். இம்மூன்றும் வாய்த்தார்க்கே ஞானம் ஒழுங்குற உண்டாகும். ஞானம் பெற்றோரே பேரின்பத்தை எய்துவர். உயிர்கள் இப்பேரின்பத்தை எய்தும்பொருட்டு, இறைவன் தன் பேரருள் வெள்ளம் கரைபுரண்டெழ நின்று, ஐம்பெரும் பூதம் முதலியவைகளைப் படைத்தான். அவற்றுள் சராசரங்களைக் கூட்டினான். சரங்களுக்கு நல்லறிவைப் படிமுறையில் அருளினான். அவ்வறிவுக்குரிய நெறியாகச் சைவம் முதலிய சமயங்களைக் காட்டினான். அச்சமயநெறி நின்றொழுகிய அருட்செல்வர்க்கு அச் சமயங்களைக் கடந்த சமரசத்தை அருளினான். அச் சமரசத்தால் உயிர்கள் தன்னிலைமையைச் சாரத் தந்தான். அவ்வாறு தரப்பெற்றவர்கள் இத் தமிழ்நாட்டில் பலர் வீற்றிருந்தருளுகின்றனர். அவருள் திருக்கயிலாய பரம்பரை, தருமபுராதீனத்தை நிறுவித் திருக்கோயில்கொண்டு, தம்மை வழிபடும் மெய்யடியார்க்குப் பிறப்பிறப்பாகிய துன்பத்தை நீக்கி, தம்மை யனுபவித்தலொன்றேயன்றி வேறில்லாத பேரின்பத்தையாக்கிவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குருஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அடியோங்கள்பாற் கொண்ட பெருங் கருணைத் திறத்தால் அடியோங்களுக்கு உள்ள கட்டு ஒழிந்து வீடுபேறு வாய்க்கும் வண்ணம் பல சிவஞான நூற்களை அருளிச்செய்தார்கள். அவை சாத்திரமும் தோத்திரமும் என இருதிறனுக விளங்குகின்றன.

முற்கூறிய துன்பநீக்கம், இன்ப ஆக்கம் என்னும் இரண்டனுள் முன்னது பாசரூபம் முதலிய ஆறுகவும், பின்னது சிவரூபம் முதலிய நான்காகவும் நிற்கின்றன. அப்பத்தும் தசகாரியங்கள் எனப்படும். அவற்றுள் ஒன்பதும் பத்துமாகிய சிவயோகம், சிவபோகம் என்னும் இரண்டன் விரியாக முப்பதவதரமும் துகளறுபோதம் முதலியவற்றில் உணர்த்தப்பெறும். காரியமும் அவதரமும் வெவ்வேறுகும். ஆதலின், அவற்றை ஒன்றென்பார் கருத்து ஆராயத்தக்கது. இத் தசகாரியங்களையும் முப்பதவதரத்தையும் உணர்த்தும் நூல்கள் உணர்த்தும் முறையால் வேறுபடுகின்றன. அவற்றுள், அதிகாரி பேதத்தால் பிரமாணம் இலக்கணம் சாதனம் பயன் என்னும் நால்வகையால் பொது, உண்மை என்னும் இரு திறனையும் உணர்த்தும் சிவஞானபோதமும் பிறவும் போலாமல் நம் குருஞானசம்பந்தரருளிய நூற்கள் உண்மையேபெரிதும் உணர்த்துவன. சிற்றம்பல நாடிகள் சாத்திரக் கொத்தும், திருவாவடுதுறை யாதீனத்துப் பண்டார சாத்திரமும், தருமபுராதீனத்துப் பண்டார சாத்திரமும் மெய்கண்ட சாத்திர வழிவந்த சிறப்பின.

அவற்றுள், முற்கூறியவாறு உயிர்க்குள்ள இரண்டு போக்கிடங்களுள் மலநிலைக்குக் கொண்டுய்க்கும் மலநெறியிற்செல்லும் மலநடையை

நீக்கி, அருணிலைக்குக் கொண்டுய்க்கும் அருணெறியிற் செல்லும் அருணடையை ஆக்கிப் பேரின்பந் துய்ப்பிக்கும் 'சிவபோகசாரம்' தருமபுர ஆதீனத்துச் சாத்திர சிரோமணியாகும். இது கமலை ஞானப்ரகாசன் மெய்த்தொண்டர்கள் முப்பொருளுண்மையை ஆய்ந்தறிந்து, பிரபஞ்ச வாழ்க்கை யெல்லாவற்றையுங் காய்ந்தொழிந்து, கல்வி கேள்வியென்னும் பல்பெருந் துன்பக்கடலைக் கடந்து, சிவாநந்த சாகர பூரணத்துள்ளே ஒன்றுமாகாது இரண்டுமாகாது சுத்தாத்துவித சித்தாந்த முத்தியின்பம் பெற்றுத் திளைப்பிக்கும் என்பது பின்வரும்,

"ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாம்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவாநந்த வாரியுள் ளேயொன் றிரண்டு பெறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே."

என்னுந் தனித்திருப்பாடலான் உய்த்துணரப்படும்.

சிவபோகசாரத்துள் வரும் பொருள்கள்:- (எண் செய்யுளைக் குறிக்கும்.) இந்நூல் கேட்கும் அதிகாரி. 16. பெத்தநிலை. 57. 60. 71. பிறப்பொழிக்கும் வழி 12. 61. 70. 109. துன்புறுதற் காரணம் 97. இன்புறு பெரியரும் துன்புறு சிறியரும் 84. முத்தரும் பெத்தரும் 112. நூலறிவு, அட்டமா சித்திகள் சித்த சலனத் துன்பந்தரும் எனல். 15. 85. 111. 115. 128. நூற்களைக் கற்றுத் தர்க்கம் பேசுதல். 128. உள்ளம் அடங்கவே கற்றல்வேண்டும். 128. நிலை நிலையாப் பொருளுணர்ச்சி. 110. மெய்த்துறவு. 77. அதருமத்திற்கு வருந்துதல் காலக்கேட்டை வெறுத்தல். 106. தீயார் செயல் 125. தீயார் தன்மை 129. வஞ்சகக் குருக்கள் மடமை 126. பக்குவ வேறுபாட்டின் பயன். 137. பித்துக்கள் போக்கும் வழி. 22 23. 85. அறியாமை 117. சுக துக்கோபமாநம் 116. சுன்மபலம் 91. 94. 98. 99. 101. விழலென விடுதற்குரியன. 130. செருக்கறு வழி 120. அகம்பிரம வாதியை மறுத்தல். 42 முத்தி வரும் வழி 139. திருவருட்பேற்றின் தடையும், பேற்றருமையும். 11. பதி பசு பாசம். 27. 81. தன்னை யுணர்த்த வேண்டல் (மாயை) 25. பிறவிச் சிறைவீட்டிறைவன் 118. தேகவிரோதியும் திருவருட்டுணையும் 114. குருவருள் 15. குருவை வேண்டல். 8. குரு மகிமை 3. 4. 5. 6. 7. 29. 43. 50. 51. 52. 53. குருபாத வல்லபம். 28. குருபதேசம். 9. 10. 32. 33. 34. 35. 37. 39. 40. 58. 68. 69. 71. 72. 73. 75. 76. 103. 107. 108. 113. 131. 132. 133. 134. 135. 138. ஐயமகற்றல். 36. மெய்யுணர்வு. 38. சிவம் 17. 30. சிவப்பேறு. 19. 33 43. முத்திநிலையும் அதனியல்பும் 127. இறைபணி நிற்றல். 72. 73. 74. 75. 76. 78. 79. 80. 82. 83. 86. 87. 89. 93. 94. 96. 104. 105. 133. 136. ஞான வீரம். 49. 56. பரிபூரணாநந்த தரிசநம்.

46, 96. சிவபோகசிலே 12. 13. 19. 20. 31. 34. 40. 41. 55. 63. 64. 65. 67. சிவபோகம் 43. 48. 54. 56. 71. 112. 124. சிவாநுபூதிமான். 18. 21. 26. 59. 62. 66. 102. 121. 122. 123. 124. தனிப்பாடல்:- தருமபுராதீனத் தொண்டர் இயல்பு. 1. சுதந்திரகீனம், அருள்வழி நிற்றல். 2. பழக்கவாசனை. 3. எல்லாம் வினைப்பயன் தம்மையுணர்தல். 4. வாழ்த்து. 5.

உ. சொக்கநாத வெண்பா.

இது தோத்திரப் பிரபந்தம். ஸ்ரீ பரமாசாரிய சுவாமிகள் தம் ஆன்மார்த்த மூர்த்தியான ஸ்ரீ சொக்கலிங்கக் கடவுளை மிக்க அன்புடன் உருகி வேண்டித் தொழுத வெண்பாக்கள் நூற்றொன்றுடைய இவ்வினிய நூல், அப்பெருமானைப் பூசிக்கும் சிவபூசா துரந்தரர்க்கு வழிபாட்டு முடிவில் நாடோறுந் தவறாது ஒன்றோ பலவோ பாடிப் பேரின்பம்பெறத் துணை செய்யும். இந்நூற் செய்யுட்கள் பிறநூற்பொருளைப் பொன்னேபோற் போற்றிக் காத்துப் பெரு மகிழ்ச்சி விளைக்கின்றன. 'என்னால் உனை யடைய வல்லேன் எனில் இடரில் இந்நாளளவும் இருப்பேனோ' (7), 'பாசம் அறுத்து முத்திகூட்ட மனத்துயரஞ் செய்தல் மருந்தோ' (25) 'பேரன்பு காட்டி எனைக் காட்டி யுனைக்காட்டி இன்பத்தொட்டிலிலே ஆட்டி வளர் சொக்கநாதா' (68; 'யானெதென் றூட்டல்' (84) 'நீ யியற்றலாகா தணுவுமசையுமோ' (87) 'உன்னைச் சிங்காரித்துன தழகு பாராமல் என்னைச் சிங்காரித் திடர்ப்பட்டேன்' (92) என்பவை முறையே "உன்னறிவை நீயே யுணர்வையே யாமாகில் இந்நெடுநாட் பாசத் திசையாயே" (துகளறு போதம்), "போற்றவரும் அருள் அருளேயன்றி மற்றுப் புகன்றவையும் அருளொழியப் புகலொணுதே" (சிவப்பிரகாசம்), 'வண்ணந்தான்' 'கேட்டாயோ' (திருவாசகம்) "யானென தென்றவரவரைக் கூத்தாட்டு வான்" (திருவாசகம்), "அவனன்றி ஓரணுவு மசையாதெனும் பெரிய ஆப்தர்மொழி" "உன்னைச் சிங்காரித் துனதழகைப் பாராமலென்னைச் சிங்காரித்திருந்தேன் பராபரமே" (தாயுமானவர்) என்பவற்றை நினைப் பூட்டுகின்றன.

நம் பரமாசாரிய சுவாமிகள் அருளிய இச் சாத்திர தோத்திரங் களுள் அமைந்த எல்லாச் செய்யுட்களும் காரிகை கற்றுப் பாடும் சீரில்லாச் செய்யுட்களோடொருங்குவைத் தெண்ணுவார் எவருமிரார். அதற்குக் காரணம் பலஉள. அவற்றுள் ஞான சாத்திரம் குரு தோத்திரம் என்பனவேயன்றிப் பாட்டின்பம் (63) சொல்லழகு முதலியனவும் அடங்கும். சில சொற்கள் சொல்லாராய்ச்சியுடையார்க்கு விருந்தாய்ப்

பயன்றரும். 'பொல்லாங்கு' என்னும் வழக்குண்மையைப் பலரும் அறிவர். அதன் மறுதலையானது 'நல்லாங்கு' (சொக்கநாத வெண்பா 53) என்று வழக்கிலிருந்தமையை அறிவார் சிலரே. நன்மை தின்மை, நலம் பொலம், நன்கு தீங்கு, நன்று தீது, நல்லாங்கு பொல்லாங்கு என்னும் ஒழுங்கில் வைத்துணர்பவர் இவ்விருந்திற் கலந்துவப்பர். தொடர்களும் பேரின்பம் பயக்கின்றன. 'மால் பூப்பிட்டுங் காணுப் பொருள்' (சிவபோகசாரம். கச) என்பதிலுள்ள பூப்பிட்டும் என்பது மாலின் வன்மையைச் சிறப்பித்து, அவ்வருஞ் செயல் புரிந்துங் கடவுளைக் காண்டற்கு அருமையையுடைய னுயினன் எனச் சிவ பரத்துவத்தை மிகுத்துணர்த்திற்று. பூப்பிட்டும் என்னுந் தொடரில், நிலைமொழி நிலத்தையும் வருமொழி பிளத்தற் றொழிலையும் குறித்துப் பன்றி வினையை நன்றுணர்த்துதல் நினைக்கத் தக்கது. பிட்டு என்னும் எச்ச வினையின் பகுதி பிள் என்பது. நள் நட்டு, கள் கட்டு என வருதல் போலும். சொக்கநாத வெண்பாவின் அா-வது திருப்பாட்டு என்றும் நினைவில் இருத்தற்பாலது. அது பத்திநெறி யறிவித்துப் பழவினைகளைப் பாற்றி முத்திநெறியறிந்த முனிவராக்கும்.

> துஞ்சப் பிணமென்னச் சுற்றத்தா ரிட்டத்தார்
> அஞ்சச் சலிக்க அருவருக்கக — கொஞ்சமுற
> வந்த தனுவிருந்து வாழ்ந்துநா னென்னைவைத்த
> தந்திரம் என்? சொக்கநா நாதா.

'தந்ததுன்றன்னை' எனத் தொடங்குந் திருவாசகத்தை அஅ வது திருவெண்பா விளக்குகின்றது. அகா-வது திருவெண்பாவை நோக்கிய அடியேன் சைவத்திற்கும் சிவனடிமைக்கும் நெடுந்தொலைவிலிருப்பதை யினிதுணர்ந்து இரங்குகின்றேன். 'மதுரைத்தாண்டவனே' என் மனத்தை அறியவல்லான். இத்தோத்திரச் சிறப்பையும் அம் முத்தமிழ்ச்சங்கத்து இறைவனே சொல்லவல்லனாதலின் இம்மட்டில் அடங்குவல்.

## ௩. முத்திநிச்சயம்

சிதம்பரத்திலிருந்த கண்கட்டி மறைஞானபண்டாரம் என்னும் சைவப்பெரும் புலவர் "வீடு பெற்ற ஆன்மா தன்னின்பமே நுகரும் சிவாநந்தம் நுகர்தலில்லை" என்ற முடிவைக்கொண்ட 'முத்திநிலை' என்றொரு நூலியற்றினர். அதனைப் பின்பற்றிய உயிர்கண்மேற்கொண்ட பெருங் கருணை வெள்ளமே அவ்வுயிர்களை அடித்துக்கொண்டேகிப் பேரின்பக் கடலுள் ஆழ்த்தும் முத்தி நிச்சயமாக வெளிப்பட்டது. இதனை இரண்டாவது திருவெண்பா உணர்த்துகின்றது. ஆன்மாநந்தம் அன்றிச் சிவாநந்தம் இன்று என்ற பவாநந்தருக்குமட்டுமோ அந்நூற்பயன் உண்டு? முக்காலத்தவர்க்கும் உண்டு.

*வேதா கமத்தின் விதித்தமுத்தி தான்அன்றி*
*நீதானே இன்பமென்றல் நீதியோ? பேதாய்!*

என்று, அறியாமையாலெழுந்த கருத்து நீதிக்கு மாறானதென, இடித்துரைத்து வேதாகம நீதிக்கு மாறும் வேறுமாகாத முத்தியைப், 'பெறுவான் நீ ஆநந்தம் பேறு' என்று உணர்த்தி, அவ்வாநந்தமாகிய பேறும், ஆன்மாவாகிய பெறுவானும் வேதாகம வாக்கியப் பொருள் எனச்சுட்ட, 'என்றுரைத்தது அறியாதிருந்தனை' என்றருளினார்கள். "உற்ற பரமாநந்தத் தொன்றாயதிலுறங்கி மூற்றுவதே முத்தி முடிவு" என்றுணர்ந்த பரமாசாரிய சுவாமிகள் திருவாக்கில், 'இடும்பு' 'ஈனகுணம்' 'அன்னைமுலைப் பால்' எனவந்த கருணைப் பெருக்கத்தையுணர்த்தும் சொற்கள் அமைந்த இடத்தையும் பொருத்தத்தையும் முத்திநெறியறிந்த முனிவர்பிரானாகிய இவ்வாதீனத்து வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதலோரே அறிய வல்லார். எளியேன் எங்கனம் அறியவல்லேன்?

'அண்ணலைப்போலாநந்தம்' என்னுந் திருவெண்பா, சம்பிரதாயோபமாநத்தைக்காட்டி முத்தி முடிவை உணர்த்துதலை எல்லாரும் அறிந்தின்புறக்கடவர்.

## ச. திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்

இஃது இறைநிலைபோன்று 'அணுவோரண்டமாஞ் சிறுமையும்' 'அண்டமோரணுவாம் பெருமை'யும் கொண்டு, உடையானியல்பு அவனுடைமைக்கும் இருத்தல் ஏற்றதெனத் தோற்றுகின்றது.

சைவசித்தாந்த ஞானபாதப் பொருளைத் தசகாரியமாக்கியுணர்த்துவதே சிவாகமவழக்கு. அத் தசகாரியமாவன,

| | | |
|---|---|---|
| (அ)1. பாச ரூபம் | (ஆ)1. பாச தரிசனம் | (இ)1. பாச சுத்தி |
| 2. பசு ரூபம் | 2. பசு தரிசனம் | 2. பசு சுத்தி |
| 3. பதி ரூபம் | 3. பதி தரிசனம் | 3. பதி யோகம் |
| | | 4. பதி போகம் |

என்பன. இவற்றைச் சம்பிரதாய முறைப்படி தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவ

ரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்று கூறல் வேண்டும். இங்குக் கூறியது எளிதாக உணர்த்தும்பொருட்டுக் கொண்டதாகும். மேற்காட்டிய முப்பிரிவுள், 'ரூபம்' எனமுடியும் மூன்றனையும் தனித்தனி எட்டாக்கிக் கூறியருளினர் சிவாநந்தாநுபவச் செல்வர். உருவம் ஒன்றே எட்டாக, ஏனையவும் கூடிப் பாசத்திற்குப் பத்தும், ஆன்மாவிற்கும் இறைவ னுக்கும் தனித்தனி பதினொன்றும் ஆயின. ஆன்மலாபம், சிவபோகம் இரண்டும் ஒன்றேயாயினும், தனித்தனியாகக் காரியப்பகுப்புணர்த்தும் பொழுதில் அவற்றைப் பிரித்துக்கூட்டியதால், ஆன்மதசகாரியம், சிவ தசகாரியம் இரண்டும் வெவ்வேறு ஏகாதசகாரியங்களாயின. தரிசனம் சுத்தி என்னும் இரண்டும் உருவத்தின் பிரிவான எட்டொடுஞ் சேரப் பத்தாயின. பத்தின்மேல் ஒன்று மிகுகற்குக் காரணம் அறியத்தக்கதே. பசுபாசங்கட்குள்ள சுத்தி பதிக்கில்லை. சிவரூபம் சிவதரிசனம் இரண்டற் கும் பின் சிவசுத்தி என்று ஒன்று இருப்பின், ஆன்மா பட்டபாடெல்லாம் வீணைகப்போம். பேற்றை இழக்கப் பாடுபடுதல் உண்டோ? சிவதரிசனத் தின்பின் (ஏனைப் பசுபாச சுத்திநிலைபோல) அமைந்த காரியம் சிவ யோகமும் சிவபோகமும் என இரண்டாதல்பற்றி, ஒன்று ஏறி ஏகாதச மாயின. சிவப்பேற்றில் ஒன்று ஏறியதே ஆன்மலாபம் என்ற பெயரால் பசுகாரியம் பத்தொடு சேர்த்துப் பதினொன்ருக்கப்பட்டது. படவே பசு பதிகாரியங்கள் எட்டும் மூன்றும் ஆகிப் பதினொன்ருயின. ஆயினும், தசகாரியத்தின் பகுப்பேயாதலின், அவற்றைத் தசகாரியம் என்றனர் எனவே பதி பசு பாசம் மூன்றனுள்ளும் உருவம் எட்டாகப் பிரிந்தது என்றும், தரிசனம் வரையில் மூன்றற்கும் நவகாரியங்களே என்றும், சுத்தியில் பசுபாசங்கட்குமட்டுர் வேற்றுமையில்லை என்றும், பதிகாரியத் துள் சுத்தியின்மையால், அவ்விடத்து நிகழ்ச்சிகளாகிய யோகமும் போக மும் பெறுவானும் பேறும் என்பதுபற்றிப் பதிக்கும் பசுவிற்கும் நான்கு காரியங்களாயின என்றும், அதனுல் ஆன்மதசகாரியத்துள் பெறுவானைப் பற்றிய பெயராய் ஆன்மலாபமென்றும், சிவ தசகாரியத்துள் பேறு பற்றிய பெயராய்ச் சிவபோகம் என்றும் வழங்கப்பெற்றன என்றும், இவ்வகைப் பிரிவால் ஏகாதசமாவன தசகாரியத்தின் பகுப்பேயாதல்பற்றி அவ்வேகாதச காரியங்களையுந் தசகாரியமெனல் வழுவன்றென்றும் உணர்க.

இத் திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவலைப்பற்றிய தொரு கட்டுரை நம் தருமபுர ஆதீனத்துத் திங்கள்வெளியீடும் ஆதிபரமாசாரிய சுவாமிகளை என்றும் நினைவிற்கொணரும் அக்ஷரசொரூபியும் ஆகிய "ஞானசம்பந்தம்" என்னும் அழகிய ஏட்டில் வெளிவரும். அதில் விளக்கி எழுதியிருக்கின்றேன். ஆண்டுக்காணலாம்.

## ரு. சோடசகலாப் பிராசாத சட்கம்

சைவசித்தாந்தச் செந்நெறியில், ஞானத்தை ஒழுங்குறப்பயக்கும் யோகம் பிராசாதயோகமேயன்றி வேறில்லை. அப்பிராசாத யோகத்தால் வரும் ஞானத்தின் முதிர்ந்தோர்க்கு எய்துவதும் தசகாரியத்துள் ஒன்பதாவதுமாயுள்ள சிவயோகமே முடிந்தயோக மென்றும் அச்சிவயோகத்தினும் மேலான யோகம் வேறில்லையென்றும் சைவ சித்தாந்தங் கூறுகின்றது, திருக்களிற்றுப் படியாருள் வரும்,

—“ மெய்ம்மைச்
சிவயோக மேயோகம் அல்லாத யோகம்
அவயோக மென்றே யறி” (எச)

என்பதை இங்குநினைத்தல் நன்று. அச்சிவயோகத்தினைத்தான் சிவஞானபோதம் ‘அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி இறைபணிநிற்றல்’ என விளக்கியது.

அத்தகைய சிவபோகத்தைத் தருதற்குரிய நெறி பிராசாத நெறி. பிராசாதம் என்பதற்குச் சிவஞானகதியைத் தருவது என்று பொருள் கூறுவர் வடமொழிவல்லார்.

இப் பிராசாதநெறியை விளக்குந் தமிழ் நூற்களுள் இச் சோடசகலாப் பிராசாத சட்கம் அப்பிராசாத மந்திரத்தின் பதினாறுகலைகளையும் ஆறு திருவிருத்தங்களாலுணர்த்துவதால் அப்பெயர்பெற்றது. சோடசம்= பதினாறு. சட்கம்=ஆறுகொண்டது. இப் பிராசாதயோகப்பயிற்சி சைவவுலகில் எங்கொளித்துவிட்டதோ அறியேன். வடமொழிச் செல்வர் சிற்சிலர் தம் அநுட்டானத்தில் வைத்துப் போற்றிப் பயனெய்துகின்றனர். ஊன நாடகம் ஆடும் வேட்கையே உலகோர்க்கு மிக்கு வருவதன்பயன் ஞான நாடகமும் அதன் அங்கங்களும் மறைந்துவருவதன்றி வேறில்லை.

“ ஆகமங்கள் எங்கே அறுசமயந் தானெங்கே
யோகங்கள் எங்கே யுணர்வெங்கே ”?

இக் களிற்றஞ்சு ‘அஞ்சுகளிறும்’ அடக்கித் தொண்டு நெறியிற் புகுத்தும் கழற்றுரையாதலறிக. சொக்கலிங்கமே பழம்பொருளையருளும் பழம்பொருளாதலின் அத்துணைபெற இத் தமிழுலகம் மீண்டும் பெருந்தவம் புரிந்து சைவத்தைப் புதுப்பித்தல் வேண்டும். திருஞானசம்பந்த சுவாமிகளும் மதுரையிற்றான் சைவத்தைப் புதுப்பித்தருளினார்கள்.

பிராசாத யோகப்பயிற்சியே சைவ சித்தாந்தச் செந்நெறியை ஐயம் எல்லாம் அகற்றித் தெளிவித்து உறுதிப்படுத்துகின்றது. சைவ நன் மக்கள் இதனையுபதேசிக்கப்பெற்று, ஐம்புலக்கூடாகிய துச்சிலிருந்து துயருறாமல் புக்கிலான தனிவீடுவாங்கி நனியின்பம் பெறுக.

## ௬. சொக்கநாதக் கலித்துறை

இத்தோத்திரப் பிரபந்தம் ஏகாதசப் பாமாலையாக மதுரைச் சொக்கநாதருக்கு ஆன்மார்த்த பூஜாகாலத்தில் சாத்தி வழிபட்டு மகிழ்ந்த உண்மையை உணர்த்துகின்றது.

என் மனத்தில் வந்தாய் (1) என்ற தொடர் யாவர்க்கும் அரியான் பழகுகையின்கண் பொற்கிண்ணமென்று கருதவந்த, வழிபாட்டுக்குவக்கும் நிலையைக் குறிக்கும். ஆதரம் உன்னையல்லாலெனக் காருளரோ (2) அல்லல் என்பங்கு ஆனந்தம் அன்பர்பங்கு. (3) என்பன சைவர்போக் கைப் பழங்காலத்து உயர்வுக்கு ஈர்க்கும். பாடியாடிப்பணிந்து மலந்தீர்ந்து வீடுறச் செய்தருளவேண்டுதல். (4) மகாலிங்கத்தின் மகிழ்ந்திருந்து சிவா நந்தத்தை அன்பர்க்கு நல்குதல். (5) பெத்தத்திலாட்டுவிக்கும் ஆண்டவ னுக்கே முத்தியிலும் ஆட்டுவிக்கும் தலையெழுத்துண்டு எனல். (6) பெத்த முத்தியிரண்டிலும் ஜீவசுதந்திரம் இன்மையின் விளக்கம். (7) "சென்றி வன்றான் ஒன்றிற் சிவபூரண மொழியும்" உண்மைவிளக்கம் ௩௮. பவ சாகரத்திலழுத்தி வருத்தாமல், சிவாநந்தசாகரத்தில் இடைவிடாதழுத்தி ஆட்கொண்டருள்க எனல். (8) துக்கசாகரத்தில் மூழ்கிய என் தலை விதியை மாற்றி ஆநந்தசாகரத்தில் அமுக்கியருள்க எனல். (11) எல்லாம் சிவன் செயலாதலின் என் செயலாவது யாதொன்றுமில்லை எனல். (10) மலநடையிலோடும் உயிர்நீரை மடைமாறி, அருளடையிலோடச் செய்தருள், (11) என்னும் நூற்பொருள்களைச் சித்தாந்தச் செல்வர் தம் அறிவாகிய இருப்புப்பேழையுள் வைத்துப் போற்றியும் வழங்கிவளர்த்தும் வட்டி பெறுது மகிழ்ந்தும் வாணாளை வெட்டியிற் கழிக்காதுஞ் சிறப்பர்.

இராப்பகலுற்ற இடத்திற் பிறந்திறந்துழலாமல், இராப்பகலற்ற இடத்திற் பிறத்தலையும்; சிற்றின்பவேட்கையாற் பிறவித் துன்பத்திலழுந் தாமல், பேரின்பக்கடலுள் ஆழ்தலையும், பவலோகத்தினீங்கிப் பிறக்கும் நாதாந்த நவலோகத்தினையும் வேண்டுவோர்க்கேயானெனது என்றாட்டும் ஆட்டத்துட்படும் நிலை அகலும் என்னும் ஒன்பதாவது திருப்பாடல் எல்லார் உள்ளத்திலும் என்றும் இருத்தற்குரியது.

## எ. பண்டாரக்கலித்துறை யென்னும் ஞானப்பிரகாசமாலை.

ஆறுவதாய சொக்கநாதக்கலித்துறை ஆன்மார்த்த மூர்த்திக்குச் சாத்திய மாலை. இஃது அம்மூர்த்தியே அருளாவகையால் அருள்புரியவந்த குருமூர்த்திக்குச் சாத்திய மாலை. இம்மாலை முழுதுங் கற்றுணர்வோர் முப்பத்தாறு தத்துவங்களுங் கடந்த அப்பாலைக்கப்பாலான் ஆனந்த வார்கழலே ஒப்பாக ஒப்புவித்த வுள்ளத்தராவர். அம் மந்தாரமாலையே பாடுதும் அடியோமும். அவற்றின் பிழிவு:—

குருவடி பேரார் கருவடி சேரார் (1) நண்ணினர்க்கு நல்லன் நற்குரு சங்கரன். (2) உயிரருள் கூட வுயர்த்தினன் குரு கொடி. (3) யார்க்கும் அருங்குரு எளிவந்தாண்டான். (4) நம்பாதவர்கள் முனம் பாராக்குரு. (5) குருவே சிவமெனக் குறியார்க்கே நரகு. (6) குருவாக்கியமே தரும் வீடுறுதி. (7) ஞானப்ரகாசன் நல்லடியார் என்றுன அப்பொழுதே அற்றது பிறப்பே. (8) எல்லாஞ் சிவன்செயல் இதுகுருவாணை. கரண மயக்கம் மரண துன்மார்க்கம். (9) குருவருள் எதிரே கருவிருள் உறாது. (10) எங்கும் குருவருளின்றித் துணையிலை. (11) இகழ்ச்சியும் புகழ்ச்சியும் எனைக்கலக்காத மகிழ்ச்சிசெய் குருவருள் மாய்த்தது பிறப்பை. (12) கள்ளர்க்கும் அருள்வெள்ளத்துருக்குரு வுள்ளும் எட்டுணையன் புதவும் வீடே. (13) நலமெலாம் என்குரு நாதனடியே. (14) மெய்யடியாற்கே விளங்குங் குருவருள். (15) ஞானப்ரகாசன் ஊனப்ரபஞ்சந் தானற்றுப்போக மோனத்தை அருள்வான். (16) நெஞ்சிற் கணிகுரு செஞ்சரணங்களே (17) பத்திவலைக் ககப்படுங்குருசரணம். (18) பல்விசொல் லமணப் படுசுழி தவிர்த்த நல்வியற்கமலை ஞானப்ரகாசன் சொல்லினைக் கற்றுப் பல்வியுஞ் சொல்லுமேல், புல்லிய பிறவி போக்க வேறுண்டோ? சொல்லுவீர் ஒளி நெறி செல்லாப் பித்தரே. (19) என்னையும் முத்தனுக்கிய குரு திருவுளம் என்னையோ? அறிவார் எவர்? குருமகிமை (20) தாயினுமினியன் சற்குரு நாதன். (21) ஆதாரங் குருபாதாரவிந்தமே. (22) கருவலை கடலைக்கடப்பர் குருவின் திருவடிக் கடியருட் சேரேழாமவர். (துகளறுபோதம். அகூ) (23) சற்குருபாதமே தருமுயர் வீடு. (24) குருபதேசமே குதூகலமாக்கும். வெறுப்பும் விருப்பாமெய்க்குரு மொழிசெயும். இருவினை யொப்புநற் குரு வருள் தருமே. (25) குருபூசைப்பயன் குருவாத் தோன்றிய வொருபூதர விலான் ஒருவனேயறிவான். (26) குருமொழிகேட்டதுங் கருவொழிந் தின்புறும். (27) வெறுப்பும் விருப்பும் அறுப்புறு குருவுளம் அன்பர்க் கன்றியும் வன்பர்க்கும் இரங்கும். (28) குருதிருவுளப்படி வருமவனடிமை. (29) சிவகுருவே நம் பவமறவருள்வான். (30) எவ்வுலகிலுமிணையில்லாக்

குருவின் செவ்விய திருமுன் சேருயிர் வீடுறும். (31) குருவடிக்காட்சியே பெருமகிழ்வு அளிக்கும். (32) சற்குருவாமதி தண்ணருணிலவை யுட்கொள் சகோரம் உயரடியாரே. (33) கமலைஞானப்ர காசனுந் தேசிகன், விமல மடாலய வியன்வாசலிற்போஞ், செல்வர்வாசலிற் செல்வரெஞ் ஞான்றுங், கருவா சலினுமைங் களிற்றுவா சலினும், மன்னரொடேனைய மடவர்வா சலினும், என்னகாரணத்திலும் ஏகார் மெய்யே. குருகழணிழலே வருமின்ப வீடாம். (34) குருபதம் பிரிந்தவர் கொடுந்தழற் புழுப்போல் வெருவுறு பரிவால் மெலிந்தழுங்குவரே. (35) பரிசித்தெண்ணிப் பார்த்து இன்பக் கடற்கு அரியசித்துக்களை அழுத்துங் குருவருள். (36)

இத்தகைய சாரமுள்ள இனிய குருதோத்திரப் பாமாலையை நம் குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தம்மை ஆட்கொண்டருளிய கமலை ஞானப்ரகாச சுவாமிகள் திருவடிகட்குச் சாத்திக் கண்குளிரக் கருத்து உவக்க மண்ணுய்ய வான்மகிழச் செய்தருளினர்கள். இதற்குமுன் புள்ள ஏழுநூல்களின் பயனாக இந்நூல் அமைந்து விளங்குகின்றது.

"பற்றிநின்ற பாசம் பறித்தகலவே விழித்திட்டு, உற்ற உயிர் காட்டி, உணர்வு உணர்த்தி, மற்றும் சிவப்பேறுதந்து, சிவபோகவாரி (தியுட்)புகப், பேறு அளித்த (குருவாகவந்த மகாதே)வரைப் போற்று"ம் இப் பாமாலையை என் சென்னிக்கணியாக்கிப் போற்றி அடியேனும் உய்திபெறத் திருவுளங்கொண்ட இவ்வாதீனத்து ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானமவர்கள் திருவடித்தாமரைகளை எழுமையும் மறவாதிருக்கக் கடவேன்.

அ. நவரத்நமாலை

இவ் வொன்பான் செய்யுட்களையும் மூலப்பிரதிகிடைத்துழி ஒப்பு நோக்கித் திருத்திக் கொண்டாலன்றி இவற்றின் உண்மையைப்பற்றி ஈண்டு யாதுங்கூற இயலாது. தளைதட்டினும் பிறவித்தளையைத் தட்டும் இம் மாலையின் ஈற்றுச் செய்யுளையும் ஞானப்ரகாசமாலையின் ஈற்றயற் பாட்டையும் ஒருங்குநோக்குதல் இன்றியமையாதது.

கமலை ஞானப்ரகாச சுவாமிகள் சிவசாயுச்சியம் பெற்றபின்னர், அவரது பிரிவை ஆற்றாமல், ஆவியோடாக்கை யாகமெல்லாம் துன்பப் பெருக்கைத் தோற்றும் வண்ணம் உருகி வருந்திப் பாடியவை எனல் விளங்குகின்றது.

அடைந்த அக்குருமூர்த்திகள் இம் மாலையைப்பாடிய பெருமானைக் குருவாரந்தொறும் வழிபடவருக எனப் பணித்தருளினர்கள் என்றும், அவ்வாறு சென்று வழிபட்டுவருங்கால், ஒரு குருவாரத்திலோ வேறொரு வாரத்திலோ இவர் தரிசிக்கச்சென்ற வேளைக்குச் சிறிது முன்பாக, திருமேனியை மெய்யன்பர்க்கென்று போகட்டுச் சிவமானார்களென்றுங் கருத இடனுண்டு.

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுராதீனத்தின் சிறப்புக்களையும், ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதிகுருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளுடைய திருவருட்பெருமைகளையும், அப் பரமாசாரியருக்குப் பின்னர், வீற்றிருந்து அருளரசுபுரிந்த குருமகாசந்நிதானங்களின் மகிமைகளையும்என் தந்தையாரிடத்தும் வேறு புலவர் சிலரிடத்தும் கேட்டுணர்ந்த அடியேன் தருமபுராதீனம் எங்கே நாயடியேன் எங்கே என்று கருதி, எட்டாத் தேனுக்குக் கொட்டாவி விட்டிருந்தேன். இருந்த அடியேனை ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகளும், திருப்பனந்தாள் காசிமடாலயத்தின் தலைவராக வீற்றிருந்தருளும் ஸ்ரீ-ல-ஸ்ரீ அருணந்திதம்பிரான் சுவாமிகளவர்களும் அடியேனை இங்குறும் வண்ணம் செய்தருளினார்கள் இருபத்துநான்காவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகளவர்கள் அருளரசு நிகழ்காலத்தில் புகழ்தற்கரிய பெருஞ்சிறப்புடன் நடைபெற்ற அக்குருமூர்த்திகளுடைய பத்தாண்டாட்சி விழாவில் அப்பெருமானார் அடியேனையும் இத் தருமபுராதீனத்துப்புலவனெனத் திருவருணோக்கஞ்செய்து ஆட்கொண்டருளினார்கள்.

இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி அரசு புரிந்தருளும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமண்ணிய தேசிக** ஞானசம்பந்த பரமாசாரிய **சுவாமிகள் அவர்கள்** திருமுன்னின்று முறைப்படி வணங்கித் திருவருட் பிரசாதம் பெற்றுத் தொழுதணிந்துகொண்டு,

“முன்னளவின் மாக்களுக்கு முத்தி கொடுத்தஅருள்
என்னளவிற் சும்மா இருப்பதேன் —முன்னளவில்
சீர்பெற்ற நேயன் திருவருளொத் தாசையின்றி
ஆர்பெற்றார் சொக்கநா தா”

என்றும்,

“தாரா அருளொன் றின்றியே தந்தாயென்றுன் றமரெல்லாம்
ஆரா நின்றார் அடியேனும் அயலார்போல அயர்வேனோ
சீரா ரருளாற் சிந்தனையைத் திருத்தியாண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை வைக்கவேண்டும் பெருமானே”

என்றும் வேண்டி மீண்டும் வணங்கி மகிழ்ந்தேன். குருமகாசந்நிதானம் அவர்கள் பழவடியேன்பாற் பெருங்கருணைத் திருநோக்கம் புரிவது வழக்கமாதலாலும், "மகவருத்தஞ் சற்றுந்தரியாத தாயா" யும் மைந்தரை மகிழ்ந்து காக்குந் தாதையாராயும், அடியரை அருளி யாட்கொள்ளும் சொக்கலிங்கப் பெருமானாகியும் வீற்றிருந்தருளுதலாலும், தருமையாதீனப் புலவர் கூட்டத்துள் ஒருவனென்ன இருத்தலாலும் ஆதி குருமூர்த்திகளான ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் உலகுய்ய அருளிச் செய்த சாத்திரமும் தோத்திரமுமான எட்டுப்பனுவல்களை ஒருங்கு சேர்த்து, '**பண்டாரசாத்திரம்**' என்ற திருநாமஞ் சூட்டி, அச்சுப்பொறியில் ஏற்றுவித்து, சைவநன்மக்கள் கரத்திலுஞ் சிரத்திலும் கருத்திலும் அறிவிலும் வைத்து உய்யும்வண்ணம் செய்தருளிய இறைவன்றன் எண்குணம்போலும் எட்டு ஞானநூற்கும் மூன்னுரை எழுதித்தருக என்று திருக்கண்ணோக்கஞ் செய்து அருளாணை அளித்தருளியாட்கொண்டார்கள்.

அவ்வியாக்கியையை அடியேனை ஆட்கொண்ட பரையாக் கொண்டு போற்றி, அடியேன் சிற்றறிவிற்கேற்ற அளவு, குருமகா சந்நிதானம் அவர்கள் நியமனத்துக்குத்தக்க முறையில், வேற்று நூல் களில் உள்ள மூன்னுரைக் கெல்லாம் பின்னுரையென்னவும் என்னுரை என்னுரை யென்று அடியேனும் வெறுத்துக் கொள்ளவும் எழுதத் துணிந்தேன். அடியேனுக்குத் துணிவு ஏது? சுதந்திரகீனம் ஆன்மாக்களுக் கெல்லாம் பொதுவன்றோ? ஸ்ரீ சொக்கலிங்கமூர்த்தியின் திருவருள்தான் அடியேனைக் கொண்டு எழுதிற்று.

" தருமையம் பதிவாழ்க ஞானசம்பந்த சற்குரு வாழ்க செந்
திருமகட்கினி தாமடாலயம் செவ்விதின் திகழ்ந் தொளிர்கவே
பெருமைகட் குறைவிடமெனத் திகழ் பீடமிக்க சொக்கேசனே
அருமைமானுட வடிவினுற் றெமையாண்ட தேசிகன் வாழ்கவே".

"சீலத்திரு சுப்பிரமண்ணிய தேசிக யாமணி சேவடி மாமலரே
ஞானத்தினை மூன்னைய நன்னெறியில் நாட்டங்கொள வைத்து நலம்புரியும்
கோலத்திலுங் கொள்கையிலும் புகழே குலவுஞ் சிவபத்த ரெவர்க்குமுளம்
ஏலத்திருவோங்குமெனப் புகல எள்ளத்தனை யையமுமின்றிவணே".

இங்ஙனம்,

தருமபுரம்,
26—5—'48

தருமபுராதீனத் தமிழ்ப்புலவர்,
**வித்துவான், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்,**
தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்தரப்பள்ளி, ஆரணி.

நூலாசிரியர்:–

## ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

செந்தமிழ் வளரும் தென்றலின்பமும் மூக்துறநுகர, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானால் மன்னர் மன்னனாக மணிமுடி தாங்கிச் சவுந்தரபாண்டியன் எனும்பேர் சார்ந்து ஆளப்பெற்றதும், தமிழ்நயம் தெரிந்து சைவம் காத்த பெரும்புனல் வையைத் திருவளம் பெருக்கும் சிறப்புடையதும் ஆகிய பாண்டியநாட்டிலே 'மின்னார் தடமதில்சூழ் வில்லி புத்தூர் என்றொருகால் சொன்னார் கழற்கமலம் சூடினோம்' என்று தன் பெயர் கூறவே பேரின்பமும், பெறுபயனும், தெய்வத்தன்மையும் அளிப்ப தாகிய வில்லிபுத்தூரிலே, தாளாற்றித் தந்த பொருளெல்லாவற்றினையும் தக்கார்க்கு வேளாண்மை செய்யும் சிறப்பு வாய்ந்ததும், மன்னன் செங் கோலையும், தன் ஏர்க்கோல்வழி நடாத்தும் மாண்புவாய்ந்ததும், வானம்தந்த மழைப் பயன் கொண்டு வாரிபெருக்கி வளம்பல செய்து தானமும் தவமும் தடையின்றி நடக்கச்செய்யும் பெருமைசேர்ந்ததுமாகிய கார்காத்த வேளா ளர் குடியிலே, "கற்றல் கேட்டலுடையார் பெரியார்" என்னும் ஞானநூற் சொற்றொடரைப் பெருவரம்பாகக்கொண்டு, சமயசாத்திர நுணுக்கங்களை நன்கு கற்றுக் கேட்டுத் தெளிந்து நற்றவச் செல்வராய், சிவபூஜை தியா னம், சிவாலய வழிபாடு முதலியவைகளைச் செவ்வனே செய்துவருகின்ற சுப்பிரமணிய பிள்ளை என்கின்ற ஞானச் செல்வர் ஒருவர் இருந்தார். அவருக்குப் பண்டைநற்றவத்தால் இல்லறப்பண்பு எல்லாம் ஒருங்குவாய்ந்த நற்குடிப்பிறந்த மீனாட்சியம்மை என்னும் கற்பிற் சிறந்த பொற்புடை நங்கை நல்லாழ் கூட்ட இல்லறத்துணைவியாயினர்.

இவர்கள் இருவரும் இல்லறத்தையே இம்மை மறுமை இரண்டும் தரும் நல்லறமாக நடத்திவந்தனர். இவர்கள் சிந்தை எப்பொழுதும் சிவத்தினிடமே சேர்ந்திருந்தமையால் இவர்கள் செய்யும் புண்ணியங்கள் யாவுமே சிவபுண்ணியங்களாயின. அத் தவத்தின் மிகுதியால் சிவ ஒளி திகழும் தவநிறை குமரர் அவதரித்தார். பிறந்தநாளோ இறைவனுக்கு உகந்த திருநாளாகிய சோமவாரம். செல்வச் சிறுவரின் முகவொளி பெற்றோர் மனதைக் கவர்ந்ததென்பது ஒரு வியப்பன்று. குழவியைக் காணவந்தவர்களுள் தெய்வவொளிதிகழும் சிறுவரென்பார் சிலர். உலகம் உய்யப் பல கலை நிறைந்த பாலரென்பார் சிலர். இங்ஙனம் வருங்கால நிகழ்ச்சியைக் குறிப்பாலுணர்த்தும் திருமேனியைக் கண்டு பலரும் வியந்து

பாராட்டுவாராயினர். கண்டவர் மனதை வசீகரிக்கும் கருணைக் குழந்தையின் பெற்றோர் மனம் பேரின்ப வெள்ளத்து ஆழ்ந்தமையைப்பற்றி அறிவிக்கமுடியுமோ? வளர்ச்சிக்காலத்துத் தளர்நடை நடத்தல் சிறுதேருருட்டல் சிறுபறை கொட்டல் முதலிய பிள்ளைப்பருவ விளையாட்டுக்கள் யாவும் உரியகாலத்தே நிகழ இளமைப்பருவத்தின் ஐந்தாம் பருவத்தை அடைந்தார். பக்குவமறிந்து மார்ச்சார நியாயத்தால் வலியவந்து ஆட்கொள்ளும் பரமாசாரியனைப் போலக் கல்வி ஞானமும் இவரை வந்து ஈண்டின. இருமொழிப் புலமையும் ஒருசேர எய்தின. உலகத்து வினை வயத்தானெழுந்த பிறப்பொன்று. பண்டை நற்றவத்தால் உலகிற்கு நல்வழி காட்டவந்த பிறப்பு மற்றொன்று. வினைப்பிறப்பு கல்வி ஞானத்தையும் கூட மிகுந்த உழைப்பாலுறும்; உற்றதையும் மறக்கும். அருட்பிறப்பைக் கல்வி ஞானமும் தாமே வந்தடைந்து பெருமை எய்தும். இவர்கள் பிறப்போ உய்விக்கவந்த பிறப்பு. ஆதலால் கல்வியிற் சிறந்தோர்களென்பதில் வியப்பொன்றுமில்லை. இவ்வாறாக ஞானச் செல்வர் பதினாறும் ஆண்டினை அடைந்தார். தாய் தந்தையர்களும் கல்வி கேள்விகளிற் சிறந்த மகனைத் தம்மிற்றம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதாம் என்று எண்ணி எண்ணி மகிழ்ந்திருந்தனர்.

அப்பொழுது தமது ஆன்மார்த்தமாகிய **ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானை** வழிபடவேண்டும் என்ற பெருவிருப்பம் தாய் தந்தையர்கட்கு உண்டாயது. தமது அரும்பெறற் செல்வரையும் அழைத்துக்கொண்டு மதுரையம்பதியை அடைந்தனர். புலவர் தலைவராயிருந்து புலவரைப் போற்றிய பெருமானை — வாதவூரடிகளை வழியடிமைகொண்ட வள்ளலாய் — வேதத்திற்குப் பொருளருளிய விழுமிய தலைவனை — முப்பொருளுண்மைகளையும் முத்திநிலையையும் உணர்த்திய முதல்வனையுள்ள சோமசுந்தரக் கடவுளையும், தமிழ்நாட்டுத் தனியரசியாய் — கடைக்கண் கொழித்த கருணைப் பெருவெள்ளத்து மூழ்கும் அடியார் பிறவிப்பிணிக்கு ஓர் மருந்தாய் — மலையத்துவசன் பெற்ற பெருவாழ்வாயுள்ள மீனாட்சியம்மையாரையும், வணங்கிக்கொண்டு சிலநாள் அங்கு வதிந்தனர். காலந்தவறாது வழிபாடு செய்துவந்தனர். அப்போது கண்ணுதற்பெருமான் கடைக்கண்பெருவெள்ளம் ஞானசம்பந்தர்மீது பாயத்தொடங்கிற்று; சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது. தெய்வக்கலை மேன்மேலும் விளங்கத் தொடங்கிற்று. அதனால் இல்லத் தொடர்பு மெல்ல நழுவிவந்தது.

தாய் தந்தையர்களோ இல்லறப்பற்று இழுக்க வில்லிபுத்தூர் செல்ல விரைந்தனர். சமயமுறைப்படி கோயிலுக்குச்சென்று பொற்றாமரையில் நீராடி விடையேறும் பெருமானிடம் விடைகொண்டனர். வீடு திரும்புகிறவர்கள் செல்வக் குமாரரை — ஞானசம்பந்தரை வீட்டுக்கழைத்

தனர். குமாரர் மனமோ நிலைத்த குறிக்கோளில் நிலைத்திருந்தது. தந்தையார் அழைப்பு செவி புகவில்லை. மீட்டும் மீட்டும் வற்புறுத்தி அழைத்தனர். சிவஞானத்தேனரும்பு சிந்தையாராகிய ஞானசம்பந்தர் "என்னுயிர்த் தந்தையும் தாயும் இவ்வாலயத்தில் இருக்கின்றார்களே; இவர்களை விட்டு எங்ஙனம் நீங்குவேன்; எப்படி வருவேன்; உடற்றந்தையாகிய உங்களொடு எனக்கு உறவில்லை" என்றுரைத்தனர். இதைக் கேட்ட தாய் தந்தையர்கள் மனங்கலங்கினர். ஞானசம்பந்தர் சாத்திர தோத்திரவாயிலாகப் பல பல சமாதானங்கள் சொல்லித் தேற்ற, ஒருவாறு தேறிச் செல்கின்றவர்கள் தமது செல்வர் சிவஞானப்பெரியாராக—சமயம்வளர்க்கும் நல்லவராக ஆகக்கூடுமென்ற எண்ணமானது அவருடைய நிகழ்சியாலும் திருவருளாலும் மனத்துள் தோன்ற மட்டற்ற மகிழ்ச்சியோடு இல்லம் அடைந்தனர்.

பின்பு ஞானசம்பந்தர் விதிமுறை வழிபாடாற்றிப் பல நாள் மதுரையில் வசித்துவந்தனர். ஒருநாள் விடியற்காலையில் பொற்றாமரைத் தடத்து நீராடச்சென்றனர். அங்கு திருநீறும் கண்டிகையும் திகழ்தரு மேனியோடு வடக்கு நோக்கியிருந்து சிவலிங்கத் திருமேனியை தம்முன் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு பல அடியார்கள் தன்வசமற்று நாக்குழற, உரை தடுமாற, கண்ணீர் வாரச் சிவபூஜை செய்துகொண்டிருத்தலைக் கண்ணுற்றார். தாமும் அவ்வாறு சிவபூஜை செய்து சிவானந்தத்துள் திளைத்திருப்பது எந்நாட்கூடுமோ என்று எண்ணிக்கொண்டே ஒரு விருப்புமின்றி வழிபாடு செய்துவரும் அவர் அன்று சொக்கேசர் திருமுன்பு "தேவரீருடைய அருட்டிருமேனியைவைத்து அருச்சிக்கும் பேறு எனக்கும் இப்பிறவியில் கிட்டுமா?" என்று வேண்டிநின்றனர். நெடுநேரஞ்சென்று அந்தக் குறைமனத்தோடு வீடுசென்று அன்றிரவு துயில்கொண்டனர். குறை முடித்தருளும் நிறைசெல்வச் சொக்கர் அவர் கனவில் எழுந்தருளி "ஞானசம்பந்த! நீ விரும்பியவண்ணம் நாம் சிவலிங்கத் திருமேனி கொண்டு பொற்றாமரைத் தடாகத்தின் ஈசானமூலையிலே கங்கைக்குளிருக்கின்றோம்; காலையில் அங்குச் சென்று மூழ்கி எம்மைப் பூசிப்பாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினர். ஞானசம்பந்தர் இறைவன் அருட்செயல் இருந்தபடி என்னே! எளிவந்த கருணையால் அடியேனையும் ஆட்கொண்டனரே; இதனைக் காட்டிலும் இப் பிறப்பில் எளியேனெய்தும் பேறு வேறுண்டோ; என்று எண்ணி எழுந்து ஆனந்தக்கூத்தாடித் தோத்தரித்த வண்ணமே விடியுமளவை எதிர்நோக்கினர். அவர்கள் உள்ளத்தின் விரைவு விடியலை நெடிதாக்கி விட்டதாகத் தோன்றிற்று. விடியல் நீள, விழைவு பெருகுகின்றது. விடிந்ததும் நாட்கடன் முடித்து நீராடப் பொற்றாமரைக்குச் சென்று நீராடி இறைவனுணர்த்திய இடத்தில் இறங்கி

மூழ்கித் தேடினர். அப்போது இறைவன் சிவலிங்கத் திருமேனிகொண்டு பெட்டகக் கோயிலோடும் இவர் கரத்திலெழுந்தருளினார். உடனே ஞான சம்பந்தர் கரையேறிப் பெட்டகத்தைத்திறந்து சிவலிங்கத் திருமேனியைக் கண்டு சிந்தைநிறைந்த மகிழ்ச்சிக்கடலிற்றிளைத்து, ஆனந்தக் கூத்தாடி, சந்நிதியை அடைந்து, சொக்கநாதப்பெருமானை வணங்கிக் "கண்ணுக் கினிய" என்னும்பாடலை முதன்மையாகக்கொண்டு பதினொரு பாடல்களைக் கொண்ட கலித்துறையை ஆக்கி அருளினார்கள். அதில் ஆன்மவியல்பை எடுத்துக் கூறிச் சொக்கநாதப்பெருமானை நோக்கி "நீ பூரணவாரியுள்ளே நண்ணும்படி செய்; நின்னைப் பாடும்படி செய்; நினைந்தேத்திப் பணிந் தெழுந்தே ஆடும்படி செய்; மலமைந்தும் வீடும்படி செய்" என வேண்டு கின்றார். மற்றும், "ஏருத விண்ணப்பம் கூறுகின்றேன், அஃது ஏதெனில்" எனத் தொடங்கிச் சொக்கநாதர் திருச்செவியில் ஏற்றிய வரந்தான் இன்றைக்கும் என்றைக்கும் சொக்கலிங்கத் திருவுருவிடை இறைவன் இருந்து அருள் வழங்கி நிற்கும் அருளாற்றலாகும்

இவ்வண்ணம் சொக்கநாதப்பெருமானை வழிபட்டு எழுந்தருளி இருக்கின்ற வேளையிலே சிவலிங்கப்பெருமானைப் பூசித்தற்குரிய விதிமுறை களையும் சிவஞானோபதேசத்தையும் ஒரு ஆசாரியன் வாயிலாகவே அடைய வேண்டுமென்று சொக்கநாதர் திருமுன்பு சென்று வேண்டினார். கருத் தறிந்து முடிக்கும் கண்ணுதற்பெருமான் அன்றிரவு வழக்கம்போலக் கனவிற்றோன்றி "ஞானசம்பந்த! நமது உபதேச பரம்பரையில் வந்த கமலை ஞானப்பிரகாசரிடம் நீ விரும்பியவற்றைப் பெற்றுப் பூசித்து வருக" என ஆணைதந்தனர். அவ்வாறே திருவாரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றி "வருகிற சோமவாரத்தன்று உன்னிடம் வருகிற நமது ஞான சம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம் செய்து சிவலிங்கபூசையும் எழுந்தருளப்பண்ணிக்கொடுக்க" என்று கட்டளையிட்டனர்.

ஞானசம்பந்தர் விடியலெழுந்து சொக்கலிங்கத்திருவருள் இருந்த படியே திருவாரூர் செல்லத்தொடங்கி, திங்கட்கிழமை காலை திருவாரூரை அடைந்தனர். கமலாலயம் என இப்போது வழங்கும் வேததீர்த்தத்தில் நீராடி "இன்றுதானே பெருமான் அருளிய இனிய நாள்; குருநாதன் தரிசனம் கிடைக்கும் பெருநாள்" என்று எண்ணிக்கொண்டே திருக் கோயிலை வலம்வந்தனர். இவ்வாறே சொக்கலிங்கப்பெருமான் ஆணை தாங்கிவரும் அருந்தவச் சீடர் கிடைக்குநாள் இதுவே என்று திருவாரூர்ச் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தித் திருமுன் கமலை ஞானப்பிரகாசர் சிவ யோகத்தினிதமர்ந்திருந்தனர். அப்போது வலம்வருகின்ற ஞானசம்பந்தர் ஈனமல இருள் நீக்கும் ஞானபாநு இவர்தாம் என்பதையறிந்து காந்தங் கண்ட இரும்புபோல் விரைந்துசென்று திருவடிகளில் விழுந்து வணங்கி

ஒருபக்கத்தொதுங்கி நின்றார். அப்போது ஞானப்பிரகாசதேசிகர் அபய அத்தங்கொடுத்து, தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே இருக்கப்பணித்து, திருவருள்நோக்கஞ் செய்து ஞானதீக்ஷை புரிந்து பூஜையை எழுந்தருளப் பண்ணிக்கொடுத்தனர். ஞானசம்பந்தர் தமது குருநாதன்மேல் பண்டாரக் கலித்துறை என்னும் ஒரு நூலியற்றித் தோத்தரித்தனர். பின் தமது ஆன்மார்த்த மூர்த்தியின்மேல் சொக்கநாத வெண்பாச் சொல்லித் தோத்தரித்தனர்.

இவ்வாறு குருவழிபாடும் இறைவழிபாடும் இயற்றிக்கொண்டு திருவாரூரில் எழுந்தருளியிருக்கும்போது ஒருநாள் மாலைக்காலத்து, கமலை ஞானப்பிரகாசர் திருக்கோயில் வழிபாட்டிற்காகச் சென்றவர்கள் அர்த்தயாமம் ஆகும்வரையில் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்தமர்ந்திருந்தனர். அர்த்தயாமம் ஆனதும் வீட்டுக்குத் திரும்புகையில் கைவிளக்குக்காரன் தூங்கிவிட்டமையால் ஞானசம்பந்தர் தாமேசென்று கைவிளக்கை எடுத்துக்கொண்டு உடன்வர குமரகோயில் பின் தெருவில் உள்ள தமது இல்லத்திற்கு எழுந்தருளினர். வீட்டுக்குட் செல்லுகின்ற ஞானப்பிரகாசர் தமதுசீடரைநோக்கி "நிற்க" எனப்பணித்துச் சென்றார்கள். குருவாணை நிற்க என்பதாமோ, என்று எண்ணிய அவர்கள் நின்ற இடத்திலேயே சிவயோகத்தமர்ந்து சிவானந்த இன்ப நிலையில் மூழ்கி இருந்தனர். அன்றிரவு பெருமழை பெய்தது. பெய்தும் திருமேனியில் ஒரு துளிகூட விழவில்லை. ஒருகோல் சதுரத்தில் சுற்றிப் பெய்திருந்தது. விடியலில் விழித்து இல்லம் விளக்கவந்த ஞானப்பிரகாசருடைய மனைவியார் கைவிளக்கேந்தி ஞானசம்பந்தர் நிற்பதையும் மழையின் நிலையையும் அறிந்து வியந்து உள்ளேசென்று தம் கணவர்க்கு உணர்த்தினார்கள். வெளிப்போந்த ஞானப்பிரகாசர் இவர்களது அதிதீவிர பக்குவநிலையை அறிந்து "அப்பனே! உன்னாற் பல ஆன்மாக்கள் பல்லூழிக்காலம்வரை ஈடேறத் திருவருள் துணைநிற்கின்றது. ஆதலால் வடக்கே சென்று உபதேசவாயிலாக உண்மையைப் பரப்புக; சித்தாந்த சைவச் செந்நெறியை நிலைநிறுத்துக" என்று ஆணைதந்தனர். அதனைக்கேட்ட இவர்கள் மனம்பதைத்துத் "தேவரீரைவிட்டு எவ்வாறு பிரிந்திருப்பேன்; எருதுக்கும் பொதிக்கும் இச்சை உண்டோ; எனக்கும் உடற்கும் அப்படியே; ஆதலால் பரமாசாரியர் பணித்தபடியே நடக்கக் கடமைப் பட்டவன்" என்று வருந்தி நிற்கின்றபோது, "நமக்கு மிக அணிமையில் உள்ள சித்திக்ஷேத்திரமாகிய தருமபுரத்தையடைந்து ஆண்டுத் தங்கி அருள் வழங்குக" என்று ஆணைதந்து அனுப்பினர். தெளிவு குருவின் திருவார்த்தையைக் கேட்டலாதலின் ஆசிரியர் ஆணைப்படி தருமபுரம் வந்து அருள் வழங்கி அமர்ந்திருந்தனர். தமது சிவானுபவங்களையெல்லாம்

செறித்துப் பெரும் பொருளடங்கிய சிறு நூலாக—சிந்தை தெளிவிக்கும் தெளிதேனுக உள்ள சிவயோகசாரத்தையும், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவலையும அருளிச்செய்தனர்.

இவர்கள் இவ்வாறு ஞானபானுவாய் எழுந்தருளியிருக்குங் காலையில் சிதம்பரத்திலுள்ள கண்கட்டி மறைஞானபண்டாரம் எனபவர் ஒரு கல்விமானுக விளங்கிவந்தார். அவர் ஆகமசாத்திரங்களிலும் சைவப் பெருநூல்களிலும் தக்கபயிற்சியும் அநுபவமும் உடையவராயிருந்தார். ஆனல் அவருககுத் திருவருள்விலாசம் பதியவேண்டிய நிலையிலிருந்தது. அதனல் அவருடைய அநுபவமானது ஆன்மாவிற்கே இயற்கையாக ஆனந்தம் உண்டென்றும், அது மலத்தாற் தடைப்பட்டிருக்கிறதென்றும், தடைநீங்க வெளிப்படும் ஆநந்தத்தை ஆன்மா நுகருகிறதென்றும், சிவனைஒப்ப ஆன்மாவுஞ் சச்சிதாநந்தரூபி என்றும், அதுவே முத்திநிலை என்றும் உணர்ந்து முத்திநிலை என்றதொரு நூலையும் அருளச்செய்தது. மக்கள் பலரும் இக் கொள்கையை இவருடைய கல்வி வல்லமையாலும் சொல்லுந் திறத்தாலும் பசிநீங்கக காணும் இன்பம்போல மலம் நீங்கக் காணும் மகிழ்ச்சி என்ற முறைமையின் எளிமையினுலும் கடைப்பிடித்தனர். இதனைத் திருவுளம்பற்றிய இந்குருமூர்த்திகள் மக்கள்மேல்வைத்த பெருங்கருணையினல் ஆன்மாவுக்கு ஆநந்தம் இயற்கையல்ல வென்றும், திருவருட்பதிவால் மலமநீங்கச் சிவாநந்தத்துத் திளைக்கும் பேறே முத்தி என்றும், ஆன்மா சத்சித்ரூபியே சிவம் சச்சிதானந்தரூபி என்றும், ஆன்மாவிற்கு உளதாகும் ஆநந்தம் இறைவனிடத்திலிருந்து பெற்ற பேறே என்றும் முடிந்தமுடிபாக இருபததிரண்டு வெண்பாக்களாலாகிய **முத்திநிச்சயம்** என்னும் அநுபவ ஞான நூலை ஆக்கியருளினர்கள்.

இவ்வாறு பலநாள் அரன்பணி அறப்பணி ஆற்றி ஆனந்த பரவசர், சச்சிதானந்தர், மருதூர் ஆபத்துத்தாரணர் முதலான சீடர்களுக்குச் சிவஞானேபதேசம் செய்து எழுந்தருளியிருக்கும் காலத்து, சிவயோகசமாதியில் எழுந்தருளத் திருவுளங்கொண்டு தீவிரதரபரிபக்குவ ராகிய ஆனந்தபரவசரை ஞானபீடத்தில் எழுந்தருளுவித்துத் தாம் விரும்பியவண்ணம் சிவலிங்கத்தினடியில் அயர்ந்தார்கள்.

ஆனந்தபரவசர் கனிந்த கனியாயிருந்ததால் அவர்களும் தமது ஞானமூர்த்தியின் திருக்கோயில் மேல்பால் சிவயோகத்திலமர்ந்தனர். இதனை அடியார்கள் விருப்பப்படித் திருவுளத்தடைந்த குருமூர்த்திகள் அவிச்சின்ன சத்சம்பிரதாயம் உலகில நீடுவாழ எண்ணி, சிவயோகத்தினின்றும் வெளிப்போந்து சச்சிதானந்தருக்குச் சிவஞானங் கைவரப் பூண்ணி வைகாசிமீ அபரபக்க சப்தமிதினத்திலே சிவசமாதி கூடினர்கள்.

இவர்கள் குருவாகிய கமலை ஞானப்பிரகாசரைப்பற்றிய, சதாசிவ தேவ மகாராயர்காலத்தில் அவர் பிரதிநிதியாகத் தஞ்சையையாண்ட கிருஷ்ணதேவராயர் பெண்வயிற்றுப் பேரனை கிருஷ்ணமகாராசையன் ஆணைப்படி வெட்டுவித்த கல்வெட்டொன்றில் "சிக்கல் வடகுடி ஓடாச் சேரி முதலிய தேவதானங்களுக்குத் திருவாரூர் ஞானப்பிரகாச பண்டா ரத்தை, கணக்கு எழுத்தும் பரதேசிமுத்திரையும் அடைத்துக் கொள்ளும் படிக்கு உத்தரமளிக்கிறது" எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இச்சாசன காலம் கி. பி. 1561. அன்றியும் கமலை ஞானப்பிரகாசரியற்றிய மழுவாடிப் புராணத்துச் செய்யுளாகிய இது,

தழுவிய கலியு கஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்
றழிதரு மெண்பத் தேழான் டொழிந்தபின் குரோத னண்டின்
மொழிதரு மாசித் திங்கள் முற்பக்க முதனாள் தன்னின்
மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் தமிழி னாலே.

சாலிவாகன சகாப்தம் 1488 என்று தெரிவிக்கிறது. இவ்விரு ஆதாரங் களும் ஞானசம்பந்தர் காலம் 385. ஆண்டுகட்கு முன்னர் என்று துணிய இடந்தருகின்றன.

இங்ஙனம் திருக்கயிலாய பரம்பரையில் அவிச்சின்ன சத்சம்பிர தாயியாகிய இந்தக் குருமூர்த்திகள் தன்னடைந்தார்க்கு ஊனுடைப் பிறவிக்கானது அழலாக முத்திரைசெய்த ஓர் ஞானவாரணம் நல்கும் பெருமானுக — ஞானவாரமுதபானமதருந்திக் கருவிகள் கழன்று பரவச மாகிப் பரமானந்தப்பரவையுட் படிந்து பேராவியற்கை பெற்றினிதிருப்ப ஆரா இன்பமளித்தருள் அண்ணலாகத் திருக்கோயில் கொண்டெழுந்தருளி இருக்கின்றார்கள் என்பது ஏனைய குருமூர்த்திகளது சமாதித்தானங்கள் போலாது இவர்களுடைய கோயில் ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயம் என்ற திருநாமத்தோடு சகல ஆவரணபரிவாரங்கள் சூழ விளங்கிவருவதாலும், நித்திய பூஜையோடு பிரமோற்சவ பக்ஷோற்சவங்கள் இடையறாது நடை பெற்று வருவதாலும் அறியக்கிடக்கின்றது. இது கண்கண்ட தெய்வமாக விளங்குகின்ற ஸ்ரீ குருஞானசம்பந்தருடைய திருக்கோயிற்குள்ள தனி மாண்பாகும்.

உ

குருபாதம்

வேதாவு மாலுமறி தற்கரிய மூர்த்தியா
மெத்திய சிவாநுபவமே
மேற்கொண்டு சிறிதுமிப் புவியொழ் வெறும்பொய்யை
மெய்யென மயங்குறுதே
நாதாதி பாசங் கழன்றுவாழ் சல்லாப
நல்லோர்கள் சங்கமொருபால்
நவிலுமொழி குழறநய னங்கள்புனல் சொரிய
நங்கள்குறை தீரென் றுநின்
றேதா வுளங்கரைந் தலறிக் கிடந்துருண்
டோலமிடு மன்பரொருபால்
ஒருவருக் கொருவரடி மைத்திற முரைத்துரைத்
துருகுமடி யவர்களொருபால்
கர்த்தர் பணிக்குழைய ஞரின் ஞானப்ர
காசன் றருந்தருமெழிற்
கமலா புரந்தங்கி வருஞான சற்பர்த்த
கருணாக ரன்சமுகமே.

— வெள்ளியம்பலவாணர் சுவாமிகள்.



His Holiness Sri-la-Sri Subramanya Desika Gnanasambanda Paramacharya Swamigal

25th in the Holy Line of Dharmapuram Adhinam.

திருச்சிற்றம்பலம்

# குருவணக்கம்

கிடந்தாலு ஞானப்பிர காசனென் பேன்கிடந் தேளழுந்து
படர்ந்தாலு ஞானப்பிர காசனென் பேன்பசி யோடுபிணி
அடர்ந்தாலு ஞானப்பிர காசனென் பேன்அந்த அந்தகனூர்
தொடர்ந்தாலு ஞானப்பிர காசனென் பேன்பினைச் சொல்இல்லையே.

வான்பார் கமலைத் திருஞான சம்பந்த மன்னனெங்கோன்
ஊன்பார் உடற்பவ நீக்கிட வோமொழி யோர்வசனம்
தேன்பாகு கற்கண் டிளநீர் வளைமுறி சீனிகன்னல்
ஆன்பா லினுந்தித்தித் தூற்றுப் பெருகல் அதிசயமே. (உ)

---

1. I call out Jnanaprakas when I lay me down:
I call out Jnanaprakas when I rise and move about
I call out Jnanaprakas alike when I suffer from hunger and sickness
So also will I call out Jnanaprakas when the pangs of death are on me
Beyond that, there is no other word.

2. Thiru Jnanasambandha, our King who liveth in Kamalai Famed for its glory as far high as Heaven!
Is it too much for you to free me from this worldly existence?
May a word from thy holy lips flow like a spring in my heart.
With melody far sweeter than honey, jam or crystal sugar,
The water of the green cocoanut, the juice of the chalice and the milk of the cow?
That shall indeed be a romance in my life,
A mystery not yet experienced.

அறியாமை நிற்கும் அதீதத்தி லேசென் றறிவொடுநான்
அறியாமை தோன்றநின் றேநின்றளவில் அவிழ்ந்துநிற்க
அறியாமை யிற்பெறு பேறிழந் தேனினி யாகினுநான்
அறியாமை தீர அருள்ஞான சம்பந்த ஆரமுதே.

கருணைக ரன்புக ழாகரன் எங்கள் கமலையில்வாழ்
திருஞான சம்பந்த தேசிகன் சொற்படி சென்றுநிற்க
ஒருநாள் நிகழ்ந்தது சொல்லவற் றேநின் றுயிர்ப்பறவே
தருகாயம் இன்றியொர் ஆநந்தம் எங்குந் தலைப்பட்டதே,

---

3. Having attained the stage that transcends finite
Knowledge I stood lost in mystic thought displaying
My ignorance, when, Lo! loosened from its tie
It disappeared and true light shone in me,
O Teacher of wisdom pure! Give me the higher
Knowledge and this very instant cast away the
Sins that cloud me with ruin and despair.

4. My life was moulded on lines shown and taught by Him
Who is an ocean of Grace and Fame, who lives in Kamalai
Crowned in Divine Glory, whom all adore aa Jnanasambandha,
Shall I speak out an incident that happened
But once in my life? My senses failed, my body was
Reduced to naught and breath departed therefrom;
And I found myself wrapped in raptures pure.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிய

# சிவபோக சாரம்

### உரைப்பாயிரம்

திருச்சிற்றம்பலம்

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங் கோருவர்க் கிரங்கிநின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர் நெறியளித்தோன் நின்றகோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோது மோசைகேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லு மிழலையாமே.

திருச்சிற்றம்பலம்

எண்ணருந் தவத்தான் இறையருளெய்தி நண்ணரு மின்பம் நணுகிய பெரியார், "தாம்பெற்ற இன்பம் பெறுக விவ்வையக" மென்றெழுந்த பெருங்கருணையானே உலகினர்க்கு உறுதியுரைக்கும் முறைமைதான், நூல்வழிபற்றி அளவை நெறியான் மெய்ப்பொருளுணர்த்தலும், தம் மநுபவ நிலைபற்றி உபதேச முறையான் மெய்ப்பொருளுணர்த்தலு மென்றிருவகைத்து. அவற்றுள் நூல்வழிபற்றியுரைத்தல் மந்தஉணர்வுடையாரை நோக்கியும், அநுபவநிலைபற்றி யுரைத்தல் தீவிரவுணர்வுடையாரை நோக்கியுமாம். ஆகவே, நூல்வழிபற்றிக்கூறுங்கால் பிரமாணம் இலக்கணம் என்னு மிரண்டானும் பொருளுண்மையும் பொருளியல்பு மாகிய பொதுவியல்பெனப்படும் பெத்தநிலையும், சாதனம் பயன் என்னும்

இரண்டானும் அணையுநெறியும் அணைதற்றன்மையுமாகிய உண்மையியல்பெனப்படும் முத்திநிலையுங் கூறப்படும். அநுபவநிலைபற்றிக் கூறுங்கால் முன்னைய இருபகுதித்தாய பெத்தநிலையன்றிப் பின்னைய இருபகுதித்தாய முத்திநிலையொன்றே கூறப்படும். அளவை நெறியான் இருவகை நிலையுங் கூறுவன சிவஞானபோதம் சிவஞானசித்தி சிவப்பிரகாசமும், உபதேசமுறையான் முத்திநிலையொன்றே யுரைப்பன திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் முதலியனவுமாம்.

இனிப் பிரமாண முதலிய நான்கனுட் பிரமாணமாவது, பதி பசு பாசமென்னும் முப்பொருள்களு முளவென்றற்குப் பிரமாணங் கூறுதல். இலக்கணமாவது, அம் முப்பொருள்களது தடத்த லக்கணமெனப்படும் பொதுவியல்பும், சொரூபலக்கணமெனப்படும் உண்மையியல்பும் இவையென்பதுணர்த்துதல். பொது - செயற்கை. உண்மை - இயற்கை. சாதனமாவது, அம் முப்பொருள்களுட் பாசத்தி னீங்கிப் பதியையடைய முயறற்பாலதாய பசு, அம் முயற்சித் துணையைப் பெற்று அதனுன் முயலுமாற்றினைக் கூறுதல். பயனாவது, அவ்வாற்றான் முயன்ற பசுவிற்குளவாகும் பாசநீக்கமும் சிவப்பேறுமென்னும் இருவகைப் பயன்களையுந் தெரித்தல்.

அவற்றுள், பிரமாணம் இலக்கணமென்னும் இரண்டும் உலகவியற்கையானும் புறச்சமய நூல்களானும் நிகழும் மலைவினை யறுத்து மெய்ந்நெறிக்கட் செலுத்தற் பயத்தவாத லல்லது ஏனைச் சாதனமும் பயனும்போலப் பாசத்தை யறுத்துச் சிவத்தை யடைவிக்கமாட்டாமையின் அவை மந்த வுணர்வுடையார்க்கல்லது தீவிர வுணர்வுடையார்க்கு வேண்டாவாயின. இங்ஙனம் மந்த வுணர்வுடையாரை நோக்கியும் தீவிர வுணர்வுடையாரை நோக்கியும் கூறும் இருவகை முறைமையுள் ஈண்டு அருட்பெருங் குரவராய குருஞான சம்பந்தர் தீவிர வுணர்வுடையாரை நோக்கிக் கூறும் முறையே பற்றித் தம் மநுபவ நிலைகொண்டு உண்மையுணர்த்துவாராய்ச் சிவபோகமாகிய முடிந்த பயனைத் தருதலிற் சிவபோகசாரமெனப் பெயரிய இந்நூல் செய்வான்புகுந்து, முதற்கட்டமக்குத் திருவருள் வழங்கிய அருளாசிரியரை வாழ்த்துவதாய வாழ்த்துக் கூறுகின்றார்.

உரைப்பாயிரம் முடிந்தது.

## நூல்

### ஆசிரிய வாழ்த்து.

சித்தி தருநாதன் றென்கமலை வாழ்நாதன்
பத்தி தருநாதன் பரநாதன்—முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாச னுண்மை
தருநாத னங்குருநா தன். (க)

இதன் பொழிப்பு:— அழகிய திருவாரூரைத் தமக்கு இடமாகக் கொண்டிருப்பவரும், எல்லாரினும் மேம்பட்ட தலைவராயினவரும், நமக்குக் குருநாதருமாகிய ஞானப்பிரகாசரென்னும் அருளாசிரியர் சித்தியும் பத்தியும் உண்மை ஞானமும் முத்தியுமாகிய பயன்களையெல்லாம் அருளவல்ல முதல்வராவர் என்பது.

இதனைகலம்:— தென்கமலை வாழ்நாதன் பரநாதன் நங்குருநாதன் ஞானப்பிரகாசன் சித்திதருநாதன் பத்திதருநாதன் உண்மைதருநாதன் முத்திதருநாதன் என வினைக்க.

அருளாசிரியனுவான் இறைவனே யாகலின் இவ்வாறு கூறினர். அதனுனே அவரது திருநோக்கமுதலியவற்றுன் உண்மைஞானமேயன்றிப் பிறபயன்களு முளவாதல் கூறி, அவரது பெருமை விளக்கியவாறு. அருளாசிரியரான் உண்மை ஞானத்தோடு பிறவும் உளவாதல் தண்டா பூபிகா நியாயத்தானும், ஆளுடையபிள்ளையாரது திருக்கண்ணோக்கம், திருக்கை தீண்டல், திருமொழிவழங்கல் என்பவற்றுற் பாண்டியற்கு வெப்புநோயும் மெய்க்கூனும் நீங்கியவாற்றுனு முணர்க.

சித்தி உலகின்கண் விரும்பிய வின்பப்பேறு. அதனைக் காமியப் பயனென்ப. ஈண்டுப் பத்தியென்றது, பண்டை நற்றவத்தாற் றோன்றி

---

1 The Lord that giveth attainment
The Lord that liveth in the south Kamalai
The Lord that inspireth love
The Lord that is supreme
The Great Lord of Freedom, Jnanaprakas,
The Lord that revealeth truth
He is our master.

ளூர்க்கு அத்தவம் பயப்பாடுறுதற்கும் வினைத் தொடர்பு முற்று மறுதற்கும் காலம்பெறவந்த அப் பிறப்பின்கண் முன்னைத் தொடர்பான் இறைவன் மாட்டு முறுகியெழும் உலகியலை நோக்காத பேரன்பினையன்றி வினைச் சூழலிற் பட்டார்க்கு அதனின்றும் உய்யும் உய்தியாக நிகழுஞ் சரியை கிரியா யோகங்கட்கு முதலாகிய பொதுவன்பினை. அஃதுடையார்க்கு அச் சரியை முதலியன நிகழ்தற்கு இடையீடின்மையின் அவர்க்கவை யுளவாதல் கூறவேண்டாதாயிற்று. இறுதிக்கணிற்றற் பாலதாய முத்தி யென்பது செய்யுளோக்கி இடைநின்றது. உண்மையென்றது உண்மை ஞானத்தை.

கமலை, வழிபட்ட தலமாகலிற் கமலையெனப்பட்டது. [1] "சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது மன்னு மாமலராள் வழி பட்டது, வன்னியாறு மதிபொதி செஞ்சடைச், சென்னியார்திரு வாரூர்த் திருநகர்', என்றது காண்க.

பெருநாத னென்புழிப் பெருமை ஈதற் பெருமை. உலகிய லுள்ளும், [2] "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார் மே னிற்கும் புகழ்" எனவும், [3] "இட்டார் பெரியோர்" எனவும் கூறுப வாகலின் எல்லாப் பயன்களினும் மேலாய முத்திப் பெரும்பயன் ஈவானைப் பெருநாதனென்றார். அதனானே அப்பயன் முதல்வனையின்றி யமையாமை பெறப்பட்டது. பிரகாசனென்பது கதிரவனென்னும் பொருட்டாகலின், ஞானப்பிரகாசனென்றது ஞானசூரியனென்றவாறும். தமது தோற்றமாத்திரையானே அஞ்ஞானவிருள் நீங்குதல்பற்றி அப் பெயருடையராயினர். நம்மென்றது தம் மாணாக்கரையும் உளப்படுத்து.

இனிச், சித்திதருநாதன் பத்திதருநாதன் உண்மை தருநாதன் முத்திதருநாதன் எனக் கூறவே, முதல்வன் ஆன்மாக்கட்குப் படிமுறை யான் வீடருளுமாறு தொகுத்துணர்த்தியவாறாயிற்று. அன்னதாமா றுணர்ந்துகோடற்பொருட்டுப் பெத்தமுத்திகளினியல்பினை ஈண்டொரு சிறிது தொகுத்துக் காட்டுதும்.

## பெத்த முத்திகளினியல்பு

செம்புள்ள ஞான்றே அதன்கட் களிம்புண்மைபோல் உயிருள்ள ஞான்றே அதற்கு ஆணவமலம் அநாதிக் குற்றமாயுள்ளது. அஃது

---

[1] பெரியபுரா, திருநகரச், பா, 1. [2] குறள், பா, 232. [3] நல்வழி, பா, 2.

இயற்கையா யுடன்கிடத்தலிற் சகசமல மெனவும், ஏனைக்கன்மமாயைகட்கு முதலாகலின் மூலமல மெனவும்படும். அவ்வாணவமலம், இருள் கண்ணொளியை மறைத்தல்போல ஆன்மாக்களின் அறிவு இச்சை செயலென்னும் மூவகையாற்றல்களையுஞ் சிறிதுந்தோன்றாதவாறு மறைத்து நிற்கும். அதனான் ஆன்மாக்கள் இருள்வயப்பட்ட கண்போல அவ்வாணவமலத்தின் வயப்பட்டுத் தாமென்ப தொருபொருள் தோன்றாது கிடக்கும். அந்நிலை **அநாதிகேவலம்** எனப்படும். ஆண்டு அவ்வான்மாக்கட்குள்ளது அளவிலாத் துன்பமேயாகலின் அதனைக்கண்ட இறைவன் தான் இயல்பாகவே பாசங்களினீங்கி அநாதிமுத்த சித்துருவாய் நிற்றலின் இயல்பாகவே பாசங்களிற் கட்டுண்டு அநாதிபெத்த சித்துருவாய் நிற்கும் அவ்வான்மாக்கண்மாட்டெழுந்த பெருங்கருணையினாலே அவற்றிற் கவற்றின் கன்மநிலைக்கேற்ப மாயையினின்றும் பலவகைப்பட்ட தனுகரண புவனபோகங்களைத் தோற்றுவித்தளித்தான். அத்தனுகரண புவனபோகங்கள் இருளிடத்து விளக்குப்போல ஆன்மாக்கட்கு ஆணவமல மறைப்பினைச் சிறிதேநீக்கி அவற்றின் அறிவிச்சை செயல்களைச் சிறிதே நிகழச்செய்யும். அந்நிலை சகல மெனப்படும். கன்மமும் மாயையும் ஆன்மாக்கட்குப் பின்னர்க் கூட்டப்படுதலின் அவை **ஆகந்துகமலம்** எனப்படும். ஆகந்துகம் – செயற்கை.

இனி, அங்ஙனந் தனுகரணங்களைப் பெற்ற உயிர் அவற்றால் பலவகைப்பட்ட புவனங்களிற் பிறந்திறந்து வினைகளையீட்டியும், நுகர்ந்தும் வரும். வருங்கால், அவற்றிற்கு அறியாதும், அறிந்தும்வருஞ் சிவபுண்ணியங்களும் இடைஇடையே நிகழும். அச் சிவபுண்ணியங்களே, வினையை நுகர்தற்குப் பிறவியைப்பெற்றுப் பெற்ற பிறவியின்மேலும் வினைகளையீட்டி இவ்வாறு வினையாற்பிறப்பும் பிறப்பால் வினையுமாய், மாறிமாறி வரும் வினைச்சூழலினின்றும் நீங்குதற்கு வாயிலாகும். அவற்றுள் அறியாது நிகழுஞ் சிவபுண்ணியங்களாவன:- சிவபிரான் திருக்கோயிற்கணுள்ள விளக்கினை ஓர் எலி தூண்டினாற்போலவும், கைலைக்கண் முசுவொன்று கூவிளவிலையினைப் பறித்து இறைவன் இறைவிமேல் தூவினாற்போலவுந் தானொன்று நினைத்துச்செய்ய அதுதானே இறைவழிபாடாய் முடிதலான் வருவனவும், உலகவின்பத்தினைக் கருதிச் சிறுதெய்வங்களை வழிபடுங்கால் சிவபிரானையும் அவற்றோடொப்பவைத்து வழிபடுதலான் வருவனவுமாம். அறிந்து நிகழுஞ் சிவபுண்ணியங்களாவன:— சிவபிரானை ஏனைத் தெய்வங்களோடொப்பக் கருதாது அவனே முழுமுதற்கடவுளாதலறிந்து வழிபடுதலான் வருவன. இனி, அறிந்துசெய்யுஞ் சிவபுண்ணியங்களும் உபாயச் சிவபுண்ணியம் உண்மைச் சிவபுண்ணியமென் றிருவகைப்படும். அவற்றுள் உபாயச் சிவபுண்ணியங்களாவன:— சிவபிரானே முழுமுதற்

கடவுளாதலறிந்தும், அவனை அன்பினான் வழிபடாது புகழ் பொருள் முதலிய உலகப் பயன்கருதி வழிபடுதலான் வருவன. உண்மைச் சிவ புண்ணியங்களாவன:— அவனைப் பயனென்றுங் கருதாது அன்பானே வழிபடுதலான் வருவன. உலகத்துட் கல்வியைப் புகழ்பொருள் முதலியன கருதிக் கற்பினும் அஃது அப்பயன்களைத் தருதலோடொழியாது அறிவை யுந் தருதல்போலச் சிவபுண்ணியங்களை எவ்வாற்றாற் செய்யினும் அவை அப்பயன்களைத் தருதலோடொழியாது உயிர்களின் பக்குவ நிலையினைச் சிறிது சிறிதாக முதிரச்செய்து முடிவில் உண்மை ஞானத்தைப் பயந்தே விடுமெனவும், ஏனைப் பசுபுண்ணியங்கள் அவ்வாறன்றிச் செல்வம்போலத் தத்தம் பயன்களைத் தருதலோடொழியுமெனவும், அதனாற் சிவபுண்ணியங் கள் அமிழ்தஉண்டிபோல்வன; பசு புண்ணியங்கள் ஏனையுண்டிபோல்வன வெனவும் உணர்ந்துகொள்க.

இனிச் சிவபுண்ணியங்கள், சரியை கிரியை யோகமென மூன்று வகைப்படும். அவற்றுட் சரியையாவது: திருக்கோயிற் றிருப்பணிசெய்தல், சிவமூர்த்தங்களை வழிபடுதல், அடியார் பூசைசெய்தல் முதலாகப் புறத் தொழிலாற் சிவபிரானது உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. கிரியையாவது: அகத்தொழில் புறத்தொழில் இரண்டானும் சிவபிரானது அருவுருவத் திருமேனியாகிய இலிங்கவடிவத்தினை நோக்கிச் செய்யும் வழிபாடு. யோகமாவது: தியான சமாதிகளான் அகத்தொழி லொன்றானே சிவபிரானது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. இவற்றைச் செய்தார் முறையே சாலோகம் சாமீபம் சாரூப மென்னும் பதமுத்திகளை யடைவர். அவற்றுட் சாலோகம் சிவனுலகிற் சார்ந்திருக்கு முரிமையும், சாமீபம் ஆண்டுச் சிவனுக்கு அணுக்கத் தொண்டுசெய்யு முரிமையும், சாரூபம் சிவனுருவோடொத்த வுருவினைப் பெற்றிருக்கு முரிமையுமாம். சரியை முதலியவற்றிற்குச் சாலோக முதலிய பத முத்திகள் இடைநிலைப் பயனும், ஞானம் உண்மைப் பயனுமா மென்க. சரியை முதலியனவும் சிவனை அறிதலொப்புமையான் ஞான மேயா மென்பது, [1]"விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும், அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே" என்பதனானறிக.

இங்ஙன நிகழுஞ் சிவபுண்ணியங்களான் ஆன்மாவிற்கு இரு வினை யொப்பு நிகழும். இருவினை யொப்பாவது: நல்வினைப் பயனாகிய இன்பமும், தீவினைப் பயனாகிய துன்பமும் ஒப்பத்தோன்றும் புணர்வு. இருவினை யொப்பினான் மலபரிபாக முண்டாம். மலபரிபாகமாவது:

---

[1] தாயுமா, பராபரக், பா, 157.

ஆணவமலம் தான் நீங்குதற்குரிய நிலையினை யெய்துதல். மலபரிபாகத்திற் சத்திநிபாதம் நிகழும். சத்திநிபாதமாவது: சிவனது அருட்சத்தி ஆன்மாவின்மாட்டுப் பதிதல். அது, மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரமென நால்வகைப்படும். இவை உலகியனீங்கிச் சிவனை யடைதற்கண் விரையும் விரைவு ஒன்றினொன்றேற்றமாக நிகழ்தல். இவற்றுட் டீவிரதரமாகிய நான்காஞ் சத்திநிபாத மெய்தினோர்க்குச் சிவன் தானே ஆசான் மூர்த்தியாய் எழுந்தருளிவந்து ஞானத்தை யுணர்த்துவன். அவ்வாறுணர்த்தப் பெற்றோர், அதனைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடிப் பாசத்தைப் பற்றறக் களைந்து சிவத்திலழுந்தி இரண்டறக் கலத்தலாகிய சாயுச்சியத்தினை யடைந்து சிவானந்தவாரியுட் டிளைப்பர். அவ்வின்ப நுகர்ச்சியே சிவபோகமெனப்படும். அந்நிலையே சுத்தமெனப்படும் பரமுத்திநிலையா மென்க.

இங்ஙனமாகவே, "சித்தி தருநாதன்" என்றது, முதல்வன் ஆன்மாக்கட்கு அறியாது நிகழுஞ் சிவபுண்ணியத்தினை வருவிப்பன் எனவும், "பத்திதருநாதன்" என்றது அவ் வறியாது நிகழுஞ் சிவ புண்ணியத்தாற் பின் அறிந்து செய்யும் சிவபுண்ணியத்தினை வருவிப்பன் எனவும், "உண்மைதருநாதன்" என்றது அச் சிவபுண்ணியத்தாற் பின் இருவினையொப்பு முதலியன நிகழ்வித்து நாலாஞ் சத்திநிபாதத்தின்கண் ஆசான்மூர்த்தியாய் வந்து உண்மை ஞானத்தை உணர்த்துவன் எனவும், "முத்திதருநாதன்" என்றது அவ்வுண்மை ஞானத்தாற் பின் பரமுத்தி நிலையை அருளுவனெனவுங் கூறியவாறாத லறிக. [1]"தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளு மெய்த வுரைப்பது தற்சிறப்பாகும்" என்பவாகலின் நூனுதல் பொருளை இவ்வாறு தொகுத்துணர்த்தலும் முதற்கட் செய்யப்படும் வாழ்த்துச் செய்யுட் கியல்பென்க. எனவே, பெத்தநிலை யீண்டைக்கினையின்மையாற் கூறாராயினரென்பது. இதனாற் பெத்த முத்திகளின் செய்திகளெல்லாம் முதல்வன் செயல்களேயா மென்பது குறிப்பால் பெறவைத்தமையின், அனைத்திற்கும் முதல்வன் திருவருளையே முதலாகக்கொண்டு நிகழும் திருவருள் நெறியை விளக்குவதே யிந்நூலென்பதும் போதருமாறுணர்ந்துகொள்க.

இனி, ஆசிரியர் பெயரையெல்லாம் ஒருங்கோதாது இவ்வாறு பயன்றோறும் வைத்தோதினார், அவை அவ்வப் பயனைத் தருமென்ப துணர்த்தற்கு. அதனான், "தென்கமலை வாழ்நாதன்" என அவரதிட முணரவே, சித்திகள் பலவு மெய்துமெனவும், "பரநாத" னென

[1] தண்டி. சூ, 1, உரை மேற்கோள்.

அவரது பெருமை யுணரவே, பத்தி கைகூடுமெனவும், அவரை "நா
குருநாத" னெனக் கொள்ளவே, உண்மை ஞானம் விளங்குமெனவும்
"ஞானப்பிரகாச" னென அவரது திருப்பெயரை நாடோறு மோதி
வழிபடவே, அவ்வுண்மை ஞானம் முற்றிப் பரமுத்தி யெய்துமெனவுங்
கூறியவாறுதலறிக. இனிப் பயன்களை முற்கூறி ஆசிரியர்பெயர்களைப்
பிற்கூறியது, அப்பயன்கள் விரைந்தெய்தப்படுமென்றற்கு. [1]"தென்னு
வென்னு முன்னந் தீசேர் மெழுகொப்பாய்" என்றாற்போல அவரை
யறிந்தடையுமுன்னரே அப்பயன்கள் கைகூடுமெனக் கூறியவாறுகக்
கொள்க. வாழ்த்து, வணக்கம், பொருளியல்புரைத்தல் என்னும் வாழ்த்து
மூன்றனுள் இது பொருளியல்புரைத்தல் என்க.

---

அருவு முருவு மருவுருவு மல்லா
வொருவ னுயிர்க்குயிரா யோங்கித் — திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
யமலபதந் தந்தெனையாண் டான். (௨)

இதன் பொழிப்பு:— அருவமும் உருவமும் அருவுருவமும் என்னும் முக்கூற்றினுள் ஒரு கூற்றினும்படாது தன்னை யொப்பாரின்மையிற் றனேயாய முதல்வன், முன்னெல்லாம் என்னுயிர்க் குயிராய் என் உண்ணின்று உணர்த்திவந்து, இதுபொழுது திருவாரூரின்கணுள்ள ஞானப்பிரகாசன் என்னும் ஆசான் மூர்த்தியாக எழுந்தருளிவந்து ஞான வுருவமான தனது திருவடிகளை எனக்கு நிழலாகத்தந்து ஆட்கொண் டருளினன் எ-து.

இதனகலம்:— அருவமாவது கட்புலனாகாத வடிவு. உருவமாவது கட்புலனாம் வடிவு. அருவுருவமாவது ஒருவழிக் கட்புலனாதலும் ஒருவழிக்

---

2 The one that is neither the formless
Nor the form nor the formless form
Sprang as the life of all life and came
Hailing from holy Kamalai, Jnanaprakas,
He gave me His immaculate feet
And admitted me into His Grace.

[2] திருவாச, திருவெம், பா, 7.

கட்புலனாகாமையுமுடைய வடிவு. காற்றும் வானமுமாகிய பூதங்களும், மனமுதலிய கருவிகளும் அருவப்பொருள்கள். நீரும் நிலனுமாகிய பூதங்களும், குடம் ஆடை முதலிய பொருள்களும் உருவப்பொருள்கள். தீயாகிய பூதமும், திங்கள் முதலிய பொருள்களும் அருவுருவப் பொருள்கள். வெந்நீரின் கணின்ற தீயும் பிறைத்திங்களும் கட்புலனாகாமையும், விறகின்கணெரியுந் தீயும், தலையுவா நாட்டிங்களும் கட்புலனாதலுமுடையவாதலறிக.

சடப்பொருள்களெல்லாம் அருவம் முதலிய மூக்கூற்றினுள் ஒன்றாவனவன்றிப் பிறிதின்மையின் முதல்வன் அவற்றுளொன்றாகாத சித்துப்பொருளென்பார் "அருவு முருவு மருவுருவு மல்லா" என்றும், உயிர்கள் சித்துப்பொருளாயினும் அவை சடத்தைப் பற்றிநின்று சடமாந் தன்மையுடைய தூலசித்தாகலின் முதல்வன் அவற்றுள்ளு மொன்றாகாத சூக்குமசித்தென்பார் "ஒருவன்" என்றும், தான் சூக்குமசித்தாகலின் தூலசித்தாகிய உயிர்கட்கு உண்ணின்றுணர்த்துவா னென்பார் "உயிர்க்குயிரா யோங்கி" என்றும், பெத்தகாலத்து உண்ணின்றுணர்த்திவந்த முதல்வன்றானே முத்திக்காலத்து ஆசான் மூர்த்தியாய்வந்து அருள்செய்வானென்பார் "ஞானப்ரகாசனென வந்தெ ஆண்டான்" என்றுங் கூறினர்.

இனி, அருவப்பொருளுந் தோன்றிநின் றழிவதேயாமென அதனியல்புணரமாட்டாதார் உருவப்பொருளே யழிவதுபோலுமென மயங்கி, முதல்வனை உருவமுடையனெனின், அழிபொருள்களு ளொன்றாவனென மறுத்து, அவன் அருவினனேயென்று கூறுவர். முதல்வனை அருவமெனினும் முன்னர்க் கூறிய குற்றம் நீங்காமையின், உருவத்தையேயன்றி அருவத்தையுங் கடந்து நிற்றலே முதல்வற்கு உண்மையியல்பெனவும், அற்றாயினும் உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்தல் காரணமாக அருவம் உருவம் அருவுருவமென்னும் மூவகைத் திருமேனிகளையுங்கொண்டு நிற்றல் அவற்குப் பொதுவியல்பெனவும், அவ்வருவமுதலிய மூன்றும் உலகத்து அருவ முதலியனபோல மாயாதேகங்களாகாது அருட்டிருமேனிகளாமெனவுங் கூறுவர் மெய்யுணர்ந்தோர். அதனை,

[1] அலகிலா அறிவன் றானு மருவமே யென்னி லாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்றாய்க் கூடுவன் குறித்தி டாயே.

எனவும்,

[2] சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்.

---

[1], [2] சித்தி சூ, 1, பா, 43, 70..

எனவும்,

[1] அருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற
வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள வாமே.

எனவும்,

[2] மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவ மாகும்
ஆயவா ணவம கன்ற வறிவொடு தொழிலை யார்க்கு
நாயக னெல்லா ஞானத் தொழின்முத னண்ண லாலே
காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்.

[3] உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள் அரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானருள் தனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே ஆக்கினன் அசிந்த னன்றே.

எனவும், வருவனவற்றா னுணர்க.

இனித், தூலசித்தும் சூக்குமசித்துமெனச் சித்துப்பொரு ளிருவகைத் தென்பதுணராதார்; சித்தென்ப தொன்றுமேகொண்டு, முதனூல் செய்தல் மெய்ப்பொருளுணர்த்தன் முதலிய முதல்வனது தொழிலை உயிர்கண்மாட்டேற்றியும், அவிச்சையின் மயங்கல் ஐந்தவத்தைப் படுதல் முதலிய உயிர்களின் தொழிலை முதல்வன்மாட்டேற்றியும் இரண்டன்றன்மையும் ஒன்றனிடத்து மயங்கவுரைத்துக் கடவுள் உயிர் என்னு மிரண்டனுள் ஒன்றனையே உண்டெனக்கொண்டு ஏனையதில்லை யென்பாரும், சித்துப்பொருள் இருவகைத்தாயினும் தூலசித்துப் பலவாதல்போலச் சூக்குமசித்தும் பலவாதல் வேண்டுமெனக்கொண்டு உயிர்கள்போலக் கடவுளும் பலவென்பாரும், கடவுளொன்றேயாயினும் முத்தியடைந்தவுயிர் கடவுளோ டொக்குமாதலின் அவையுங் கடவுள் செய்யுஞ் செயலெல்லாஞ் செய்யு மென்பாருமுளராகலின் அவையெல்லாம் பொருந்தா வென்பதூஉம், இவ் "வொருவன்" என்றதனாற் போந்தவா றுணர்க.

முதல்வன் சூக்குமசித்தும், உயிர்கள் தூலசித்து மாதலை,

[4] சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்

---

[1], [2], [3] சித்தி, சு, பா, 38, 41, 47. [4] சித்தி சு, 11, பா, 11.

பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றன்
அவன்றனே யறியுஞ்சித் தாதலினு லிரண்டு
மணைந்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கும்
இவன்றனும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி
யிதுவசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே.

என்பதனன் இனிதுணர்க. முதல்வன் தன்னேடொப்பா ரொருவருமின்றித்தானேயாய ஒருவனென்பதுபற்றியே [1]"நின்னுவார் பிறரன்றி நீயே யானய்" [2]"மற்றருந் தன்னெப்பாரில்லாதானை" [3]"ஒப்புனக்கில்லா வொருவனே" என்றற் றொடக்கத்துத் திருமொழிகளெழுந்தனவென்க. [4]"தனக்குவமை யில்லாதான்" என்றதூஉ மிதுநோக்கி.

உயிர்க்குயிரா யோங்குதற் கியைபுணர்த்துவார் முதல்வனியல்பினை இங்ஙனம் வகுத்தோதினர்.

"ஓங்கி" யென்பது ஓங்குவித்தென்னும் பொருட்டாய் உணர்வு பெறுவித்தலை யுணர்த்திற்று. முதல்வன் உயிர்க்குயிராய் நின்றுணர்த்தலை,

[5] உரைசேரு மெண்பத்து நான்குநூ றாயிரமாம் யோனி பேதம்
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா யங்கங்கே நின்றன் கோயில்.

எனவும், [6]"என் உள்ளத்தினுள்ளே நின்ற கருவே" [7]"என் உள்ளத்தினுள்ளிருந்தாங் குறுதி காட்டி" எனவும்,

[8] விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்.

[9] காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்.

எனவும்,

[10] காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
ஈசனு யிர்க்குக் காட்டிக்கண் டிடுவன்.

[1] அப்பர், தனித் திருத், பா, 7. [2] அப்பர், பெரியதிருத், பா, 2. [3] திருவா, பிடித்த, பா, 5, [4] குறள், பா, 7. [5] சம்ப, திருவீழி, பா, 4. [6] அப்பர், திருவாவடு, பா, 1. [7] அப்பர், ஆரூர், பழமொழி, பா, 6. [8], [9] சிவஞானபோ சூ, 5, சூ, 11. [10] சித்தி சூ, 11, பா, 1.

எனவும், வருவனவற்றானுணர்க.

"திருவார் கமலை" என்புழிக் கமலை என்றது வாளா பெயராய் நின்றது. "உணர் குண குணியுமாகி" என்புழிக் குணி யென்றதுபோல.

ஞானப்பிரகாசனென் றாகற்பாலது செய்யுணோக்கி அவ்வா றாகாது ஆரியமேயாய் நின்றது. விப்ர சிகாமணி என்றாற்போல. இங்ஙனம் செய்யுணோக்கிச் சிதையாது நிற்றல் சிறுபான்மைத்தென்க.

"அமலம்" என்றது ஈண்டுக் கருத்தினான் ஞானமெனப் பொருடந்து நின்றது. [1]"கண்ணுந் தோளு முலையும் பிறவும் – பன்மை சுட்டிய பெயர்நிலைக் கிளவி" என்பவாகலிற் பதங்களெனப் பன்மைகூற வேண்டாவாயிற்று. [2]"பாதபங்கயமுஞ் சூட்டும்" என்புழியும் இவ்வாறே யோதினமை காண்க. [3]"தாளிணை தலைமேற் சூட்டும்" என்றமையான் இருபதங்களுஞ் சூட்டப்படுதலுணர்க.

முதல்வன், தனது ஞானம் கிரியையென்னு மிரண்டனையுமே இரண்டு திருவடிகளாகக் கோடலின், அவன் ஆசான் மூர்த்தியாய் வந்தருள்செய்யும்வழி ஆன்மாவினது ஞானக் கிரியைகளைத் தனது ஞானக் கிரியைகளின் வழியவாக்குதற் பொருட்டுத் தனது திருவடிக ளிரண்டனையும் மாணாக்கரது சென்னிமேற் சூட்டியருளுவனாதலின், "அமலபதந் தந்தெனை யாண்டான்" என்றார். இதனானே, அருளாசிரியர் செய்யுட்களிற் பயின்றுவரும் "இறைவன் திருவடிகளைத் தஞ்சென்னிமேற் கோடல்" என்னுமது; தமது ஞானக் கிரியைகட்கு அவனது ஞானக் கிரியைகளை வியாபகமாகக்கொண்டு அடங்கிநிற்ற லென்னுங் குறிப்பு மொழியாதலு முணர்க. [4]"பொல்லா ரிணைமலர் – நல்லார் புனைவரே" என்புழிப் "புனைதல்" என்றதற்கும் இவ்வாறே யுரைத்தமை காண்க. [5]"இருகாற் குரம்பை யிதுநானுடைய திதுபிரிந்தால் – தருவா யெனக்குன் றிருவடிக் கீழோர் தலைமறைவே" எனவும், [6]"முத்தாந்தப் பாத மலர்க் கீழ்வைப்பன்" எனவும், வருவனவற்றுட் போலக் கீழென்றோதலும் வியாப்பியமாத லுணர்த்தற் பொருட்டென்க. எனவே, [7]"ஈசனெந்தை யிணையடி நீழலே" என்றாற்போல முத்திநிலையினை இறைவன் றிருவடி நிழலென்றலும், அந்நிலைக்கண் ஆன்மாவின் ஞானக்கிரியைகள் முதல்

[1] தொல்-சொல், கிளவி, சூ, 61. [2] சித்தி சூ, 2, பா, 51. [3] சித்தி, பாயிரம். பா, 2. [4] சிவஞானபோ, மங்கலவாழ்த்து. [5] அப்பர், தனித் திருவிருத், பா, 2. [6] சித்தி சூ, 8, பா, 16. [7] அப்பர், தனிக்குறுந், பா, 1.

வன்றன் ஞானக்கிரியைகளின் வியாபகத்தில் வியாப்பியமாய் அடங்கி நிற்றலும், அதனான் இன்பம் விளைதலும் பற்றியாயிற்று.

ஆசான்மூர்த்தி தான் மாணாக்கர்க்குப் பாசத்தை யறுத்து ஞானத்தை யுணர்த்தலேயன்றிச் சிவானந்தத் தழுத்தலும் வேண்டுமாகலானும், ஏனை நோக்கம் முதலியன பாசத்தை யறுத்தற்கும், மொழியும் நூலும் ஞானத்தை யுணர்த்தற்குமாகத் திருவடிசூட்டலொன்றே யதற்குரியதாகலானும், அஃது இன்றியமையாதாயிற்று. [1]"பரகதி யதுவுந் தந்து பாத பங்கயமுஞ் சூட்டும்" என்றோதியதூஉங் காண்க. ஆண்டுக் கதியென்றது; ஞானத்தை யென்பது; அதற்கு மாபாடியமுடையாருரைத்த வுரையானுணர்க. தீக்கைகள் பலவற்றுள்ளும் இத் திருவடிசூட்டலொன்றே சிறந்தெடுத் தோதப்படுதலு மிதுபற்றியென்க. எனவே, பதந்தந்தமை கூறவே, ஏனைய தாமே பெறப்பட்டவாறறிக. பாதமென்பது குறிகின்றது.

ஆசான்மூர்த்தி மாணாக்கர்க்கு அருள்செய்யும்வழிச் செய்யுஞ் செய்கைகள் பலவென்பது, [2]"பலவித மாசான் பாச மோசனந்தான் பண்ணும் படிநயனத் தருள்பரிசம் வாசகமானதமும் – அலகில்சாத் திரம்யோகம் ஔத்திராதி அநேகமுள" என்றதனானுணர்க.

முன் உண்ணின்று உணர்த்திய முதல்வன்றானே பின்னும் ஆசிரியனாய் வந்தருள்செய்வ னென்பது, [3]"தம் முதல் குருவுமாய்த் தவத்தினிலுணர்த்த" என்றதனாலுணர்க. [4]"அறிவுக் கறிவாகி யவ்வறிவுக் கெட்டா – நெறியிற் செறிந்தநிலை நீங்கிப் – பிறியாக்–கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக் – குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு" என்றார் இவர் வழியாருமென்க. ஞானத்தைப் பக்குவ மெய்தாதவழி யுணர்த்தலும் எய்தியவழி யுணர்த்தாமையுங் குற்றமாகலானும், அஃதெய்தினமை உயிர்க்குயிராய் நிற்கும் முதல்வனன்றி ஏனையோரறிதல் கூடாமையானும் உண்மை ஞானத்தையுணர்த்தும் ஆசிரியன் முதல்வனேயன்றி ஏனையோராதல் கூடாமை பொருந்துமாறு பற்றியு முணர்ந்துகொள்க. [5]"அகத்துறு நோய்க் குள்ளினரன்றி யதனைச் – சகத்தவருங் காண்பரோ தான்" என்றது மிப்பொருட்டு.

அற்றேல், முதல்வன் மாயாவுருவினை யெயா னாகலின் அவன் நம்மனோர்போல ஆசான்மூர்த்தியாய் வருதல் எங்ஙனங் கூடுமெனில்:—

---

[1] சித்தி சூ, 2, பா, 51. [2] சித்தி சூ, 8, பா, 3. [3] சிவஞானபோ சூ, 8. [4] கந்தர்கலி வரி, 23-26. [5] திருவருட், அருளுரு, பா, 2.

அவன் எவ்விடத்தும் நீக்கமற நிறைந்து நிற்பினும் மலநீங்கிய முத்தரிடத்துத் தயிரினெய் போலவும், கடைந்தவழித் தோன்றும் நெருப்புப் போலவும் விளங்கியும், ஏனையிடத்துப் பாலினெய் போலவும் விறகிற் றீப்போலவும் விளங்காதும் நிற்பனாகலின் அம் முத்தரை அவரே தானாக ஆவேசித்துநின் றருளுவன்; அதனானது கூடுமென்க. இதனையே, [1]"அவன் அந்நிய மின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலானென்க" என்றருளிச்செய்தார் மெய்கண்ட தேவ நாயனாரென்பது. அதற்கு மாபாடிய முடையாருரைத்த அதனுரையா னுணர்க. இக்கருத்துப் பற்றியே, [2]"ஏகனுமாகி யநேகனுமானவ – னாதனு மானானென் றுந்தீ பற – நம்மையே யாண்டானென் றுந்தீபற" என முன்னர்க் கூறிப் பின்னர், [3]"நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன் – றன்செய லாமேயென் றுந்தீபற – தன்னையே தந்தானென் றுந்தீபற" என்றறைய மறுத்ததூஉ மென்க. எனவே, தெய்வஅருள் தோன்ற நின்ற தேவராட்டி முதலியோரைக் காண்பார் அவரை அத்தெய்வமாகக் காண்டலல்லது மக்களு ளொருவராகக் காணாமைபோல, முதல்வனருள் விளங்க நின்ற முத்தரைக் காணும் பக்குவமுடையார் அவரை அம் முதல்வனாகவே காண்டலல்லது நம்மனோரு ளொருவராகக் காணாரென்க. [4]"கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி – மண்ணின்மேன் மாக்கள் மலமகற்றும் – வெண்ணெய்நல்லூர் – மெய்கண்டான்" என்றற் றொடக்கத்தனவெல்லாம் அங்ஙனங் காணுங் காட்சியாற் கூறியனவென்க.

அற்றேல், முத்தரல்லாதாரும் யாங் குரவரெனச் சிலர்க்குச் சில சொல்லுதல் காண்டு மாகலின் உண்மைக் குரவரை யுணருமா றியாங்ஙனமெனின்:- அது, ஞானத்தை யுணர்தற்கட் டீவிர முடையார்க்கு அம் முதல்வ னருளான், அவரைக்கண்ட பொழுதின்கணாதல் அவரது பெருமை அவர் மாணாக்கர் முதலியோராற் சொல்லப்பட்டுக் கேட்டுவரு நாட்களினாதல் யாதானு மோராற்றான் அவர்பால் மனம் பிணிப்புண்ணுமாற்றா னறியப்படுமென்பது. ஓர் உண்மைக் குரவன்பால் பக்குவமெய்திய மாணாக்கற்கே மனப்பிணிப்புண்டலல்லது பிறர்க்கு மனம் பிணிப்புண்டலும் ஒருகுரவ ரல்லாதானிடத்து அபக்குவர்கட்கே மனம் பிணிப்புண்டலல்லது பக்குவமெய்திய மாணாக்கற்கு மனம் பிணிப்புண்டலு மில்லையெனக் கொள்க.

அற்றேலஃதாக, அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவர்க் காயினும் முதல்வன் ஆசிரியனாய் வந்தருள் செய்யாமை யென்னையெனிற்

[1] சிவஞானபோ சூ, 8, அதி, 2. [2], [3] திருவுந்தி, பா, 5, 6. [4] இருபா ... 1.

கூறுதும்: உயிர்கட்கு முதல்வன் ஞானத்தை யுணர்த்து முறைமை தான் உண்ணின்றுணர்த்தலும், முன்னின்றுணர்த்தலும், ஆசான் மூர்த்தியைப் பற்றிநின் றுணர்த்தலுமென மூவகைத்து. அவற்றுள், முன்னைய விரண்டும் நிராதார தீக்கையெனவும், பின்னையது சாதார தீக்கையெனவும் பெயர்பெறும். உணர்த்து முறைமை; இங்ஙனம் மூவகைப்பட்டமை உணர்த் தப்படும் உயிர்களின் பந்தத்தின் மூவகை வேறுபாடு பற்றியேயாம். அம் மூவகை வேறுபாடாவன: ஆணவமலம் ஒன்றே யுடைமையும், ஆணவங் கன்மம் என்னும் இருமல முடைமையும், ஆணவங் கன்மம் மாயை யென்னும் மும்மலங்களு முடைமையுமாம். ஒருமல முடையார் முதலிய மூவரும் முறையே விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் எனப் பெயர் பெறுவர். அவருள் விஞ்ஞானகலர் ஆணவமலமொன்றே யுடையராய் அதுதானும் மெலிதாய்ப்பற்ற நிற்பராகலின் அவர்க்கு முதல்வன் ஞானத்தை யுண்ணின்றுணர்த்தவே யுணர்வர். பிரளயாகலர் ஆணவத் தோடு கன்மமலமுமுடையராய் ஆணவமலம் இடைநிகர்த்ததாய்ப் பற்ற நிற்பராகலின் அவர்க்கு முதல்வன் ஞானத்தை ஒருகால் முன்னின் றுணர்த்தவே யுணர்வர். சகலர் மும்மலங்களு முடையராய் ஆணவமலம் வலிதாய்ப்பற்ற நிற்பராகலின் அவர்க்கு முதல்வன் அவ்விருவகையானு மன்றி ஆசான் மூர்த்தியாய் வந்து, நோக்கம் பரிசம் முதலிய செய்கை களாற் பாசத்தையறுத்து, ஞானத்தைக் கேட்பித்து, உடனுறைந்து சிந்திப்பித்துத், தெளிவித்து, நிட்டை கூடுவித்து, அந்நிட்டையிற் பயில்வித் துணர்த்த அம் முறையானே யுணர்ந்து பயன்பெறுவர். இனிச், சகலருள்ளும் முற்செய் தவவிசேடத்தாற் றோன்றி, முதல்வ னொருவனையே தம் உயிரினு மினியவனாக வறிந்து அவன் பணியே பணியாகக்கொண்டொழுகும் பேரன்பரும் பக்குவ விசேடத்தாற் பிரள யாகலர் விஞ்ஞானகலரோ டொப்பராகலின் அவரையும் முதல்வன் உண்ணின்றுணர்த்தியும் முன்னின்றருள்செய்தும் முத்தியிற் சேர்ப்பன். ஆகவே, அறுபான் மும்மை நாயன்மார்களும் முற்செய் தவவிசேடத்தாற் றோன்றிப் பத்திநெறியினொழுகிய பேரன்பராகலின் அவர்கட்கு முதல்வன் ஆசான்மூர்த்தியாய்வந் தருள்செய்தல் வேண்டாவாயிற் றென்க.

விஞ்ஞானகலர் முதலிய மூவர்க்கும், முதல்வன் ஞானத்தை யருள் செய்யுமா றிதுவென்பதனை,

[1] மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்

[1] சிவஞானபோ. சூ, 8, அதி, 2, பா, 1.

பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

என்பதனானும், குருவாய்வந் துணர்த்துதல் சகலருள்ளும் நாலெனறியி னொழுகுவார்க்கன்றிப் பத்திநெறியி னொழுகுவார்க் கன்றென்பதனை, [1]" தம் முதல் குருவுமாய் " எனவும் [2]" குருவாகி வந்து " எனவும் கூறியன, [3]" மார்க்கர் கண்ட நாலோதி வீடு காதலிப்பவர்கட் கீசன் - புண்டரிகத்தாள் சேரும் பரிசினைப் புகன்றது " என்றும், [4]" பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும் - தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன் " என்றும் கூறியவாற்றானுமறிக.

பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணும் தொண்டரைச் சாமுசித்தரெனவும், மார்க்கர்கண்டநா லோதி வீடு காதலிப் பவர்களை வைநயிகர் எனவும் கூறுப. இனிப் பிறந்த ஞான்றே உலகிய னாட்டமின்றி ஞானநாட்டமாதல் பத்திநாட்டமாதலுடையோரே சாமுசித்த ரெனவும், முதற்கண் உலகிய னாட்ட முடையராய் இடைக்கண் அவற்றை எய்தினர் அன்னரல்லரெனவுங் கூறுவாருமுளர். அது ஞானநாட்டத்திற் கொக்குமாயினும், முன்புசெய் தவத்தினீட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்டல் முதற்கண்ணாயினும் இடைக்கண்ணாயினும் ஒரு பெற்றியே யாகலின் பத்திநெறியிற் றலைப்பட்டோர் எவ்வாறாயினும் சாமுசித்தரே யாவரென்க. அறுபான்மும்மை நாயன்மார்களுள் உண்ணின் றுணர்த்தப்பட்டாருமுளர்; முன்னின் றுணர்த்தப்பட்டாரு முளர் அஃதறிந்துகொள்க.

இது, வீடுபேற்றிற்கு வாயிலாகிய ஞானத்தையடையுமாறு தம் அநுபவத்தின் வைத்துணர்த்தியவாறு.

---

ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்க ளன்பனைத்தும் —பாரெவர்க்குங்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசனெனு
மத்தனென்போல் வந்திலனா னால். (௩)

இதன் பொழிப்பு:— யாவர்க்குந் தலைவராய், இந்நிலவுலகில் திருவாரூரின்க ணெழுந்தருளியுள்ள ஞானப்பிரகாச ரென்னும் அருட் குரவர், இவ்வாறு மனித்தவுருக்கொண்டு வந்தருள்செய்திலராயின், அற நெறியாகிய உலகியலொழுக்கமும், சிவதன்ம சிவயோக சிவஞானங் களாகிய மெய்ந்நெறியொழுக்கமும் என்னும் சாதனங்களும், அவற்றது பயனாகிய சித்தி முத்தியென்னும் பேறுகளும் இன்னவென்பதனை யானெங்ஙன முணரவல்லேன்! எ-று.

இதனகலம்:— "ஆரறிவார்" என்றது தம்மைப் பிறர்போல் வைத்துக் கூறுவதொருவழக்கு. நற்றவங்கள் "இறப்பில் தவம்" எனப் பட்ட, எஞ்ஞான்றும் அழியாத சரியை கிரியை யோகங்களாய சிவ புண்ணியங்கள். அன்பென்பது ஞானமென்னும் பொருட்டாய் நின்றது. பாரிற் கமலையில்வாழ் என்க என்போல் என்றது வடிவுகுறித்து.

ஈண்டைக் கியைபில்லாத நீதிவழியும் சித்தியுமாகிய உலகியலையு முடன் கூறினர்; அவைதாமும் முதனூல் வாயிலாகவும் பெரியார்தம் வரலாற்றுமுறை வாயிலாகவும் உணர்த்தியவழியின்றி, உணர்தல் கூடாதாக, மெய்ந்நெறியினுள்ளும் முடிந்த சாதனமாகிய உண்மை ஞானத்தை அவனையன்றி உணருமாறு யாண்டைய தென்றற்கு.

உலகியலும் முதல்வ னுணர்த்தியவழியன்றி யுணர்தல் கூடா தென்பது;

---

3. Who could know the path of justice
Who could know Siddhi and Mukthi
Who could know the good austerities
And fullness of love,
If the Lord of all men on Earth
The Father, Jnanaprakas of Kamalai
Had not come in a form like mine ?

[1] அருந்தவருக் காலின்கீ ழறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய வியம்பேடீ!
அருந்தவருக் கறமுதலா னன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ.

என்பதனானறிக.

இங்ஙனங்கூறவே, ஞானம், முதல்வன் அருட்குரவனாய் வந்துணர்த்தவே உணரற்பாற் றென்பதோர் யாப்புறவில்லை; நூலானும் பிறவாசிரியரானும் உணர்தல் கூடுமென்பாரை நோக்கி அஃதன்னதன்றென வரையறுத்தவாறாயிற்று.

[2] சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமே—ஆர்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு.

என்பதனன் உண்மை ஞானம் நூல்களா னுணரவாரா தென்பதூஉம்,

[3] ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே—பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு.

எனவும்,

[4] ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின்.

[5] ஞான மிவனொழிய நண்ணியிடு நற்கலனல்
பானு வொழியப் படின்.

எனவும் வருவனவற்றால், அது பிறரா னுணரவாராதென்பது முணர்க.

இஃது, அதனை எதிர்மறைமுகத்தாற் கூறி யாப்புறுத்தவாறு.

[1] திருவாச, சாழல், பா, 20. [2], [3] திருக்களிற், பா, 6, 5. [4], [5] திருவருட், அருளுரு, பா, 9, 10.

அரியயற்கு முன்னா ளடிமுடியுங் காணாப்
பெரியவனே வந்து பிறந்து—துரியம்
பெருக்கின்றான் ஞானப் பிரகாச னாகி
யிருக்கின்றா னாரூரி லின்று. (௪)

இதன் பொழிப்பு:— முன்னைநாளில் பிரம விட்டுணுக்களால் அடியுமுடியு மறியவொண்ணாத பெரியோன்றானே இன்று இந்நிலவுலகில் தோன்றி ஞானப்பிரகாசரென்னும் அருட்குரவனாய்த் திருவாரூரின்கண் இருக்கின்றான்; இருந்து ஞானானுபூதியினை மிகுவிக்கின்றான் எ-து.

இதனகலம்:— "அரியயற்கு அடிமுடி காணாப் பெரியோன்" என்றது, மூவகைப்பட்ட மாயைகளையுங் கடந்து, பிறப் பிறப்பாதி உயிர்க் குணங்களற்று, உயிர்களாற் காண்டற்கரிய முதல்வனாயுள்ளவனென்ற வாறு. "முன்னாள் காணாப் பெரியவன் இன்று ஆரூரிலிருக்கின்றான்" என்றது பக்குவமின்மையாற் கனவிலுந் தேவர்க்கரியோனாய் நின்றவன் பக்குவ மறிந்து எம்மை உய்விக்கவேண்டி நனவிலும் எளியோனாய் வந்தருளினானென்றவாறு.

"பெரியவனே வந்து பிறந்து" என்றது பிறவாத தன்மையன் பிறந்தானென்னுமாறு வந்தென்றவாறு. அங்ஙனம் வருதலாவது, பிறந்த ஞான்றே ஞானச்செல்வராய் நிற்கும் சாமுசித்தரை முன்னைப்பிறவியிற்றானே வீடடைவியாது உலகினர்பொருட்டுப் பிறக்கச்செய்து அவரே தானாகநின்று தன் செயலையெல்லாஞ் செய்தல். [1]"என்றும் - இறவாத வின்பத் தெமையிருத்த வேண்டிப் - பிறவா முதல்வன் பிறந்து - நறவாரும் - தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று - பேரிலா நாத னொரு பேர்புனைந்து" என்றதூஉ மிக்கருத்தேபற்றி வந்தது. எனவே, இது "மாயாவுருவினன் மாயாவுருவினை - யேயான்; ஏயின் எம்ம னேரே"

4. The Great One Himself whose crown and feet
Could not be seen by Aja and Hari
Hath come, hath been born. He increaseth Turiya
The estate of man, the highest serenest calm,
In Arur He hath his abode this day
As Jnanaprakas.

[1] போற்றிப், வரி, 136-140

அன்றே! வென்னு மையத்தினை நீக்கியவாறாயிற்று. இதனை மேலே விளக்கினும்; காண்க.

முதிர்ந்தநிட்டை அதீதமாகலின் முதற்கட் பெற்ற நிட்டையைத் துரியமென்றார். பெருக்குதல் ஈண்டு முதிர்வித்தல்.

இது, தமது குரவர் பெருமை கூறுமுகத்தான் உண்ணின்றுணர்த்திய முதல்வனே குருவுமாய் வருவனென்றதன்க ணிகழ்வதோர் ஐயமறுத்தவாறு.

---

கண்டேனிப் பாசங் கழிந்தே னமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான். (௫)

இதன் பொழிப்பு:— வண்டுக ளொலிப்பச் சோலைகள் அவற்றிற்குத் தேனைச் சொரியும் திருவாரூரின்க ணெழுந்தருளியுள்ள ஞானப்பிரகாசரென்னும் அருட்குரவரையே நான் எனக்கு ஆசான் மூர்த்திகளாக அறிந்து பற்றினேன்; அதனாற் பாசக்கூட்டங்க ளீங்கப்பெற்றுத் திருவருளாகிய அமுதத்தை முகந்து பருகினேன்; அதனாற் பேரின்பத்தில் மூழ்கினேன் எ-து.

இதனகலம்:— "கண்டே" னென்புழித் தந்துரைத்தன இசையெச்சம். [1]"தின்பா னமக்கொன்று கண்டோம்" என்புழிப்போலக் காண்டல் ஈண்டு ஆராய்ந்தறிதன்மேற்று.

---

5. I saw Him. My bonds slipped off.
Nectar I scooped and drank.
I was in blissful ecstasy.
I saw Jnanaprakas, Him of Kamalai,
Whose gardens pour honey to the murmuring bees
Him with golden feet like lotus red.

[1] அப்பர், திருப்பாதிரிப், பா, 9.

அருட்குரவன் ஞானத்தை யுணர்த்தும்வழி முன்னர்ப் பாச நீக்கமும், அதன்பின் அருள்விளக்கமும், அதன்பின்னர் இன்பப்பேறு முளவாமாகலான் அவை அம் முறையானே கூறப்பட்டன. இப் பாச மென்றது உலகமாய்த் தோன்றுவனவற்றை யென்றவாறு. மலத்தை மிருத்தியு வென்பவாகலின் அதனை நீக்குவதாய திருவருளை அமுதென்றார். சுகானந்த மென்னும் ஒருபொருட் பன்மொழி பேரின்பமென்னும் பொருட்டாய் நின்றது. தற்போத மழிந்த அதீதநிலையென்பார் "உள்ளிருந்தேன்" என்றார்.

"வண்டிமிர்காத் தேனைப் பொழிகமலை" என்பது அகப் பாடல்களிற்போல உள்ளுறை யுவமமாகக் கொள்ளப்படும். படவே, தம்மை யடைந்து போற்றும் பக்குவர்கட்கு ஞானத்தையருளும் ஞானாசிரியர் அவர் என்பது பெறப்படும். நூலைச் சொல்லும் நல்லாசிரியர்க்கு, வண்டிற்கு நெகிழ்தல்பற்றி மலரை உவமை கூறுதலுங் காண்க. "பொற்பாத" மென்றது அருமையும் பெருமையும் தூய்மையும்பற்றி. ஞானத்தின் வடிவாகலின் அங்ஙனங் கூறப்பட்டது. ஏகாரம் தேற்றம்.

இஃது, அருட்குரவனை யடைந்தார் எய்தும் பயனைத் தம் அநுபவத்தின்வைத் துணர்த்தியவாறு.

---

உள்ளிருந்தே யென்று முணர்த்துகினுங் கண்டிலரென்
றுள்ளும் புறம்புமா வோமென்று—மெள்ள
நரருருவா யாரூரின் வந்தா னமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன். (௬)

இதன் பொழிப்பு:— நம்மை யாளாகக்கொண்டு திருவருளைத் தந்த ஞானப்பிரகாச குரவர், நாம் எஞ்ஞான்றும் உயிர்க்குயிராய் உண்ணின்றுணர்த்திவரவும், அங்ஙனம் உணர்த்துமாற்றை இவர் உணர்ந்திலராகலான் இன்று அகத்தேயன்றிப் புறத்தும் வெளிநின்றுணர்த்துதும்

---

6. We dwell within and ever prompt them
Still they have not found us out;
Now let us be within, without as well,
Thought Jnanaprakas.
And soft in human form He came
In Arur; into His Grace accepted us.

எனக் கருதி, நம்மனோரு ளொருவர்போல மென்மையாக மனித்தவுருக் கொண்டு திருவாரூரின்கண் வந்தருளினர் எ-று.

இருணகலம்:— கண்டில ரென்புழி ஆகலா னெனநின்ற சொல்லெச்சம் வருவிக்க. என்று மென்றது அநாதி தொட்டெனவும், இன்றென்பது இம் முத்திகாலத்தெனவும் பொருள்படும். புறத்தே வருங்கால் தனது இயற்கை வடிவமாக வருதலுமுண்டாயினும் அது நம்மனோர்க்கு அச்சத்தைவிளைக்கும் வன்மைப்பாட்டதாகலின் அதனை நீக்கிறுரென்பார், "மெள்ள நரருருவாய் வந்தான்" என்றார். மெல்ல வென்பது மெள்ளவென மரீஇயிற்று. இங்ஙனங் கூறவே, உண்ணின்றுணர்த்தலும், தனது இயற்கைவடிவான் முன்னின்றுணர்த்தலும், ஆசான் மூர்த்தியாய் வந்துணர்த்தலுமென முதல்வன் ஞானத்தையுணர்த்து முறைமைதான் மூவகைத் தென்பதும் அவை உணர்த்தப்படுவாரா துணருமுறைமை வேறுபாட்டிற்கேற்ப நிகழுமென்பதும், அவ்வாறன்றி மாறியுணர்த்திற் பயனின்றென்பதும் பெறப்பட்டன. அவ்வேறுபாடுகள்தாம் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் பாகுபாட்டிற்கேதுவாயுள்ள பந்த வேறுபாடுகளென்பதும், அவர்கட்கு முதல்வன் ஞானத்தையுணர்த்து முறைமைகள் இவையென்பதும் பிறவும் மேலேகாட்டினும்; கண்டுகொள்க.

இனி, ஆசான்மூர்த்தியாய் வந்துணர்த்துதல் சகலருள்ளும் அன்புநெறியானன்றி நூனெறியி னொழுகுவார்க்கேயா மென்பதும் ஆண்டேயுரைத்தாம். அணைமுறிந்த யாறுபோல அன்பின் மிகுதியாற்றேன்றிய யாதானுமோராற்றானுதல் நூல்களின் விதித்தவாற்றானுதல் ஈசன்பணியினை மேற்கொண்டு பாரம் அப்பணியல தொன்றிலராதலும், பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், அப்பணி தவாமையுய்த்தலும், கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும்வேண்டா விறலின் விளங்கலும், வேண்டுமாறு விருப்புறுவேடங் கோடலும் அன்புநெறியெனவும், மடைவழிச் செல்லும் நீர்போல நூல்களின் விதித்தவாற்றானே ஈசன் பணியினை மேற்கொண்டு அப்பணியேயன்றிப் பிறபணியினையும் பாரமாகக்கோடலும், தாம் மேற்கொண்ட ஈசன் பணியினைக் காலமிடங்கட்கேற்ப ஏற்றபெற்றியானுய்த்தலும், உய்க்குங்காலெல்லாம் பிறவியினீங்கி வீடுபெறுதற் பொருட்டெனவுய்த்தலும், தத்தம் பிறப்பிற்கும் நிலைக்குமேற்ற வேடங்களை மேற்கோடலும் நூனெறியெனவும் அவற்றின் வேறுபாடுணர்ந்துகொள்க.

இதனானே, அன்புநெறியினொழுகுதல் முன்னைத் தவமிகுதியான் ஆணவமலம் பெரிதும் மெலியப்பெற்றார்க்கன்றிக் கூடாதென்பதறியப் படுதலின்அவர் விஞ்ஞானகலர் பிரளயாகலரோடொத்தாராதலுமுணர்ந்து

கொள்க. அறுபான்மும்மை நாயன்மாரும் அன்புநெறியி னொழுகினோரும் திருவாதவூரடிகள் ஞானெறியி னொழுகினோருமாகலானும், அன்புநெறியி னொழுகினோரையே திருத்தொண்டரெனத் தொகுத்தோதி அவரது திருத்தொண்டி னெறியை உலகிற்கு விளக்குவான் போந்தனராகலானும் ஆளுடைய நம்பிகள் திருவாதவூரடிகளைத் திருத்தொண்டத் தொகையுள் எடுத்தோதிற்றிலர். இக்கருத்தறியாதார் திருத்தொண்டத்தொகையுள் திருவாதவூரடிகளை எடுத்தோதாத தென்னையோ வென்றிடர்ப்படுவர். யாம் ஈண்டுரைத்த இவ்வேறுபாட்டினை யுணரமாட்டாதார்க்கிது காட்டுதலரிதென்க.

இனி, ஆளுடைய அடிகளார்க்கு முதல்வன் ஆசிரியனாய்வந் தருள்செய்யினும், அது தானே அவ்வாறு வந்தருள்செய்ததாகலின் அது பிற ஆசான்மூர்த்தியைப் பற்றிநின் றருள்செய்தலின் வேறாம். அதனான் அன்னதொரு தகுதி விசேடம் ஆளுடைய வடிகளார்மாட் டுண்டென்ப துணர்க.

இஃது, உண்ணின் றுணர்த்துகின்ற முதல்வன் அங்ஙனமே யுணர்த்தவமையும்; ஆசிரியனாய் வருதல் வேண்டா வென்னுமையத்தினை நீக்கி அதனை வலியுறுத்தவாறு.

---

இருளுதய நீக்கு மிரவியைப்போ லென்னு
ளருளுதய நன்று யருளி—மருளுதய
மாற்றியவ னாரூரன் மாமறையு மாகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். (எ)

---

7. Like the sun that driveth the enshrouding darkness
With the dawn of His Grace, well bestowed in me
The appearance of ignorance He drove
He of Arur, that uttered the Vedas
And Agamas great, Jnanaprakas.

இதன் பொழிப்பு:— ஒளித்தோற்றத்தினைத் தந்து இருட்டோற்றத்தினைப் போக்கும் ஞாயிற்றைப்போல எனதுள்ளத்தே அருட்டோற்றத்தினைக் குறைவறக் கொடுத்து மருட்டோற்றத்தினைத் துடைத்தருளியவர்; திருவாரூரின் கணெழுந்தருளியிருப்பவரும் பெரிய வேதாகமங்களை ஐயமற வுணர்த்தியவருமாகிய ஞானப்பிரகாச குரவர் எ-று.

இதனகலம்:— பொருட்கட்போந்த அடைக்கேற்ற அடை உவமத்தும் வருவிக்கப்பட்டது. ஒளிதோன்றியவிடத்து இருள் தோன்றாது நிற்றலன்றிக் கேடெய்தலின்மையின் இருளை நீக்கியென்னாது "இருளுதய நீக்கி" என்றும், அருட்டோற்றங் கேட்டன்மாத்திரையாற் சிறிதுண்டாய துணையானே மருள் முற்று நீங்காது ஏனைச் சிந்தித்தல் தெளிதல்களைச் செய்தலான்மிக்கு விளங்கியவழியே முற்றும் நீங்குதலானும் அங்ஙனமவற்றைச் செய்வித்தலே ஆசான் மூர்த்தியாய் வந்தருளுதற்கட்படுஞ் சிறப்பாகலானும் "அருளுதய நன்றுயருளி மருளுதய மாற்றியவன்" என்றுங் கூறினர். மருள் என்றது பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மயக்கவுணர்வை. அஃது, ஆணவமலங் காரணமாகச் சகலாவத்தைக்க ணிகழ்வது. அவ்வாதனை ஞானம் வாயிலாகச் சிவத்தை யுணர்ந்து அதிலழுந்துங்காறும் யானெனதென்னும் பகுப்பினைச் செய்யும். அதனை முற்ற நீக்கினரெனவே, சிவத்தி லழுந்திநிற்கு நிலையினை யருளினரென்றதாயிற்று. அங்ஙனநிற்றல் அருள்விளக்கம் மேலிட்ட வழியேயென்க. "மாமறையும் ஆகமமுஞ் சாற்றியவ" னென்றது நூல்களானும் பொருந்துமாற்றானுஞ் சிந்திப்பித்துத் தெளிவித்தாரென்றவாறு.

பாசநீக்கமும், அருள் விளக்கமும், ஆனந்தப் பேறுமென ஆசான் மூர்த்தியா னெய்தும் பயன் மூன்றனுள், இது பாச நீக்கமும் அருள் விளக்கமுங் கூறியவாறு.

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருந்து விடவே—அழியாத
பூரணா! செங்கமலப் பொற்பாதா! தென்கமலை
ஆரணா! நாயேற் கருள். (அ)

**இதன் பொழிப்பு:—** அழிவின்மையும் வியாபகமும் உடையீர், செந்தாமரை மலர்போலும் அழகிய திருவடியினீர், திருவாரூரின்கணெழுந்தருளியுள்ள மறைமுதல்வரீர், நீங்காத பேரின்பத்துளடங்கி உலகின் மீளாது அவ்வின்பமேயாய்விடும்படி அடியேனுக் கருள்செய்யீர் எ-து.

**இதனகலம்:—** "பேரின்பத்துள்ளா" யென்றது யானெனதென்னும் பகுப்பிறந்தவழி உளதாகுஞ் சிவானந்தத்தினழுந்தி யென்றவாறு. "உலகில் விழியா திருந்துவிடவே அருள்" என்றதனன் அங்ஙனம் அழுந்தியவழியும் ஓரோர்கால் உலகின் மீளவருத லுண்டென்பதும், அம் மீட்சியும் ஆசிரியன் றிருவரு ளுணர்வானே நீங்குமென்பதும், அதுவும் நீங்கிய நிலையே முடிந்த பேறுமென்பதும் பெறப்பட்டன.

இஃது ஏனை ஆனந்தப்பேறு கூறியவாறு.

---

8. Merged in great unending joy
To remain unawakened to the world,
Thou Perfect One, Everlasting,
Thou with golden feet like lotus red,
Thou of Kamalai of the South
Lord of the Vedas, help Thou me,
Me as lowly as a dog.

தேடுந் திரவியமுஞ் சிற்றறிவும் பற்றுதலும்
கூடும்பொய் என்றருளிற் கூட்டினன் — நாடரிய
ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். (௯)

இதன் பொழிப்பு:— திருவாரூரின்கண் எழுந்தருளியுள்ள முதல்வராய அளத்தற்கரிய பெருமையுடைய ஞானப்பிரகாசரென்னும் அருட்குரவர், இவ்வுலகில் ஈட்டப்படும் செல்வமும், யாக்கையும், அவற்றைப் பொருளென்றறியும் புல்லறிவும், அவற்றின்கட் செய்யும் பற்றும் பொய்யெனவும், முதல்வன் றிருவரு ளொன்றுமே மெய்யெனவுங்காட்டி அவற்றினின்று நீங்கித் திருவருளிற் சேர்ப்பித்தார் எ-து.

இதனகலம்:— செல்வமாவது, இன்பம் விழையாது இடும்பை இயல்பெனக்கொண்டு உழத்தலான் வருவதென்பார் "தேடுந் திரவியமு" மெனவும், உடம்பாவது வியாபகவுணர்வைத் தடுப்பதொரு சிறை யென்பார் "கூடு" எனவும், உடம்பாணிகழு மறிவு பொதுமையாய ஏகதேச அறிவன்றி உண்மையாய வியாபக அறிவன்றென்பார் "சிற் றறிவு" மெனவும், அவ்வேகதேச அறிவான்வருஞ் செயற்கையே உலகப் பற்றென்பார் "பற்றுதலு" மெனவுங் கூறினர். கூடும் பொய்யென்றது செய்யுளோக்கி இறுதிக்கண் வைக்கப்பட்டது.

திரவிய முதலியவற்றைப் பொய்யென் றரெனவே, திருவரு ளொன்றையே மெய்யென்று ரென்பதும், திருவருளிற் கூட்டினரெனவே திரவிய முதலியவற்றிற் பிரிவித்தாரென்பதுந் தாமே பெறப்பட்டன.

---

9. The treasure that is sought,
The knowledge imperfect
The desire that clingeth
All these are lies,—In Grace
He made known to us, Jnanaprakas
That dwelleth in the great city,
Kamalai, noble and fair,
The King hard to approach,
Adorned with the crescent moon.

இனித் திரவிய முதலியவற்றைப் பொய்யென்றலாவது சுவரிடத்துத் தீட்டிய ஓவியங்களைத் தனித்தனி கண்டின்புறுவார் சுவரினை முற்றாக நோக்கியவழி அவர்க்கு அவ்வோவியத் தோற்றமும், அதனான் வரும் இன்பமும் இல்லையாயினாற்போல, மண்ணும் விண்ணுமாய உலகங்களையும் அவற்றுட்பட்ட பொருள்களையுந் தனித்தனி நோக்கி, அவற்றிற் பற்றுச் செய்வார் அவற்றின் காரணநிலையினை நோக்கியவழி அவர்க்கு அவ்வுலகத்தோற்றமும் அதன்கணிகழும் பற்றும் இல்லையாதலை விளக்குதல். திருவருளொன்றுமே மெய்யென்றலாவது ஓவியங்கட்கெல்லாம் தாரகம் சுவர்த்தல மாதல்போல உலகங்கட்கெல்லாந் தாரகம் திருவருளே யென்ப துணர்த்துதல். திரவிய முதலியவற்றிற் பிரித்துத் திருவருளிற் கூட்டலாவது நிட்டையி னிற்குங்கால் வாதனைபற்றி ஏகதேசவுணர்வான் உலகங்காட்சிப்பட வந்தவிடத்து மேற்கூறியவாற்றான் ஏகதேசவுணர்வை யறுத்து உலகநோக்கையகற்றி, வியாபக உணர்வை விளக்கித் திருவருளைப் பற்றச்செய்தல்.

"வானப் பிறையணிந்த மன்" என்றது தக்கனது சாபந் தொடராவாறு தன்னைப் பற்றுக்கோடாகத் தந்து பிறையை வாழ்வித்த பெருமானாகலின், மலவாதனை தாக்காவாறு தனது திருவருளைப் பற்றுக்கோடாகத் தந்து என்னை வாழ்வித்தானென்னுங் குறிப்புமொழி.

இஃது, "உலகில் விழியாதிருந்துவிட அருள்" என்றிரந்தேற்கு அதனை யிவ்வாற்றா னருள்செய்தானென்பது கூறுமுகத்தான், நிட்டையி னின்றார்க்கு மீட்சிகூடுமாயின் அதனின் நீங்குமாறு இதுவென்பது உணர்த்தியவாறு.

"அருவுமுருவும்" என்னும் வெண்பா முதலாக இத்துணையுங் குருவருளுணர்த்தப்பட்டது. இதனுள் இந்நூலுட் கூறப்படும் பொருள்களெல்லாம் தொகுத்துணர்த்தியவாறு அறிக.

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும்பொய்—மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னி என்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய். (க0)

இதன் பொழிப்பு:— இந்திரியவாயிலாய்க் காண்டல், கேட்டல், பூணல், தரித்தல் முதலிய இன்பநுகர்ச்சிகளெல்லாம் பொய்யாக; மாட்சியோடும் இன்ப வெள்ளப்பெருக்காய், என்னுள் புரையறச் சிறந்து **திருஞானசம்பந்தன்** வீற்றிருப்பதொன்றுமே உண்மையாய் முடிந்தது; எல்லாம் பரமாய்த்தோன்ற, விகற்பங்களனைத்தும் பொய்யென மறைய ஞானசம்பந்தமே நித்தியமாய் நின்றது. மேற்பாடலில் அருளிற்கூட்டவே இவ்வாறு தெளியப்பட்டது.

---

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கினென்றுந் தூங்கல்
அருமை அருமை அருமை—பெருமை இடும்
பாங்காரங் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே. (கக)

இதன் பொழிப்பு:— தற்பெருமை பாராட்டலும், பிறரை எள்ளியுரைத்தலும், யானென்னுஞ் செருக்கும் வெகுளியும் எனதென்னும் பற்றும் பொருள்கள்மேற் செல்லும் அவாவும் நல்லனவுந் தீயனவுமாகச் செய்யும் வினைகளும் என்னும் இம்மலகாரியங்கள் நீங்காத பொழுது முதல்வன் திருவருள் கைவரப்பெற்று அவனோடு ஒன்றாய் நின்று இன்பத் தழுந்தல் என்பது பெரிதும் அரிது எ-து.

---

10. Whatever be seen is lie, whatever be heard is lie,
Whatever be taken up as wholesome work is lie,
Whatever be enjoyed whithersoever is lie. But this,
That Sambandha cometh in sublimity,
Closeth as a flood of joy and hath His abode in me,
This alone is true.

11. Hard, hard, hard it is to be lapped
In single-minded communion with the growing grace of God,
When conceit, cruelty, egotism, anger
Attachment and actions born of desire
When these are not eschewed.

இதனகலர் :— ஒருமையுடன் தூங்கலென இயையும். தூங்கல் இன்பத்தழுந்த லென்னும் பொருட்டு. அடுக்கு வலியுறுத்தற்கண் வந்தது. அகங்காரம் ஆங்காரமென மரீஇயிற்று.

இது, முதல்வன் எல்லார்க்கும் ஆசான்மூர்த்தியாய் வந்தருள் செய்யாது சிலர்க்குமட்டுமே அருள் செய்தலென்னை? என்னும் வினாவிற்கு விடையாக, எரிகொளுவுவார் ஈரவிறகின்கண் அது பற்றுமையறிந்து கொளுவாமைபோலப், பரிபாக மில்லாதார்க்கு ஞானத்தை யுணர்த்திய வழியும் உணரமாட்டாமையின் அவர்க்கு முதல்வன் ஆசான்மூர்த்தியாய் வந்து அருள்செய்திலனெனக் கூறியவாறு.

---

தன்பெருமை யெண்ணாமை தற்போத மேயிறத்தல்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்றல்
நடலைப் பிறப்பொழியு நாள். (கஉ)

இதன் பொழிப்பு:— தனது பெருமையைத் தான் எண்ணாத பணிவும், தன் முனைப்பாகிய சிவபோதம் நீங்குதலும், மின்னுப்போலக் கடிதிற் றோன்றி மாய்தலையே பெருமையாகவுடைய உலகத்தினது நிலையாமை நோக்கி அதனை விரும்பாமையும், தன்னிடத்துள்ள வுடம்பை அதன்புன்மை நோக்கி எஞ்ஞான்றும் அருவருத்தொழுகுதலும், பெரும் பொருளாகிய சிவத்தில் மனம் பதிதலுமாகிய இவை தோன்றுங்காலமே துன்பத்தைத்தரும் பிறவி நீங்குங் காலம் எ-து.

---

12. Thinking not of one's own glory, losing self-conceit,
Discarding the world whose glory is that of the lightning
flash, so fleeting,
Despising one's own body, day in, day out
Holding holy communion with the exalted Lord—
The day when these do happen is the day
When painful birth doth cease.

இதனகலம்:— தன்பெருமை எண்ணுமை முதலியவற்றை ஈண்டு அவை வாய்த்தற்கு அறிகுறிமாத்திரையாய் நிகழ்வனவாகக்கொள்க. [1]"வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பி" என்றார் சித்தியுள்ளும். எண்ணுமை முதலியன தத்தங் காரியங்களை உணர நின்றன.

இது, மேல் மலத்தின் செய்தி கூறியாங்கு, ஈண்டு அதன் பரிபாகத்தின் செய்திகூறி, அவை தோன்றப்பெற்றார்க்கே முதல்வன் ஆசிரியனாய் வருதல் உளதாமென்றவாறு.

---

உரையிறந்தால் உன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை—வரைபெருக
வாசிப் பதுநாவால் வாழ்த்துவது நாடகமாப்
பூசிப்ப துஞ்சுத்தப் பொய். (கங)

இதன் பொழிப்பு— சொல்லிறந்தவழியும், நினைவிறந்தவழியும், கருவிகரணங்களாகிய மறைப்பு இறந்தவழியுமே காணற்பாலனாய அம் முதல்வனை, அவையில்லாதார் ஏட்டின்கணெழுதியவற்றைப் பெரிதும் ஓதுதலும், தோத்திரங்கள் செய்தலும், பூசனைகள் செய்தலும் போலியேயாம் எ-று.

இதனகலம்:— இறந்தாலென்பன மூன்றும் வினைச்செவ்வெண். கருவிகரணங்கள் இருளிடத்து விளக்குப்போல ஆன்மாவுக்கு விளக்கத்தைச் செய்வனவாயினும் அவ்விளக்கத்தாற் றம்மையேகாட்டிச் சிவத்தைக் காட்டாது நிற்றலில் "திரை" யென்றார். வரையென்றது

---

13. It is wholly wide of the mark, feigning and farcical,
To read the sacred lore in ever-extending bounds,
To praise with tongue and worship God,—
The God who is only seen
When word hath ceased, and thought hath died
And the screen of Maya hath been torn asunder.

[1] சித்தி, சூ, 2, பா, 91.

எழுத்தின் வரிவடிவினை. மலைபோலப் பெருக என்றுமாம். "நாடகமா" என்பது எல்லாவற்றோடுஞ் சென்றியையும். பொதுவகையானன்றி அநுபவமாகவுணர்ந்து செய்யாமையின் அவை நாடகமாயின. [1]"நாடகத்தா லுன் னடியார் போல் நடித்து" என்புழியும் நாடகமென்றது ஏனை யடியார்க்குள்ள அன்பின் அநுபவந் தமக்கின்றென்னுங் கருத்தா னென்க. சுத்தப் பொய்யென்றது அவை அன்னவாகலின் அவையே மேலும் உண்மை யநுபவத்தினைத் தாராமைபற்றியென்க. எனவே, உண்மைஞான மொன்றுமே அநுபவங் கூடுமாகலின் அத்தகைய ஞானத்தை யடைவித்தற் பயத்தவாமிவையல்லது பிறிதில்லையாயிற்று.

இது, தன்பெருமை யெண்ணுமை முதலியன இல்லாதோரும் சிவனூலோதல், சிவனைத் தோத்திரித்தல், சிவனை வழிபடுதல் முதலியன செய்யக்காண்டுமாகலின் அவர் சிவனையடைந்து பிறவிநீங்கற் கிழுக் கென்னை யென்னும் ஐயத்தினை நீக்கி, ஆசிரியனருள் பெறுதார் சிவனூ லோதல் முதலியன செய்யினும் அவை பெருமை இடும்பு ஆங்காரம் கோப முதலியனபோல மலசடையேயாமாகலின், அவர் அவற்றாற் சிவனை யெய்துதல் கூடாதென விளக்கியவாறு. எனவே, அவை ஆசிரியனை யடைவிக்குமுகத்தாற் பயன்படுவன வென்றவாறும்.

---

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக்—குரல்நெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணப் பொருள். (௧௪)

இதன் பொழிப்பு:— ஆசிரிய னருளொன்றே முதற்பொருளைக் காண்டற்கு வாயிலாமெனத் தெருட்டினுந் தெருளமாட்டாத மடமை

---

14. Can it be found the Secret so supreme
Even though thou callest out, night and day,
Unceasingly, till thy voice cracketh hoarse—
O feeble foolish heart!—the Thing
That could not be found even though Vishnu did seek
Cleaving through the solid earth?

[1] திருவாச, திருச்சத, பா, 11.

வாய்ந்த மனத்தினை யுடையோனே! உரையின் மேம்பட்ட உணர்வும் அறிந்திலாத பெரிய மறைபொருளாகிய அம் முதற்பொருளை அல்லும் பகலும் காலவரைவின்றிக் குரல் கேடுறுமாறு பாழ்த்தவாயினுற் கூப்பீடு செய்யுமதனுற் காணவருமோ? மாயோன் நிலத்தைப் பிளந்து தேடியுங் காணவாராத பொருள் அதுவாகலான் எ-து.

இதனகலம்:— உரையுணர்வுகட் கெட்டாது நிற்றல்பற்றிப் 'பரம ரகசிய' மென்றார். அறியாமைவழிப்பட் டோதுதலிற் 'பாழான வாய்' என்றார். வருகின்ற வெண்பாவினுள் ஆகமங்களைக் கூறுதலின் ஈண்டுக் குரனெரியக் கூப்பிட்டுமென்றது வேதத்தை யோதுதலையென்க. நெஞ்சு உடையவனை நெஞ்சென்றது ஆகுபெயர். உம்மையிரண்டனுள் முன்னது இழிவு சிறப்பின்கண்ணும் பின்னது உயர்வு சிறப்பின்கண்ணும் வந்தன. பொருளென்புழி ஆகலானென்னும் சொல்லெச்சம் வருவிக்க.

வேதமோதுவார் பொருண்மையினும் எடுத்தல் படுத்தல் நலித லென்னும் ஓசைவரம்புகள்தாமே சிறந்தனவெனவும் கனஞ்சடை முதலாக வோதிற் பெரும்பயன் செய்யுமெனவுங் கொண்டோதுதலிற் 'குரனெரியக் கூப்பிட்டு' மென்றார். "இரவுபகல் எந்நேர மின்றி" என்றது அத்தொழி லல்லது பிறிதுதொழில் செய்யாதென்னும் பொருட்டாய்நின்றது.

இது, வாசிப்பதனுலும் வாழ்த்துவதனுலும் முதல்வனை அனுக வாராதென்பது ஏனைநூல்கட்கு ஒக்கும்; எல்லா நூல்கட்கும் முதலாய வேதத்திற்கு அஃதொவ்வாமையின் வேதத்தினை முறைப்படி ஓதுவார்க்குச் சிவனையடைதல் கூடுமென்பாரை நோக்கி, வேதந்தானுக, பிறவாக- சொல்லென்பனயாவை அவையெல்லாஞ் சுத்த மாயாகாரியமாய நால்வகை வாக்குக்களாய பாச ஞானமேயாகலின் அதனுற் பாசஞானத்தினு மேலாகிய பதிஞானத்திற்கும் எட்டாத சிவமுதற்பொருளை யடைதல் யாண்டையதெனத் தெளிவித்தவாறு. இவ்வாறு வேதமோதுதல்தானே முத்தியைப் பயக்குமென்னும் மயக்கவுணர்வினுற் சிவனடியார் பெருமை யறிந்து அவரை அடைந்துய்யாது இறுமாந்து கிடப்பாரை நோக்கி யன்றே! [1]"அசிக்க ஆரியங்களோதும் ஆதரைப் பேதவாதப்-பிசுக்கரைக் காணு கண்வாய் பேசாதப் பேய்களோடே" என்றருளிச் செய்ததூஉ மென்பது.

---

[1] திருவிசைப்பா, திருமாளிகைத், கோயில், பா, 5.

ஒருகோடி ஆகமங்க ளெல்லாம் உணர்ந்தும்
பெருகுதவஞ் சித்தியெல்லாம் பெற்றும்—குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாந் தினம். (கரு)

இதன் பொழிப்பு:— அளவிறந்த ஆகமங்கள் முழுதும் உணர்ந்தும் மிக்க தவத்தினையும் அதனன் அணிமாதி அட்டசித்திகளையும் பெற்றும், அருட்குரவனருளைப்பெற்று அவனுணர்த்தியவாற்றினிற்கப் பெறுதார்க்கு அவற்றுற் பயனென்றுமின்றி எஞ்ஞான்றும் உளதாவது மனக் கலக்கமேயாம் எ-து.

இதனகலம்:— "ஒரு கோடி" என்றது மிகுதிக்கு ஓரெண் கூறியவாறு. ஈண்டுத்தவமென்றது நோன்புகளான் உண்டிசுருக்கல், காட்டினு மலைமுழைஞ்சினு முறைதல், ஐந்தீநாப்பணிற்றல், நீர்நிலைநிற்றல் முதலியவற்றை. குருவருளால் வைத்தபடியிருத்தலாவது, "நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்ல வழிநாமல்ல நாமும் அரனுடைமை" ஆதலாற் செய்வனவெல்லாம் அவன் செய்விக்கச்செய்யுஞ் செயல்களாமென்பது உணர்ந்துசெய்கவென அவனுணர்த்தியவாறே உணர்ந்தொழுகுதல். இது செய்யாதார்க்கு மனக்கவலை மாற்றுமாறின்மையின் "சித்தசலனம்" என்றார்.

நூலுணர்வானே உண்மை ஞானம் பிறவாதென்பதனை,

[1] சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமே—ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு.

15. Even though they master a million scriptures
Practise stern austerities and powers mysterious gain,
To the men that cannot be steadfast
Where the Guru's grace hath placed them
There will be mental perturbations
Ever and aye.

[1] திருக்களிற், பா, 6.

என்பதனானும், அருட்குரவனறிவுறுக்கு முறையால் இறைவன் திருவருளை உணர்ந்து அவ்வருள்வழிநிற்கப் பெறாதார் பிறவாற்றாற் பயனெய்தாமையை,

[1] நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்தும்
    நாகமுழை புக்கிருந்துந் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
    நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பின்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
    எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும்இறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
    குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்.

என்பதனானுமுணர்க.

இது, வேதம் உலகர்க்குரிய பொதுநூலாகலானும், ஒருதலைப் படப் பொருண்மை விளக்காமையானும் அதனை யோதுதலாற் சிவத்தை யெய்தலாகா தென்றதொக்கும். ஆகமங்கள் அன்னவன்றிச் சத்திநி பாதர்க்குரிய சிறப்பு நூலாகலானும், ஒருதலைப்படப் பொருண்மை விளக்குதலானும் அவற்றையுணர்ந்தார்க் கது கூடுமென்பாரை நோக்கி, ஆகமங்கள் தாமும் மேற்கூறிய பாசஞானத்தின் வேறன்மையின் அது கூடாதென்று விடுத்தவாறு. நூலுணர்வாற் பயனின்றென்பது கூறுவார் பிறசெயல்களாலும் பயனின்றென்பதும் உடன்கூறினார்; மேலும் ஐய நிகழாமைப்பொருட்டு.

---

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய்—இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை. (௧௬)

---

16. Keep the truth apart for those
Whose love doth grow from more to more
Whose knowledge groweth from out that love
Who wipe out Karma, the cause of pain,
Who go running thirsting after
The Perfection that yieldeth Joy.

[1] சித்தி, சு, 10, பா, 5.

இதன் பொழிப்பு:— இறைவன் மாட்டு முறுகியெழும் அன்பும், அவ்வன்புடனே பிறப்பு வீடுகளின் துன்ப இன்பக் கூறுபாட்டுணர்வும், அவ்வுணர்வினாற் பிறவித்துன்பத்திற் கேதுவாய வினையை நீக்கிக்கோடற் குரிய முயற்சியும், அதனாற் பேரின்பத்தைத்தரும் பரிபூரண நிலையை அடைதற்கண்ணே வேட்கையும் உடையராய் விரையவந்தடையும் தீவிர நிலையுடையார்க்கே அருளாசிரியன் உண்மை ஞானத்தை உணர்த்துதல் உளதாகும் எ-று.

இருணகலம்:— ஆயென்னும் வினையெச்சங்கள் முதலொடுமுடிந்த சினைவினையாய் நின்றன. பூரணத்துக்கென்றது பூரணத்தை யடைதற் கென்னும் பொருட்டாய்நின்றது; பூவிற்குச் சென்றானென்பதுபோல. காரணமென்றது சத்திநிபாதத்தை. வை யென்னும் முதனிலைத் தொழிற் பெயர் "ஆகும்" என எஞ்சிநின்ற பயனிலைகொண்டது. இவ்வாறன்றி முன்னிலை வினையாகக்கொண்டு தம்மாணுக்கரைநோக்கிக் கூறினாரெனக் கோடலுமாம்.

இது, தன்பெருமை எண்ணுமை முதலியன மலபரிபாகத்தில் நிகழும் நிகழ்ச்சியாயினாற்போல, அன்புமிகவுண்டாதல் முதலியன சத்திநிபாதத்தினிகழும் நிகழ்ச்சியா மென்பதுணர்த்தி, அச்சத்திநிபாதம் வாய்க்கப்பெற்றார்க்கே முதல்வன் அருளாசிரியனாய் வந்தருளுதல் உளதாகுமென்பது உணர்த்தியவாறு.

இவ் ஆறுவெண்பாக்களானும் பாசஞான பசுஞானங்களாற் பதிப்பொருள் உணரவாராது பதிஞானமொன்றானே உணரவருமென் பதும், அப் பதிஞானம் அருளாசிரியனை இன்றி அடைதல் கூடாதென் பதும், அருளாசிரியனதருள் மலபரிபாகமுஞ் சத்திநிபாதமு முள்வாய வழியே யுளதாமென்பதும் உணர்த்துமுகத்தான் இறையின்பமாகிய பேரின்பப் பேற்றினதருமை கூறப்பட்டது.

பாசஞான பசுஞானங்களாற் பதிப்பொருளுணரவாராது; பதி ஞான மொன்றானே யுணரவருமென்பது,

[1] ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடு.

---

[1] சிவஞானபோ, சூ. 9.

எனவும்,

[1] பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடி.

எனவும் அருளியவாற்றான் உணர்க.

இனிச் சூக்குமை முதலிய நால்வகை வாக்குக்களாய வேதம் ஆகமமுதலிய சொற் பிரபஞ்சத்தானும் நிலமுதல் நாதமீறாகவுள்ள தத்துவங்களாகிய பொருட் பிரபஞ்சத்தானும் ஆன்மாவின்கணிகழும் ஞானம் பாசஞானமெனவும், இச் சொற்பிரபஞ்சங்களும் பொருட் பிரபஞ்சங்களுஞ் சடமாகலான் அவையெல்லாம் தனக்குக் கீழ்ப்பட்டன என்றுணர்ந்தவழித் தான் அவற்றிற்குமேலாதல் தோன்றலின் யானும் அப்பதியாக முதற்பொருளோடு ஒருங்கொப்பேன் எனத் தனது சுதந்திர மின்மையை மலவாசனையால் மறந்து தன்னைப் பதியோடொப்ப மதிக்கும் ஞானம் பசுஞானமெனவும் உணர்க. இதனை,

[2] வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்
நாதமுடி வானவெலாம் பாச ஞானம்
நணுகியான் மாஇவைகீழ் நாட லாலே
காதலினால் நான்பிரம மென்னு ஞானங்
கருது பசு ஞானம்.

என்பதனா னுணர்க.

ஈண்டு வேதம் ஆகமமுதலிய அனைத்தையும் பாசஞான மென்ற மையான் அருள் நூல்களாற் பயனின்றுபோலுமெனை மலையற்க, அவற்றை ஓதுதலானே பதி ஞானம் விளங்குதற்கு ஏதுவாமாகலான். எனவே, ஈண்டு அவற்றைப் பயனில்லனபோலக் கூறியது, உண்மை ஞானத்தை யுணர் தற்கு அவையேயமையும் குரவனருள் வேண்டா என்பானை மறுத்தற் பொருட்டெனக் கொள்க.

---

[1] சித்தி, சூ, 9, பா, 1. [2] சித்தி, சூ, 9, பா, 2.

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே —மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம். (கஎ)

**இதன் பொழிப்பு:—** பிரகிருதிமாயா காரியங்களாகிய தூலரூப தத்துவங்களையும் அசுத்தமாயா காரியங்களாகிய சூக்குமரூபதத்துவங்களையும், சுத்த மாயாகாரியங்களாகிய பரரூப தத்துவங்களையும் நால்வகை வாக்குக்களாய சத்தப் பிரபஞ்சங்களையும் அவற்றின் வேறாய் அவற்றிற்கு வியாபகமாகிய உயிரினையும், அவ்வுயிரை மறைத்துநிற்கும் மலத்தினையும் இன்பப்பொருளாக வுணர்ந்து, மயக்கத்தினைச் செய்யும் அம் மாயா காரியங்கள் சடமாதலில் தன்னின் வேறென் றறிந்து, நீங்கி அறிவு வடிவமாகத் தற்சொரூபத்தை யறிந்த தன்னை எவ்விடத்தும் விட்டுநீங்காது பொருந்திய பொருள்தானே இன்பப்பொருளென்று உணரற்பாற்று எ-று.

**இதனகலம்:—** உரு அருவென்பன தூலம் சூக்குமமென்னும் பொருளவாயும், ஒளியென்பது தூய்மையென்னும் பொருட்டாயும், வெளியென்பது வியாபகமென்னும் பொருட்டாயும் நின்றன. பண்பிகள் பண்பாகக் கூறப்பட்டன.

இன்பந்தரும் பூரணத்துக்கே தாக முண்டாயவர்க் குணர்த்துதலிற் சிவமென்றது ஈண்டு இன்பப்பொருளென்னும் பொருட்டாயிற்று. ஞானத்தை யுணர்த்தலாவது, பாசத்தொடு நிற்றல் ஆன்மாவிற்கு வேற்றியல்பெனவும் சிவத்தொடு நிற்றலே அதற்குத் தன்னியல்பெனவும் உணர்த்தலேயாமாகலின் இவ்வாறு கூறினர். உருவ முதலியவற்றை யின்பப் பொருளென் றிராதே யெனவே, உயிர் பெத்தகாலத்து அவற்றை யின்பப்பொருளென மயங்கி அவற்றில் தொடக்குண்டு தன்னையுந்

17. Mistake thou not as Sivangm anything
That hath form or that is formless
Or light or space or darkness.
That thing is Sivam Which filleth
Indistinguishably, through and through,
That which hath been realised
In knowledge when purged of ignorance.

தலைவனையும் அறியாது கிடக்குமென்பதும், அந்நிலையினை மயக்க வுணர்வெனவும் நின்னிலை வேறெனவும் முத்திக்காலத்து முதல்வன் ஆசிரியனாய் வந்துணர்த்த உணர்ந்து அவற்றினீங்கிச் சிவத்தை யடையுமென்பதும் போந்தன.

[1] ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்
டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே.

எனச் சிவஞானபோதத்துள்ளும்,

[2] மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகனீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சூழலிற் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

எனச் சிவஞானசித்தியுள்ளுங் கூறப்பட்டமை காண்க.

"உருவை அருவை ஒளியை வெளியை யிருளைச் சிவமென்றிராதே மருளைப் பிரிந்து" என்றிங்ஙனம் வகுத்தோதியதனான் மண்முதல் நாதம் ஈறாகவுள்ள தத்துவங்க ளனைத்தினையும் ஒவ்வொன்றாக இவை சடமென முறையே கண்டுகழித்தல் வேண்டுமென்பதும், "அறிவிற்கண்டதனையென உடம்பொடு புணர்த்துக் கூறியதனான்" அங்ஙனங் கழித்துநின்ற அறிவே தானெனவுணர்தல் வேண்டுமென்பதும், "தன்னைப் பின்னமற எங்குஞ் செறிந்த பொருள் தானே சிவம்" என்றதனான் தத்துவங்களைக் கண்டு கழித்த வறிவாகப் பொதுவகையா னுணரப்பட்ட தனது உண்மைதான் யாதென்றாராயும்வழி முன்னும் பின்னுமாகிய எஞ்ஞான்றும் தனதறிவிற் கறிவாகி, யுடனின்று உணர்த்திவருவதோர் அறிவுண்மையுணர்ந்து, அவ்வறிவிற்கு முதலாய் நிற்கு மதுதானே சிவமென்றறிதல் வேண்டுமென்பதும் போந்தவாறுணர்க. அறிவிற்கறிவாய்த் தோன்று மதுதானே பதிஞானமாகிய முதல்வன் ஞானமாம். அதன் வழியாக முதற்பொருளைக்

---

[1] சிவஞானபோ, சூ, 8. [2] சித்தி, சூ, 8, பா, 1.

காண்டல்தானே அதனை அடைதலாகலின் அதனை யடைகவெனக் கூறுது, "செறிந்த பொருள்தானே சிவம்" எனக் கூறியொழிந்தார். இது, "வருங்காரணர்க் குண்மைவை" என மேற்கூறப்பட்ட உண்மை ஞானம் இதுவென்ப துணர்த்தியவாறு.

இதனுற் கருவிகளினீங்கி முதல்வனையடைதலே ஞானச்செய்தி என்பது பெறப்படும். இஞ் ஞானச் செய்தியை இங்ஙனமே பாசநீக்கமுஞ் சிவப்பேறுமென் றிரண்டாகவும், அவற்றுட் பாசநீக்கத்தினை ஆன்ம தரிசனம் ஆன்மசுத்தியெனவும், சிவப்பேற்றினை ஆன்மலாபமெனவும் வைத்து மூன்ருகவுந் தொகுத்தும், இனிப் பாசநீக்கத்தினைத் தத்துவ ரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி எனவும், சிவப்பேற்றினைச் சிவரூபம், சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகம் எனவும், பத்தாக வகுத்தும், இன்னும் இவற்றைப் பூதப்பழிப்பு, பொறியறவுணர்தல், அந்தக்கரணசுத்தி, கலாதிஞான நிராகரணம், சுத்ததத்துவதூடணம், தத்துவாதீதம், சகலதரிசனம், கேவலம், கேவலதரிசனம், கேவலாதீதம், தன்னுண்மை, சைதன்னிய தரிசனம், ஞானதரிசனம், பரைதரிசனம், பரையில்வியாத்தம், பரா யோகம், பராபோகம், சுத்தபராயோகம், சுத்தபராபோகம், சாக்கிரா தீதம், பரையிலதீதம், சுத்தஅவத்தை, சுகசொரூபம், சுகாதீதம், சுகப்பேறு, பரமானந்த தரிசனம், பரமானந்தயோகம், பரமானந்தபோகம், பரமா னந்தமேலீடு, பரமானந்த அவசம் என முப்பதாக விரித்துங் கூறுப. அவற்றுள் இரண்டாகக் கூறுதலைச் சிவஞானபோதத்துள்ளும், மூன் ருகக் கூறுதலைச் சிவப்பிரகாசத்துள்ளும், பத்தாகக் கூறுதலை உண்மை நெறிவிளக்கத்துள்ளும், முப்பதாகக் கூறுதலைத் துகளறுபோதத்துள்ளுங் காண்க. இவற்றுட் பத்துவகையாகக் கூறுதல் தொகுத்தலும் விரித்தலு மாகாது இடைநிற்றலிற் பயிறற்பாற்று என்னுங் கருத்தால் அதனைத் தசகாரியமெனப் பின்னுள்ளோர் விளங்கக் கூறுவாராயினர்.

[1] எல்லா வகையும் இயம்பும் இவனகன்று
இல்லா வகையை நினைந்து.

என்பவாகலின் இங்ஙனந் தொகுத்தும் வகுத்துங் கூறுவனவெல்லாம் உயிர் பாசத்தினீங்கிச் சிவத்தினை அடையுமாற்றினைப் பல்லாற்ருனும் பற்றுதற்பொருட்டேயாம் என்க.

---

1 [illegible] பா. 10

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சுகமாகி இன்ப சுகமாய்ச்—சுகாதீதத்
தானந்த வெள்ள மதுவாய்ச் சுகத்தையகன்
றானந்த மாதியிலா தான். (கஅ)

**இதன் பொழிப்பு:—** மன முதலிய கருவிகளைத் தன்னின் வேறாய சடமென்றறிந்த அறிவே தானாகி, அதனாற் சுட்டுணர்வு நீங்கப்பெற்றுப் பின் வியாபகமாயறியும் முதல்வனறிவினைத் தலைப்பட்டுப் பின் அவ்வறிவின்கட்டோன்றும், சுகப்பிரபையைப் பெற்றுப் பின் அதற்கு மேலாய சிவப்பேற்றின்கண் தோன்றும் பரமானந்த வெள்ளத்தினைக் கூடிப் பின் அதன்கண் தன்னை மறந்து அழுந்தினவனே முடிவுமுதலும் அறியவாராத பரிபூரண இன்பத்தை எய்தினோனாவன் எ-று.

**இதனுரை:—** அகமாதி எனவே, தோற்றமுறைபற்றி அதற்குக் கீழுள்ள கருவிகளும், ஒடுக்கமுறைபற்றி அதற்கு மேலுள்ள கருவிகளுங் கொள்ளப்படும். தன்னை அறிவாகி எனவே, கருவிகள் சடமாக என்பது பெறப்படும். கண்ட அறிவா யெனவே, அங்ஙனங் காண்டல் முதற்கட் செய்யப்படுவதென்பதுங் கொள்க. எங்குஞ் சுகமாய் என்புழிச் சுகமென்றது அதற்கேதுவாகிய அருள்ஞானத்தை. இன்பசுகம் இன்பத்தை யுடைய சுகம்; என்றது துன்பத்தோடுகூடாத சுகமென்றவாறு. விடய சுகங்கள் துன்பத்தோடு பொருந்திவருவனவாகலின் அவற்றோடு ஒருவாற்றானும் ஒவ்வாததென்றதற்கு அங்ஙனங் கூறப்பட்டது. சுகாதீதமென்பது அவ்விடத்து உளதாஞ் சிவப்பேற்றினைக் குறித்துநின்றது. இறுதிக்கட்சுகம் பரமசுகமென்னும் பொருட்டாய் மேனின்ற ஆனந்தத்தைச் சுட்டுஞ் சுட்டளவாய் நின்றது. அகறல் ஈண்டு அவசமாதலின் மேற்று.

---

18. He who is the knowledge realised
Within, without
Who is all-pervading joy, delightful happiness
Who is the flood of ecstasy transcending joy,
Who is yet, apart from joy
He is the One
That neither end nor beginning hath

இது, மேலுணர்த்தப்பட்ட உண்மைஞானத்தினை உணர்ந்தால் அவ்வுணர்ச்சியாற் பாசத்தின் நீங்குதலுஞ் சிவத்தை அணைதலுமாகிய ஞானச் செய்திகளைச் செய்யுமாற்றினைத் தொகுத்து உணர்த்தியவாறு. இதனுட்சிவத்தையணையுமாறு சிறிது வகுத்துக் கூறப்பட்டது. அவ்வகை யுள்ளே தசகாரியத்துள்ளும் துகளறுபோதத்துள்ளுங் கூறப்படும் படி முறைகளெல்லாம் அடங்குமாறு உய்த்துணர்ந்துகொள்க.

---

இந்தனத்தி னங்கி எரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண்—சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை. (கக)

இதன் பொழிப்பு:— முத்தியிடத்துப் பாசம் இல்லையாக ஆன்மாவுஞ் சிவனுமேயாய் நிற்கின்ற முறைமை, விறகுந் தீயும், வெந்நீருஞ் சூடும், தேனுந் தித்திப்பும், மலரும் மணமும், ஆகாயமுங் காற்றும், கண்ணுங் கதிரொளியும் எஞ்ஞான்றும் வேறற நிற்றல்போல்வதாம் எ-து.

இதனைகலம்:— இந்தனத்தின் அங்கி என்புழி அத்தும் இன்னும் வேண்டாவழிச் சாரியை. எரியுறுநீர் என்றதனை நீருறு மெரியென மாற்றி நீரென்புழி உம்மைவிரிக்க. நீரென்றது ஏற்புழிக்கோடலால் வெந்நீராயிற்று. "நீருறு தீயே" எனவும், "எரியுறு நீர்போல் ஏகம்" எனவும் வருவன காண்க. இந்தனத்தினங்கி முதலியவெல்லாம் உம்மைத் தொகைகள். மலர்ப்போது மலர்தலையுடைய பேரரும்பு; மணங்கமழ்தற்குரியது அதுவே யாகலின் அதனையே கூறினர். ஆன்மாவும் ஈசனுமென்னும் பொருள் கட்கு இவ்வுவமங்களுள் முதன்மூன்றனையும் முறைநிரனிறையாகவும், ஏனைய மூன்றனையும் எதிர்நிரனிறையாகவுங் கொள்க.

---

19. Just as fire in wood, water in fire,
Taste in honey, fragrance in flower,
Ether in air and light in the eye
Are distinct and yet not two
Even so do the soul and the Lord
Stand related in liberation.

விறகிற்றீ, முன்னர் விளங்காது நின்ற சிவம் தானே பின்னர் ஆன்மாவின்மாட்டு விளங்கித்தோன்றுமாற்றிற்கும், வெந்நீரின்கட் சூடு ஆன்மாவின் அறிவிச்சை செயல்களைச் சிவன் தனது அறிவிச்சை செயல் களின்தன்மைய ஆக்குமாற்றிற்கும், தேனில் தித்திப்பு அவ்வழிச் சிவன் இத்தன்மைத்தென்றுரைக்கவாராத இன்பபோகமாய் விளையுமாற்றிற்கும், மலரின் மணம் அப்போகம் மேன்மேலும் புதிது புதிதாய் விளையுமாற் றிற்கும், காற்றிற்கு வான் ஆன்மாவைச் சிவன் தனது திருவடி வியாப கத்துள் அடக்கிக்கொள்ளுமாற்றிற்கும், கண்ணிற் கதிரொளி அம் முத்திக் காலத்தும் ஆன்மாவிற்குச் சிவத்தினது உபகாரமின்றி அமையாதவாற் றிற்கும் உவமையாமென்க.

அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருள் வேறின்மை. அஃதா வது இருபொருள் பிரிப்பின்றி யாண்டும் உடனாய் நிற்பதோ ரியைபு வேறுபாடு. இச்சொற்கு இதுவே பொருளென்பதும் பிறர் பிறவாறு கூறுவனவெல்லாம் பொருந்தாவென்பதும் கடாவிடைகளால் தெரிந் துணர்த்தினமையைச் சிவஞானபாடியத்துட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இனி இன்மை, அன்மை, மறுதலை யென்னும் முப்பொரு ளுணர்த்தற்பாலதாய நகாரம் எண்ணுப் பெயர்முன் வந்தவழி, பிறபொருள் உணர்த்தாது அன்மைப் பொருளே யுணர்த்து மென்பது ஆண்டு இனிது விளங்கிக்கிடத்தலின், அத்துவிதமென்றது இரண்டன்று என்றவாறும். இரண்டாந் தன்மை யுடையதன்கணன்றி இரண்டன்றென அன்மைக் கூற்று நிகழாமையின் ஆன்மாவுஞ் சிவமும் வேறென்பது தானே பெறப்பட்டு, மேற்கூறியவாற்றான் அவை வேறறநிற்கும் என்பது உணரப்படும்.

இது மேற்கூறிய ஞானச் செய்திகளானடையும் முத்திப் பயனது இயல்பு கூறியவாறு.

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
வேறாக நின்றஇடஞ் சொல்லின்—மாறா
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகாண் நீயே புணர். (௨0)

இதன் பொழிப்பு:— முப்பத்தாறு தத்துவங்களையும், ஆணவமலத்தையும் நீங்கி ஆன்மா தனியாக நின்ற இடத்தினை இன்னதெனச் சொல்லுமிடத்து, அது எவ்விடத்தும் நிறைந்துநின்ற வியாபகப்பொருளாகிய சிவமேயாம். அதனை நீங்குதலில்லாத வெறும் பாழ் என்றுகருதுங் கருத்தினைவிட்டுக் கருவிகளோடுங்கூடாது நீ மாத்திரமே சென்று பற்றுவாயாக எ-து.

இதனகலம்:— சொல்லின் எங்குமாய் நின்ற பொருளேகாண் இருளாயபாவனையற்று நீயே புணர் என இயையும். இருளென்பது ஈண்டுப் பாழ் என்னும் பொருட்டு. கருவிகள் முப்பத்தாறனையும் நீங்கியவழி உளதாவது இருளே. அது ஆணவமலமெனக் கண்டுகழிப்பின் மேற்பொருளொன்றுந் தோன்றாமையின் அவ்விடத்து ஆன்மா நிற்பது வெறும் பாழிற்போலுமென மலையலுறுவார்க்கு அம் மலைவினையறுத்து, அங்ஙனம் பாழ்போலத் தோன்றுமதுதானே சிவமெனவும், அஃது இதுகாறுங் கண்டுவந்த மாயாகாரியப் பொருள்போலச் சுட்டுணர்விற் படாது நிற்றலான் வெறும் பாழ்போலத் தோன்றாநின்றதெனவும், அதனான் அதனை அங்ஙனம் பாழென்றே யொழியாதும் முன்னர்ப்போலக் கருவி கரணங்களைக்கொண்டு காணமுயலாதுங் காண்டல் வேண்டுமென்று உணர்த்தியவாறு. எங்குமாய் நின்ற என்றது வியாபகப்பொருளாதலின் ஏகதேசக் காட்சிக்கொப்பதா மென்றவாறு. ஏகாரங்களிரண்டனுள் முன்னையது தேற்றம்; பின்னையது பிரிநிலை.

தத்துவங்கள் முப்பத்தாறாவன:— ஆன்மதத்துவம் இருபத்துநான்கும், வித்தியாதத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்துமாம். ஆன்ம

---

20. Wouldst thou know the place
Where the soul doth stand alone
With tatvas thirty six and Anava cast off,
Beyond the darkness of ceaseless thought?
Behold the Thing that standeth everywhere;
Unite thyself with It.

தத்துவம் இருபத்துநான்காவன:- பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பூதங்கள் ஐந்தும், சோத்திரம் துவக்கு சட்சு சிங்ஙுவை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்கள்ஐந்தும், வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னுங் கன்மேந்திரியங்கள் ஐந்தும், சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தமென்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் அந்தக்கரணங்கள் நான்குமாம்.

வித்தியாதத்துவம் ஏழாவன:— காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன.

சிவதத்துவம் ஐந்தாவன:— சிவம், சத்தி, ஈசுரம், சதாசிவம், சுத்தவித்தை என்பன.

இவற்றுட் சிவதத்துவம் ஐந்துஞ் சுத்தமாயையிற் றோன்றுவன. வித்தியாதத்துவம் ஏழும் அசுத்தமாயையில் தோன்றுவன. ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் பிரகிருதி மாயையிற் றோன்றுவன. சுத்தமாயை, மாமாயை, ஊர்த்துவமாயை, குடிலை, விந்து என்பன ஒருபொருட் சொற்கள். அசுத்தமாயை, மிச்சிரமாயை, மாயை, அதோமாயை, மோகினி என்பன வொருபொருட் சொற்கள். பிரகிருதிமாயை, மூலப்பகுதி, மான் என்பன ஒருபொருட்சொற்கள். இம் மூன்று மாயைகளுள் பிரகிருதி மாயை தனிமாயை யன்று, அசுத்தமாயை ஒருபுடைப் பரிணமித்த பரிணாமமே. ஏனைச் சுத்தமாயை அசுத்தமாயை இரண்டும் வேறுவேறு மாயையெனவும், மாயை ஒன்றே மலகன்மங்களோடு விரவிய பகுதி அசுத்தமாயையெனவும் மலகன்மங்களோடு விரவாது நிற்கும் பகுதி சுத்தமாயை எனவும் இருவகை நிலையுடையதாய் நிற்குமெனவும் இருவேறுகருத்துக்களுள. அவற்றுட் பின்னையது வலியுடைத்தென்க.

இனி ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் மூலப்பகுதியினின்று தோன்றுங்கால் மூலப்பகுதி சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களும் விளங்காதுநின்ற நிலையினீங்கி, அம்முக்குணங்களும் விளங்கக் குணதத்துவமென நிற்க, அதனுள் சாத்துவிகக் கூற்றினின்று புத்திதத்துவம் தோன்றும்; புத்திதத்துவத்தின் இராசதக்கூற்றின் ஆங்காரதத்துவம் தோன்றும்; அவ்வாங்காரதத்துவம் முக்குண வேறுபாட்டால் தைசதாகங்காரம் வைகாரிகாகங்காரம் பூதாதியகங்காரம் என மூன்றாய்நிற்கும்; அவற்றுள் தைசதாகங்காரத்தினின்று மனமும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். வைகாரிகாகங்காரத்தினின்று கன்மேந்திரியங்கள் ஐந்தும் தோன்றும். பூதாதி யகங்காரத்தினின்று

தன்மாத்திரைகள் ஐந்தும் தோன்றும். தன்மாத்திரைகள் ஐந்தனுள் சத்தமாத்திரையாய் நிற்பதாய சத்ததன்மாத்திரையில் ஆகாயமும், சத்தமும் பரிசமுங் கூடிநிற்பதாய பரிசதன்மாத்திரையில் வாயுவும், அவற்றோடு உருவம்கூடி நிற்பதாய உருவத்தன்மாத்திரையில் தேயுவும் அவற்றோடு இரதமுங் கூடிநிற்பதாய இரததன்மாத்திரையில் அப்புவும், அவற்றொடு கந்தமுங்கூடி நிற்பதாய கந்ததன்மாத்திரையில் பிருதிவியுந் தோன்றும். தன் மாத்திரையாவது சத்தமுதலியன சிறப்புவகையான் விளங்கித்தோன்றாது, பொதுமையின் நிற்கும் நுண்ணிலை. தன்மாத்திரைகள் பிருதிவிமுதலிய பூதங்கட்கு முதலாதலின் அவை சூக்கும பூதமெனவும்படும். பிருதிவி முதலியன மாபூதம் தூலபூதம் எனப் பெயர்பெறும். ஆகாய முதலிய பூதங்கட்கு முதலாய்த் தன்மாத்திரை யெனப்படும் சத்தமுதலியன வேறெனவும், பூதங்களின் குணமாய்ச் செவி முதலியவற்றிற்கு விடயமாய்ப் புலப்படும் சத்தமுதலியன வேறெனவும் உணர்ந்துகொள்க. அவ்விரு வேறுவகைப் பொருள்களையும் பெயரொருமைபற்றி மலையற்க. தன்மாத்திரைகள் தத்துவங்களும், விடயங்கள் தாத்துவிகங்களுமாம் என்க. ஆகாயமுதலிய பூதங்கள் ஒன்றினொன்று தோன்றுமென்றல் சித்தாந்தவழக்கு அன்றென்க.

இனி ஆகாயமுதலிய பூதங்கள் சத்தமுதலிய ஐம்புலவடிவிற்றாய்க் காணப்படும் உலகத்தொகுதியாய்ப் பரிணமித்துநின்று அவற்றையுணரும் ஞானேந்திரியங்கட்கு அங்ஙனம் உணர்தற்கண் வலிமையைத்தந்துநிற்கும். அதனால் ஞானேந்திரியங்கள் சத்தமுதலிய விடயங்களைப் பொதுவகையான் ஆன்மாவிற்குணர்தற் கருவியாம். பின்னர்ச் சித்தம் இஃதியாதாகற்பாற்றெனச் சிந்தித்தல் கருவியாம். பின்னர் மனம் இஃது இன்னது ஆமோ அன்றோ எனச் சங்கற்ப விகற்பங்களைச் செய்தற்கருவியாம். பின்னர் ஆங்காரம் இதனை இன்னதெனத் துணிவேனென்று எழுதற் கருவியாம். பின்னர்ப் புத்திதத்துவம் இஃது இன்னதெனத் துணிதற் கருவியாம். வாக்குமுதலிய கன்மேந்திரியங்கள் புத்திதத்துவம் நிச்சயித்தற் கேற்ப இருத்தல் ஏற்றல் முதலிய செயல்களைச் செய்தற்கருவியாம். இவ்வாற்றான் ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் ஆன்மாவிற்குக் கருவியாய்ப் பயன்படுமாறு அறிந்துகொள்க.

இனி, வித்தியாதத்துவங்கள் ஏழும் அசுத்தமாயையில் தோன்றுங்கால், முதற்கண் ஏனை ஆறு தத்துவங்கட்கும் முதலாகிய மாயாதத்துவந் தோன்றும். அதன்கண் முன்னர்க் காலமும், அதன்பின் நியதியும், அதன் பின் கலையும் தோன்றும். பின்னர்க் கலையினின்று வித்தையும், வித்தையினின்று அராகமுந் தோன்றும். இவற்றுட் காலதத்துவம்

இறப்பு நிகழ்வு எதிர்வென்னும் வேறுபாட்டான் ஆன்மாக்களுக்கு வினைப்பயன்களை வரையறைசெய்து கொடுக்கும். நியதிதத்துவம் ஒருவர் செய்தவினைப் பிறரொருவர்க்காகாது அவ்வவர்செய்தவினை அவ்வவர்க்கே யாமாறு நியமித்துக்கொடுக்கும். கலை வித்தை அராகம் என்னும் மூன்று தத்துவங்களும் முறையே ஆன்மாவினது கிரியாசத்தி ஞானசத்தி இச்சா சத்திகளை ஆணவமல சத்தியைச் சிறிதேநீக்கித் தொழிற்படச்செய்யும். இக்காலமுதலிய ஐந்தனோடுங் கூடியவழியன்றி ஆன்மா ஒன்றனை யறிதலும் செய்தலும் இயலாது. ஆதலின் இவ்வைந்தனையும் கஞ்சுக மாக்கிப் பஞ்ச கஞ்சுகத்தினை எய்திநின்றவுயிரே போகநுகர்ச்சிக்கு உரியதென்ப. இனிப் புருடதத்துவம் ஏனைத்தத்துவங்கள்போலத் தனித்த தொரு தத்துவமன்று. பஞ்சகஞ்சுகமுடைய வுயிர் பிரகிருதி மாயா போகங் களை நுகர்தற்குரியதாய் அம்மாயையில் தோன்றுவனவாய அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, கோபமென்னும் பஞ்சக்கிலேசங்களை எய்தி நின்ற நிலையே புருடதத்துவ மெனப்படுமென்க. அவா பெறாதபொருளைப் பெற விழைவது. ஆசை பெற்றதை இறுகப் பற்றுவது. இவ்வாற்றான் இவ் வித்தியாதத்துவங்கள் ஏழும் வினையை யீட்டற்கும், நுகர்தற்கும் ஆன்மாவிற்குக் கருவியாய்ப் பயன்படுமாறுணர்க.

இனிச் சிவதத்துவங்கள் ஐந்தும் ஏனை முப்பத்தொரு தத்து வங்கள் போல ஆன்மாக்களுக்கு உடம்பாய்ப் பொருந்தி உதவுவனவல்ல. அவை ஆன்மாக்களின் கருவி கரணங்களைச் செலுத்திநிற்றற்கு முதல் வனுக்குக் கருவியாய் நிற்குமுகத்தானே அவைகட்குப் பயன்படுத லுடையவாம். அவையைந்தும் சுத்தமாயையிற் றோன்றுங்கால் அசுத்த மாயாதத்துவங்கள் போலப் பரிணமமாய்த் தோன்றாது, மடித்தபடம் விரிந்து வழியிடைத்தங்குங் குடிலாறற்போல விருத்தியாற்றோன்றி நிற்கும். ஆகவே, சுத்த மாயையின் முதலாம் விருத்தி சிவதத்துவமெனவும், இரண்டாம் விருத்தி சத்தி தத்துவமெனவும், மூன்றாம் விருத்தி சதாசிவ தத்துவமெனவும், நான்காம் விருத்தி ஈசுவர தத்துவமெனவும், ஐந்தாம் விருத்தி சுத்தவித்யா தத்துவமெனவும் கொள்க. இவ்வைந்தனுள் சிவ தத்துவம் நாததத்துவமெனவும், சதாசிவ தத்துவம் சாதாக்கிய தத்துவ மெனவும் பெயர்பெறும். சிவதத்துவங்கள் ஐந்தும் சுத்ததத்துவமென்றுஞ் சொல்லப்படும்.

இனிச் சிவதத்துவங்கள் ஐந்தாயவாறு:- முதல்வன் மாயையைத் தொழிற்படுத்தலுறுங்கால் அவனது ஞானசத்தி கிரியாசத்தி இச்சாசத்தி கள் தொழிற்படும். அவற்றுள் இச்சாசத்தி எஞ்ஞான்றும் ஒருதன்மைத் தாம். ஏனைய ஞானசத்தி கிரியாசத்திகள் தனித்தனித் தொழிற்படுதலும்

இரண்டும் ஒப்பத் தொழிற்படுதலும் அவை ஒரோவொன்று ஏறிக் குறைந்து தொழிற்படுதலுமுடையவாம். அவையிரண்டும் அவ்வாறுயின் முதல்வனுக்கு ஐவகைநிலைகள் உளவாமாகலின் அவன் அவ்வைவகை நிலையினும் இடமாகக்கொள்ளும் சுத்ததத்துவங்களும் ஐந்தாயினவென்க. சிவன் சத்தி சதாசிவன் ஈசுவரன் சுத்தவித்தையென்னும் பெயர்கள் ஐந்தும் ஐவகை நிலையினும் முறையே முதல்வனெய்தும் பெயர்களாம். அப்பொருளெய்திய முதல்வனுக்கிடமாய் நிற்றலின் அத்தத்துவங்களும் அவ்வப் பெயர்பெற்று நிற்கின்றனவென்க. அவற்றுள், ஞானசத்தி தனித்துத் தொழிற்படநின்ற நிலைக்கண் முதல்வன் சிவனெனப் பெயர் பெற்று நிற்பன். அதனன் அவனுக்கிடமாகிய சுத்தமாயையின் முதலாம் விருத்தி சிவதத்துவமெனப்பட்டது. கிரியாசத்தி தனித்துத் தொழிற்பட நின்ற நிலைக்கண் முதல்வன், சத்தியெனப் பெயர்பெற்று நிற்பன். அதனன் அவனுக்கிடமாய் நின்ற சுத்த மாயையின் இரண்டாம் விருத்தி சத்தி தத்துவமெனப்பட்டது. இரண்டும் ஒப்பத் தொழிற்படநின்ற நிலைக் கண் முதல்வன், சதாசிவனெனப் பெயர்பெற்று நிற்பன். அதனன் அவனுக்கிடமாய்நின்ற சுத்தமாயையின் மூன்றாம் விருத்தி சதாசிவ தத்துவமெனப்பட்டது. கிரியாசத்தி மிக்குத் தொழிற்படநின்ற நிலைக்கண் முதல்வன் மகேசுவரனெனப் பெயர்பெற்றுநிற்பன். அதனன் அவனுக் கிடமாய்நின்ற சுத்தமாயையின் நான்காம்விருத்தி ஈசுவர தத்துவமெனப் பட்டது. ஞானசத்தி மிக்குத் தொழிற்படநின்ற நிலைக்கண் முதல்வன், சுத்த வித்தைக் கேதுவாதலிற் சுத்தவித்தை எனப் பெயர்பெற்றுநிற்பன். அதனன் அவனுக்கிடமாய்நின்ற சுத்தமாயையின் ஐந்தாம் விருத்தி சுத்தவித்தை எனப்பட்டது என்க.

இனிச் சிவதத்துவங்கள் ஐந்தும் முதல்வனுக்கிடமாய், ஏனையவற்றைச் செலுத்தி நிற்றலிற் பிரேரக காண்டமெனவும், வித்தியா தத்துவங்கள் ஏழும் ஆன்மாவைப் போகநுகர்ச்சிக்கு உரிமைசெய்து நிற்றலிற் போக சயித்திருகாண்டமெனவும், ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும் ஆன்மாவிற்குக் கருவியாய்ப் பயன்படுதலுடைமையிற் போக்கியகாண்டமெனவும் வழங்கப்படுமென்க.

இங்ஙனந் தத்துவங்கள் முப்பத்தாறும் ஓராற்றன் உணர்ந்து கொள்க. இனி இவற்றது இயல்பும், அதன்கட்படுங் கடாவிடைகளு மெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும். அவற்றைச் சிவஞான மாபாடியத் துள்ளும், சிவஞானசித்தி சிவப்பிரகாச முதலியவற்றினுங் கண்டு கொள்க.

இனி இத்தத்துவங்களின் கூறுகள் தாத்துவிகமெனப்படும். அவை அகங்காரமொன்றே தைசதாகங்காரம், வைகாரிகாகங்காரம், பூதாதியகங்காரமென மூவகையாகவும், வாயுவொன்றே பிராணன், உதானன், அபானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் எனப் பத்துவகையாகவும், வேறுபடுதல் போலவும், ஐம்பொறிகட்கும் புலனாய சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தமென்னும் விடயங்கள் பூதங்களின் குணமாயும், கன்மேந்திரியங்களின் செயலாய வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தமென்னும் செயல்கள் பூதங்களின் செயல்களாயும் நிற்றல்போலவு முள்ளனவென்க. அவை அறுபதென்ப. எனவே, தத்துவங்கள் முப்பத்தாறனுடன் தாத்துவிகங்கள் அறுபதுங்கூடத் தொண்ணூற்றாறாதல்பற்றியே தத்துவங்கள் தொண்ணூற்றாறென்னும் வழக்கு உளதாயிற்றென்க.

---

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்திற் கண்டு—நனவாதி
தோற்றிடும்போ தந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவர் என்றும் மலம். (உக)

இதன் பொழிப்பு:— சுத்த சாக்கிரமுதலியனவாகக் கூறப்படும் சுத்தாவத்தைகள் ஐந்தன் இறுதிக்கண்ணதாகிய அதீதத்தின் அனுபவிக்கப்படுவதாகிய பேரின்ப அனுபவத்தினைக் கனவு முதலாகக் கீழ்நோக்கியிறங்கும் கேவலாவத்தைகளின் இறுதிக்கண்ணதாகிய அதீதத்தின் அனுபவிக்கப்படும் அனுபவத்தின் இயல்பிற்றாக அறிந்து, அச் சுத்த சாக்கிர முதலிய சுத்தாவத்தைகள் தோன்றுங்காலத்து, அப் பேரின்பத்தினை அனுபவமாக உணர்ந்தவரே எஞ்ஞான்றும் மலத்தை நீக்கினவராவர் எ-து.

---

21. The joy they seek in wakeful states
They find in states of dream;
They see that form of joy again
When wakeful states come on;
Verily, such as they
Shall smite impurity.

இதனகலம்:— ஆன்மாக்கட்குச் சகசமலம் அநாதியாயுண்மை யின் கருவிகரணங்களோடு கூடியவழியும், அவற்றினீங்கியவழியும், பல் வகை நிலைகள் உளவாம். அவற்றைச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என ஐவகைப்படுத்து, அவை கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூவகையினவாய் நிகழுமென்ப. சாக்கிர முதலிய ஐந்தும் காரியாவத்தை எனவும், கேவல முதலிய மூன்றுங் காரணவத்தை எனவும் சொல்லப்படும். இத் திருவெண்பாவின் பொருள் இனிது விளங்குதற் பொருட்டு அம் மூத்திறத்து ஐந்தவத்தைகளையும் ஈண்டு ஓராற்றால் தொகுத்துக் கூறுதும்.

ஆன்மாக்கள் ஆணவத்தை அனுபவிக்கும் நிலை கேவலாவத்தை எனவும், ஐம்புல விடயங்களை அனுபவிக்கும் நிலை சகலாவத்தை எனவும் சிவத்தை அனுபவிக்கும் நிலை சுத்தாவத்தை எனவும்படும். அவத்தை, நிலை யென்பன ஒரு பொருட்சொற்கள். அம் மூவகையனுபவத்துள் விடய அனுபவமொழிந்து ஒழிந்த இரண்டனுபவமும், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியமென்னும் நான்கவத்தைகளின் ஒன்றினொன்று ஏற்ற மாய் ஐந்தாம் அவத்தையாகிய துரியாதீதத்தின்கண் முற்ற நிகழும் ஆணவ அனுபவத்திற்கும் விடய அனுபவத்திற்குந் தடை கருவி களும், சிவானுபவத்திற்குத் தடை ஆணவமல வாசனையுமாம். எனவே கேவல சாக்கிர முதலியனவும், சகல சாக்கிர முதலியனவுமாய இருவகை ஐந்தவத்தைகள் கருவிகளின் கூட்டக் குறைவினாலாவன என்பதும் சுத்தசாக்கிர முதலியவைந்தும் மலவாசனையின் தேய்வினாலாவன என் பதும் பெறப்படும். படவே, ஆன்மாக்கள் தனுகரணங்கள் கூட்டப்படாது நின்ற அநாதி கேவலநிலையிற் கருவிகள் இன்மையானும், ஆணவமலப் பற்றறக்கழிந்து அவை தம் இயற்கைநிலையைத் தலைப்பட்ட பரமுத்தி நிலையில் மலவாசனை இன்மையானும் அவ்விரிடத்தும் அவத்தை வேறு பாடுகளில்லையென்பது போதருமென்க. இதனாற் கேவலசாக்கிர முதலியன சகலத்திற் கேவலமும், சகலசாக்கிர முதலியன சகலத்திற் சகலமுமாய சகலாவத்தைகளேயாதல் உணர்க. இனிச் சகலத்திற் சுத்தமெனப்படும் யோகாவத்தைகளும் உள. அவை யோகத்தில் நிகழ்வன என்க.

இனி ஆன்மாக்கள் கருவிகளினீங்கி ஆணவமலத்து அழுந்துவன வாய கேவலசாக்கிர முதலியவற்றிற்கு ஏதுவாகக் கருவிகள் கூடியும் பிரிந்தும் வருங்கால், சாக்கிராவத்தைக்கண் சோத்திராதி ஞானேந்திரியங் கள் ஐந்தும், வாக்காதி கன்மேந்திரியங்கள் ஐந்தும், மனமாதி அந்தக் கரணங்கள் நான்கும், புருடன் ஒன்றுமாகத் தத்துவங்கள் பதினைந்தும்

சத்தாதி ஞானேந்திரிய விடயங்கள் ஐந்தும், வசனாதி கன்மேந்திரிய விடயங்கள் ஐந்தும், பிராணாதி வாயுக்கள் பத்தும் ஆகத் தாத்துவிகங்கள் இருபதுமாகிய முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படும். வித்தியாதத்துவங் களும் சிவதத்துவங்களும் ஈண்டுப் புருடனில் அடக்கப்பட்டன என்ப துணர்க. என்னை? அவையின்றி உயிர் புருடனெனப்படுமாறின்மையின் என்பது. எனவே, ஆன்ம தத்துவங்களாகிய தன்மாத்திரைகள் ஐந்தும் மாபூதங்கள் ஐந்துமாகிய தத்துவங்கள் பத்தும், இருவகைவிடயங்கள் பத்தும், வாயுக்கள் பத்துமொழித்து ஒழிந்த தாத்துவிகங்கள் நாற்பது மாகிய ஐம்பது கருவிகளே ஈண்டுத் தொழிற்படாது ஒழிவன என்க.

இனிச் சொப்பனவத்தைக்கண் மேல் சாக்கிரத்திற் றொழிற்படு மென்ற முப்பத்தைந்து கருவிகளுள் ஞானேந்திரியம் ஐந்தும் கன்மேந் திரியம் ஐந்துமாகிய பத்துக் கருவிகள் தொழிற்படாதொழிய, ஏனை இருபத் தைந்து கருவிகள் தொழிற்படும். சுழுத்தி அவத்தைக்கண் அவ்விருபத் தைந்து கருவிகளுள் ஏனைக்கருவிகள் தொழிற்படாதொழியச் சித்தமும், பிராணவாயுவும், புருடனுமாகிய மூன்று கருவிகளே தொழிற்படும். துரியஅவத்தைக்கண் அம்மூன்றனுள் சித்தந் தொழிற்படாதொழிய ஏனை இரண்டுகருவிகள் தொழிற்படும். துரியாதீதஅவத்தைக்கண் பிராணவாயு வும் தொழிற்படாதொழியப் புருடனொன்றே தொழிற்படும். இச்சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளினும் ஆன்மா முறையே இலாடத்தானமெனப் படும் புருவநடு, கண்டம், இதயம், உந்தி, மூலாதாரங்களின் இறங்கிநின்று அவ்வவ்விடங்களில் நிகழும் அநுபவத்தை எய்தும். ஆன்மா இங்ஙனம் கீழ்நோக்கிச் சேறல்பற்றி இக் கேவல சாக்கிரமுதலிய ஐந்துங் கீழா லவத்தையெனவும்படும். இவற்றில் அவ்வவ்விடங்களினிகழும் அநுபவங் களாவன; புருவநடுவிற் புறத்தே நனவிற் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்து நிற்றலும், கண்டத்தில் அகத்தே கனவின் அவ்வாறு நிற்றலும், இதயத்தில் யாதானுமொன்றனைத் தூக்கிச் சிந்தித்தலொன்றே செய்தலும், உந்தியில் உடம்பிற்குக் காவலாய்த் தன்னையே அறிந்து நிற்றலும், மூலாதாரத்தின் அறியாமைக்கண் அழுந்திநிற்றலுமாம். ஈண்டு அறியாமையென்றது நேரே ஆணவமலமாத்திரத்தான் அநாதிகேவலத்தில் நிகழும் பேரறியாமை போலாது, புருடனுக்குக் கீழுள்ள கருவிகள் தொழிற்படாமையான் மூலப்பகுதியில் தோன்றுவதாகிய அவிச்சை மாத்திரமாகிய அறியாமையை யென்க. இவ் ஐந்தவத்தைகளும் நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கல் எனப் பெயர் பெறுதற் குரியன. இவை முறையே கண்டேன்போலும்கேட்டேன்போலுமெனவும், கனாக்கண்டேனெனவும், உறங்கினேனெனவும், இனிதாகத் துயின்றே னெனவும், ஒன்றுமறியாது துயின்றேனெனவும் யாவற்கும் நாடோறும்

நிகழும் அவத்தைகளாம். உயிர், மேலிருந்து கீழிறங்குங்கால் நிகழும் கருவிகளின் றெழிற்படும் அவத்தை வேறுபாடுகளும் மூலாதாரத்தினின்று மேலேறுங்காலும் ஒக்கும். அதனுன் அவை வேறவத்தைகள் அல்ல என்க.

இனி ஆன்மா விடயத்தழுந்துதலாகிய சகல சாக்கிர முதலிய ஐந்தும், ஏனைக் கருவிகளைச் செலுத்தி நிற்பனவாய சிவதத்துவமைந்தின் தொழிற்பாட்டினுல் உளவாவனவாம். அவற்றுட் சுத்தவித்தை யீருகவுள்ள ஐந்து தத்துவங்களுந் தொழிற்படும் நிலை சாக்கிரச் சாக்கிரமெனவும், சுத்த வித்தை ஒழித்தொழிந்த நான்கு தத்துவங்களுந் தொழிற்படும் நிலை சாக்கிரச்சொப்பன மெனவும், இவ்வாறு முறையே ஒவ்வொரு தத்துவம் தொழிற்படாதொழிய மூன்று தத்துவம் தொழிற்படும் நிலை சாக்கிரச் சுழூத்தி யெனவும், இரண்டு தத்துவம் தொழிற்படும் நிலை சாக்கிரத்துரியம் எனவும் சிவதத்துவ மொன்றே தொழிற்படுநிலை சாக்கிர துரியா தீதமெனவும்படும் என்க. இவற்றுட் கருவிகள் குறைய விடய அனுபவமுங் குறையும். விடயங்களை அறிந்தாங் கறிதலின்றி விட்டுவிட்டறிதலே ஆன்மாவின் இயல்பாகலின், ஒவ்வொரு விடயத்தின்கண்ணும் இவ்வைந்தவத்தையும் கணந்தோறுங் காற்றுடிபோல விரையச் சுழன்று வரும். அதனை நுண்ணுணர்வான் அவ்வவர் அறிந்து கொள்வதன்றிப் பிறரால் எளிதிலுணர்த்தப்படுவ தன்றென்க. சாக்கிரச் சாக்கிர முதலிய ஐந்தும் இலாடத்தானமெனப்படும் புருவ நடுவின்கண்ணே நிகழ்வனவாம். அதனுன் அவை மத்தியாலவத்தை யெனவும்படும். இனிச் சகல சாக்கிரமும் கேவல சாக்கிரமும் இலாடத்தானத்தே நிகழுமாயினும், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதல் வன்மைபெற நிகழ்தல் சகல சாக்கிரமெனவும், கண்டுங் காணுது, கேட்டுங் கேளாது அவை மெத்தென நிகழ்தல் கேவல சாக்கிரமெனவும் அறிக.

இனி, ஆன்மாச் சிவத்தி லழுந்துவனவாய சுத்த சாக்கிரமுதலிய ஐந்துள் மலநீங்கி வாதனுமலமாத்திரம் உடையாராய்ப் பிரகிருதி புவனங்களில்நிற்கும் சீவன்முத்திநிலை சுத்தசாக்கிரமும், அதிகாரமல வாசனையுடையராய்ச் சுத்தவித்தை ஈசுரமென்னும் அதிகாரதத்துவ புனங்களின் வைகி, அயன்மால் உருத்திரர் மந்திர மயேசுரர் முதலியோராய் அதிகாரம் பெற்று நிற்குநிலை சுத்த சொப்பனமும், போகமல வாசனையுடையராய்ப் போக தத்துவமாகிய சதாசிவ தத்துவ புவனங்களிற் சுத்த சாமீப்பிய முதலிய பதவிகளினின்று ஆண்டுள்ள போகங்களை அனுபவிக்கும் அனு சதாசிவர் முதலியோராய் நிற்குநிலை சுத்த சுழூத்தியும், இலயமல வாசனையுடையராய் இலய தத்துவங்களாகிய சத்திசிவதத்துவ புவனங்களின்

நிற்கு நிலை சுத்ததுரியமும், மலவாசனையற்று மாயாதீதனாகிய பரமசிவனிடத்து இரண்டறக்கலத்தலாகிய பரமுத்தியை எய்திநிற்கு நிலை சுத்த துரியாதீதமுமாம். இச்சுத்தாவத்தைகளைத் தலைப்பட்டோர் மீளக் கீழ் நோக்குதல் இல்லையென்க.

இவற்றுட் கேவல சாக்கிரமுதலிய ஐந்தனியல்பை,

[1] சாக்கிரம் முப்பத் தைந்து நுதலினில்; கனவு தன்னில்
ஆக்கிய இருபத் தைந்து களத்தினில்; சுழுனை மூன்று
நீக்கிய இதயந் தன்னில்; துரியத்தில் இரண்டு நாபி;
நோக்கிய துரியா தீதம் நுவலின்மூ லத்தின் ஒன்றே.

என்பதனானும், சகல சாக்கிர முதலிய ஐந்தனியல்பை,

[2] அறிதரு முதல வத்தை அடைதரு மிடத்தே ஐந்துஞ்
செறிதரும் கரணந்தன்னில் செயல்தொறுங் கண்டு கொள்நீ.

[3] ஐந்துசாக் கிரத்தின்; நான்கு கனவினில்; சுழுனை மூன்று;
வந்திடுந் துரியந் தன்னின் இரண்டு; ஒன்று துரியா தீதம்,
தந்திடுஞ் சாக்கி ராதி அவத்தைகள் தானந் தோறும்
உந்திடுங் கரணந் தன்னில் செயல்தொறும் உணர்ந்து கொள்ளே.

என்பதனானும், சுத்தாவத்தைகள் ஐந்துள எபதனை,

[4] பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற அருளால் ஆங்கே
குறியொடும் அஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட.

என்பதனானும் உரைக.

இவையேயன்றிச் சகலத்திற் சுத்தம் எனப்படும் யோகாவத்தைகள் ஐந்துளவென்பதும், அவையும் பெத்தநிலையில் நிகழ்வனவன்றி முத்தி நிலையில் நிகழ்வன அல்ல என்பதும்,

---

[1], [2], [3], [4] சித்தி, சூ, 5, பா, 33, 35, 36, 35.

[1] யோகில் தருவதோர் சமாதி தானும் தாழ்ந்து பின் சனனஞ் சாரும்.

என்பதனானும் உணர்க. இன்னும் இவ்வைந்தவத்தைகளின் இயல்பு விசேடங்களும், அவை பொருந்துமாறும் எல்லாம் சிவஞானபாடியத்துட் கண்டுகொள்க.

இனிச் சுத்த துரியாதீதத்தில் ஆன்மா சிவத்திலழுந்திநிற்கும் நிலை, பிறிதொன்றனோடு கூடாமை மாத்திரைபற்றி அநாதி கேவலத்தின் ஆன்மா ஆணவத்தில் அழுந்திநிற்குநிலையோடு ஒக்குமாதலின் அஃது ஆன்மாப் பரமுத்தியெய்திய நிலைக்கு எடுத்துக்காட்டாதற்குரித்து. அற்றாயினும் அவ் வநாதிகேவலநிலை ஈண்டுணர வாராமையின் நாடோறும் அனுபவமாய் நிகழும் கேவல துரியாதீத நிலையினை எடுத்துக்காட்டுவார், "நனவாதி அந்தத்தில் நாடுசுகந்தன்னைக் கனவாதி அந்தத்திற் கண்டு" என்றார்.

ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ?

என்றார் இவர்வழியடியாருமென்க.

ஈண்டு நனவென்றது சுத்த சாக்கிரத்தை. நனவாதி கனவாதி என்பன அவற்றை ஆதியாகவுடைய ஐந்தவத்தைகளை உணர்த்திநின்றன. நாடுதல் அதன் இயல்பு முழுமையு முணர்தல். "கனவாதி யந்தத்தின்" என்புழி இன் ஒப்புப்பொருளில் வந்தது. கேவலாவத்தைகளை நனவு முதலாகக் கூறாது கனவு முதலாகக் கூறினார், அவை கீழாலவத்தை என்பது துணர்தற்பொருட்டு.

இது, மேலை வெண்பாவில் கருவிகளின் ஏகதேசத்தோற்றத்திற்கு வேறாய் உணர்த்தப்பட்ட சிவத்தினது வியாபகத் தோற்றத்தினை, ஆணவத்தினது வியாபகத் தோற்ற அனுபவத்தில் வைத்துணர்த்தி, அச் சிவானுபவ நிலைக்கண் நிற்பித்தவாறு.

---

[1] சித்தி, சூ, 4, பா, 34. [2], தாயுமா, எந்நாட், நிற்குநிலை, பா, 28.

தத்துவங்கள் எண்ணித் தலையடித்துக் கொள்ளாதே
தத்துவங்கள் ஏதென்னின் சாற்றக்கேள்—மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்தில் தோயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே. (௨௨)

இதன் பொழிப்பு:— தத்துவங்களனைத்தையும் தனித்தனி ஆராய்ந் திடர்ப்படுதல் வேண்டா; தத்துவங்களாவன யாவையெனை அவற்றதுண் மையை ஆராய்ந்து சொல்லப்புகின், ஒருகாலைக்கொருகால் மிகும் பேரின்பத் தோற்றத்திற் கேதுவாகிய சிவத்திலழுந்தாமைக் கேதுவாய் முன்னிற்கும் மாயாகாரியங்கள்தாமே தத்துவங்களாம் எ-து.

இதனகலம்:— எனவே, தத்துவங்களின் நீங்குதற்கு அவற்றை நோக்குவான்புகின் ஒன்றே நோக்கும்வழி ஏனையவற்றைப்பற்றி நிற்றல் வேண்டுமாகலின் அவ்வாறின்றிச் சிவத்தோற்றம் பற்றுக்கோடாக நின்று அத்தோற்றத்திற்குத் தடையாய் முன்னிற்பனவற்றின் நீங்குதல் வேண்டு மென்றவாறு. தலையடித்துக்கொள்ளுதல்-முட்டிக்கொள்ளுதல்.

இஃது, அகமாதிகண்ட அறிவாகி நிற்றலாவது, தத்துவங்கள் அனைத்தினையும் தனித்தனி கண்டு கழித்தலே போதுமென்பார்க்கு, அற்றன்று; தத்துவங்கள், பிறபொருளையுந் தன்னையுங் காணவொட்டாது அறிவைத் தடைசெய்து நிற்கும் ஆணவமலம்போலாது பிறபொருளையுங் காட்டித் தம்மையுங் காட்டி அறிவை நிகழச்செய்வனவாயினும் சிவத்தைக் காணலுறுங்கால் அக்காட்சியைத் தடுத்துத் தம்மையும் தம்மோடொத்த பிறபொருளையுங் காட்டி நிற்பனவாமென அவற்றியல்புணர்ந்து நீங்கலே அகமாதிகண்ட அறிவாய் நிற்றலாமென அதன் தாற்பரியமுணர்த்திய வாறு.

---

22. Why knock thy head in counting the tatvas ?
Harken what they are.
They are but Maya's mutations
That cannot touch, in whatever way
Sivam, the source of joy.

ஆறுறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் —பேறாகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும். (உ௩)

இதன் பொழிப்பு:— ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களுங் கெட்டொழிய முத்திநிலை யொன்றையே பயனாகக் கருதிநிற்குந் தீவிர வுணர்வுடையார்க்குப் பாசநீக்கமும் வீடுபேறுமாகிய அவ்விருவகைப் பயனுங் கைகூடுதற்பொருட்டு இவ்வுலகின்கண் பல விரிந்துகிடக்கும் நூல்களையெல்லாம் பார்த்தறிவதினும் சிவஞானசித்தியின்கண் ஒரு திருவிருத்தத்தின் பாதியைப் பார்த்தலே அமையும் எ-து.

இதனகலம்:— தத்துவங்களை முற்கூறினார் ஈண்டு ஆராய்ச்சி அவற்றின்கண்ணதாகலின். முத்திநிலை பேறாகநிற்போர்க்கு எனமாறிக் கூட்டுக. பார்த்தறியின் என்புழி அறியென்னும் முதனிலைத் தொழிற்பெயர் உறழ்ச்சிக்கண்வந்த ஐந்தனுருபேற்றது. வினையெச்சமாகக் கொண்டு, நூல்களையெல்லாம் பார்த்தறியுமிடத்து முத்திநிலைபேறாக நிற்போர்க்குச் சித்தியில் ஓர் விருத்தப்பாதி போதும் என்பது போதரும் என்றுரைத்தலுமாம். சித்தியிலே ஓர் விருத்தப்பாதி போதுமென்றது அந்நூலது பெருமையுணர்த்தியவாறு. இதனாற் சித்தியாரொடு நோக்கப் பிறநூல்கள் பொன்னொடிரும்பனையவாய்ப் பெருமையின் றாழ்வுமென்பது பெற்றாம். "சிவத்துக்குமேல் தெய்வமில்லை, சித்திக்குமேல் நூலில்லை" என்னும் வழக்குங்காண்க. இதனானே நூலறிவொன்றே வேண்டுவார்க்கு அவை வேண்டற்பாலனவாயினும் அனுபவத்தினைப் பெரிதாக வேண்டுவார்க்கு இதுதானேயமையுமென்பதூஉங்கொள்க. இங்ஙனங் கூறினமையின், இவ்வாசிரியர்க்கு இவர்தங் குரவரானறிவுறுக்கப்பட்டதும் அந்நூலேயென்பதும், அதனானே இவர்வழிவருவார் பலர்க்கும் அதுவே அறிவுறை நூலாயிற்றென்பதும் பெறப்படும்.

---

23. As guide to those who stand for bliss
With tatvas six times six
Anava and actions hard
All to ashes turned,
If one doth search through all the books
That are spread on earth,
Just one half of a single verse
In Siddhiyar will do.

இனி "ஓர் விருத்தப்பாதி" என்றது அதன்கண் எட்டாஞ் சூத்திரத்துள்ள "அறியாமை அறிவகற்றி" என்னுஞ் செய்யுளின் முதற் பாதியை யெனவுங்கூறுப. அச்செய்யுள்வருமாறு:-

[1] அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினான் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயில்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே.

இதன் முதற்பாதி, கேட்டல் சிந்தித்தல் தெளிதல்களான் நிற்கு நிலை யுணர்த்தியதாமாறு அதனுரையிற்காண்க.

இனிச் சிவஞானசித்தியாவது யாதெனிற் கூறுதும்; வீடு பேற்றினை அடையவிரும்பும் விரைவுணர்வுடையார்க்கு அறிவுறுத்தற் பாலதாய மெய்யுணர்வு நெறியைக், குரவர்வழியின் வைத்து நிலவுவிப்பத் திருவுளங்கொண்ட இறைவன் திருக்கைலையில் கல்லாலமர நிழலின்கண் அருளாசிரியனாய்த் தென்முகமாக வீற்றிருந்தருளித் திருநந்திதேவருக்கு அதனை அறிவுறுத்தருளினான். அந்நெறிநின்று நிலவுமிடம் தென்னிலமே யாகலான் அதுநோக்கித் தென்முகமா இருந்து அறிவுறுத்தான்போலும்! இனி அந்நெறியினை நந்திபெருமான் தம்மை அடைந்த முனிவர்களுக்கு அறிவுறுத்தார். பின்னர் அம் முனிவர்களுட் சனற்குமாரமாமுனிவர் தம் மாணக்கர் சத்தியஞானதரிசனிகட்கு அறிவுறுத்தார். அவர் தம் மாணக்கர் பரஞ்சோதிமாமுனிகட்கு அறிவுறுத்தார். அவர் தென்றமிழ் நாடு நோக்கிச் செல்லுங்கால், தமிழ்நாடு செய்த தவப்பயனானே அருட் குழவியாயுதித்துத் திருவெண்ணெய் நல்லூரிலே எழுந்தருளியிருந்த ஈராட்டைப் பிராயத்தராகிய மெய்கண்டதேவநாயனாரைத் தம் மாணக்க ராகக்கொண்டு அவர்க்கு அறிவுறுத்தார். அவர் திருவெண்ணெய்நல்லூர்ப் பொல்லாப்பிள்ளையார் திருமுன்பிலிருந்துகொண்டு அதனைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடியிருந்து பின் அந்நெறியினை, வீடடையும் பக்குவ முடையார் ஏதுக்களாலும் எடுத்தமொழியாலும் தருக்கவாதஞ்செய்து தத்தம் மதங்களே அமைவாக அரற்றிமலையுஞ் சமயவாதிகள் மொழி

[1] சித்தி, சூ, 8, பா, 30,

களான் மலைவுறாது உணர்ந்து உய்தற்பொருட்டுச் சிவஞானபோதம் என்னும் நூலாகச்செய்து மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டுமாக நிலவுமாறு ஒருபொழிப்புரையும் அருளிச்செய்து, அதனைத் தம் மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த அருணந்தி சிவாசாரியர்க்கு அறிவுறுத்தார். அவர் அம் முதனூலை முடிபாகக்கொண்டு விருத்தயாப்பாற் செய்தருளிய வழிநூலே சிவஞானசித்தி எனப்படுவதென்க. இனி அருணந்தி சிவனாரது மாணாக்கர்க்கு மாணாக்கராய கொற்றவன்குடி உமாபதி சிவனார் இவ்விருநூலும்பற்றி வேறுஞ்சிலகூறிச் செய்த சிவப்பிரகாசமென்னும் சார்புநூலும் உண்டென்க. இவ்வரலாறு இவ்வழிநூல் சார்பு நூல்களின் தற்சிறப்புப்பாயிரத்துட் பெறப்படுமாறறிக.

இனி சிவஞானபோதம் என்பது சைவாகமங்கள் இருபத்தெட்டனுள் இரௌரவாகமத்துள் பாசவிமோசனபடலத்துள் பன்னிரு சூத்திரங்களான் இயன்றதெனவும், அதனை மொழிபெயர்த்தல் யாப்பாற் செய்த வழிநூலே மெய்கண்டதேவநாயனார் செய்தருளிய சிவஞானபோதமெனவுங் கூறுவார் கூற்றிற்கு ஆசிரியவசனமில்லாமை – மேலும், [1]"மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண்டான் நூல்" எனவும், [2]"தெரிந்தகுரு முதல்வருயர் சிவஞானபோதம் செப்பினர்" எனவும் வழிநூல் சார்புநூல்களுட் கூறப்பட்ட ஆசிரிய வசனங்களோடு முரணுமென்க.

இவை ஏழு வெண்பாக்களானும் ஞானத்தினியல்பு, கேட்குமாற்றின்வைத்துத் தொகுத்துணர்த்தியவாறு.

---

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும்
இரவுபகல் அற்ற இடத்தே — திரமாக
நில்லென்றான் கண்டஎல்லாம் நேதிபண்ணி மும்மலமுங்
கொல்லென்றான் ஞான குரு. (உ௩)

இதன் பொழிப்பு:— எமது ஞானகுரவர் "மனமுதலிய கருவிகள் வியாபரித்துச் சென்று அணுகவொண்ணாத சிவத்தை அடைதற்கு மல மாயா காரியங்களாகிய கேவல சகலங்கள் நீங்கிய நிலையின்கண்ணே ஒருபொழுதும் நீங்காது நிலையாக நில்" என்றும், "அவ்வாறு நிற்புழி மலமாயாகன்மங்களின் சேட்டிப்புத் தோன்ற வருமாயின் எமது அருளுரை பற்றுக்கோடாக அவற்றை இவை பொருளல்லவெனக் கழிக்கு மாற்றாற் பற்றறக் களை" யென்றும் அருளிச்செய்தார் எ-து.

இதனகலம்:— எனவே யாமும் அவ்வாறே உனக்குக் கூறுதும் என்றவாறு. மனமென்றது உபலக்கணமாய் ஏனைய கருவிகளையுங் கொள்ள நின்றது. இரவு பகலற்ற இடத்தே நாளும் திரமாக நில்லென இயையும். அறியாமையைச் செய்தலின் கேவலத்தை இரவெனவும், அறிவை விளக்கலிற் சகலத்தைப் பகலெனவுங் கூறுதல் மெய்ந்நூல் வழக்கு. "இராப்பகலற்ற இடத்தே யிருக்கை எளிதல்லவே" என்றார் பிறரும். எனவே, இரவுபகலற்ற இடமென்றது, "ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கி உயிர் வேறாக நின்றஇடம்" என மேற்கூறிய இடத்தை யேயாயிற்று. அவ்விடத்துத் திரமாக நிற்றலாவது பயிற்சியின்மையான் அவ்வியாபக உணர்வின் நிற்கலாற்றாது பயிற்சிபற்றி ஏகதேச வுணர்வின் மீண்டு கருவிகளைப் பற்றுதல் விடுதல்கள்செய்து நினைப்பும் மறப்பும் பூணுதலின்றி அவ் வியாபக உணர்விற்றானே உறைத்து நிற்றல். "அறி யாமை அறிவகற்றி" எனவும், "அந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே" எனவும் கூறியதும் அந்நிலையை என்க.

---

24. The Supreme that the mind cannot approach
If thou wouldst like to reach,
Stand firm always at the place
Wherein is neither night nor day ;
Know that whatever thou seest is not thou,
Quell down the Malas Three—
The teacher of wisdom said.

இனி அவ்விடத்து அவ்வாறு உறைத்து நிற்றற்குத் தடையாய் மலமாயா கன்மங்களின் செயல்கள் நிகழ்தல் இயல்பெனவும், அவற்றுள் யானெனதென்னுஞ் செருக்காகிய மலகாரிய நிகழ்வுழி, உயிரும் உடம்பு முதலியனவும் இறைவனுடையனவா மெனத் திருவைந்தெழுத்தின் வைத் துணர்த்திய உபதேசத்தினை உணருமுகத்தானும், மாயாகாரியங்களாகிய நிலமுதல் நாதமீறாகவுள்ள தத்துவங்கள் காட்சிப்படும் வழி, இவை சுகாரம் பமாஞ் சிவத்தில் தோயாது தடுத்துப் பிறப்பின்கண் வீழ்த்துவனவாமென மேலுணர்த்தியதனை உணருமுகத்தானும், கன்மத்தின்காரியமாய இன்பத் துன்பங்கள் நிகழ்வுழி, இன்பத் துன்பங்களாவன முன்னர் நல்வினை யானும் தீவினையானும் செய்துகொண்டனவன்றிப் பிறவல்ல எனவும், அவை மேலைக்கு வித்துமாகி விளைந்தவை பயனுமாகி ஞாலத்து வருமா போலத் தம்மை நுகர்தலுடையார்க்குத் தாம் பயனுதலேயன்றி மேல் வித்தாயும் வருவனவெனவும் உணர்த்தியதனை யுணருமுகத்தானும் அவற்றை மெய்யாக உணராது மயக்கமென்றுணர்ந்து நீங்குதல் வேண்டு மெனவுங் கூறுவார், "கண்ட எல்லாம் நேதிபண்ணி மும்மலமுங் கொல் என்றான்" என்றார்.

மும்மலமுமென முன்னர் வருகின்றமையின் "கண்ட எல்லாம்" என்றது அவற்றின் காரியங்களை யாயிற்று. பண்ணி யென்னும் வினை யெச்சம் பண்ணுதலானெனக் காரணப்பொருட்டாய் நின்றது. "ஓதி உணர்ந்தான்" என்றாற்போல. கொல்லென்பது இலக்கணை வழக்கு.

"மும்மலமு நேதிபண்ணிக் கொல் என்றான்" எனவே அவற்ற தியல்பினை முன்ன ருணத்தினர் என்பதூஉம், அவ்வுணர்த்திய உரை பற்றுக் கோடாக அவற்றினீங்குக என்றார் என்பதூஉம் பெற்றாம். அவ்வுரையினை மேற்கூறுதல் காண்க.

இஃது, ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கி உயிர் வேறாக நின்றவிடத்து நிற்றல்தானே சிவத்தையடையும் நெறியாம் எனவும், அவ்விடத்து அவ்வாறசைவற நிற்குமாறுங் கூறியவாறு. இதனுள் தத்துவ சுத்தி பெறப்பட்டவாறறிக.

காயம் கரணமுதல் நான்கிற்குங் காரணந்தான்
ஆயஇருள் மாயை அதுஎன்றால்—தூயபொருட்
போதனே! செங்கமலப் பொற்பாத னே!எனை நீ
ஏதென்று சொல்லாய் இனி. (உரு)

இதன் பொழிப்பு:— மெய்ப்பொருளைப் போதிப்பீர், செந்தாமரை மலர்போலும் அழகிய திருவடிகளை யுடையீர், இத் தனு கரண புவன போகங்களாகிய நான்கும் நானாகாது ஆணவமலங் காரணமாகவந்த மாயா காரியங்களாயின், பின்னை என்னை இன்ன பொருளென்று தேவரீர் சொல்லியருளுவீராக எ-து.

இதனகலம்:— இது, கண்டவெல்லாம் நேதி பண்ணிக் களையுமிடத்துத் தனுகரண முதலியவற்றை யானல்லவெனக் கழிப்பின் பின் யானெனப்படும் உயிர்தான் யாவதென வினயவாறு. எனவே, இஃது ஆன்மரூபம் உணர்த்தற்குத் தோற்றுவாய் செய்ததாயிற்று.

" மாயை அது என்றால் " என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. நான்கும் மாயாகாரியங்க ளென்றாலென்பார் நான்கிற்குங் காரணந்தான் மாயையென்றாலெனக் காரணத்தின்மேல் வைத்தோதினார். நான்கிற்குங் காரணந்தான் மாயையென்றா ரென்றதனானே அவை மாயாகாரியங்களா மென்பது பெறப்பட்டது. இனி என்பது மற்றென்னும் பொருள்பட நின்றது.

---

25. If dark Maya be the cause of the four,
Body, karana, world, enjoyment,
Thou that teachest the truth so pure,
Thou with golden feet like lotus red
Say, what am I ?

என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும்—என்னைஉன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம். (உசா)

இதன் பொழிப்பு:— மேற்கூறியவாறு வினைய எனக்குத், தனு கரண முதலியவற்றை யானல்லவெனக் கழித்தும், இனி யான் யாதாகற் பாலேனெனத் தேடியும் நின்ற அறிவுதானே யானென்றும், அவ் வறிவின்கண்ணே வறியார்க்குக் கிழியீடு நேர்பட்டாற்போல இதுகாறுங் கண்டறியாததாய்த் தோன்றும் ஓர் இன்ப உணர்வுதானே சிவமென வும், இவ்வாறு எனது உண்மைநிலையை உற்றுநோக்காதவாறு என் அறிவை எப்பொழுதும் மறைத்து நின்றதுதானே பாசமெனவுங் கூறி யருளினர் எம் அருட்குரவர். யானெனப்பட்ட பசுவும், சிவமெனப்பட்ட பதியும், பாசமுமாகிய இம் முப்பொருளியல்பை ஆராய்ந்து, ஐயந்திரிபற உணர்ந்தவரே பாசவிடுதியைப் பெறுவர் எ-து.

இதனகலம்:— ஆன்மரூபங் கூறுவார் ஏனையவற்றையும் உடன் கூறினர், இனிது விளங்குதற்பொருட்டு. அறிவு ஆனந்தம் என்னும் பண்புகளுடையவற்றை அறிவெனவும் ஆனந்தமெனவும் பண்பாக ஓதினர், ஒற்றுமைபற்றி; [1]"இல்லதென் இல்லவள் மாண்பானால்" என்புழிப்போல. "என்னை உன்னைப் பாரா மறைத்ததுவே" எனப் பாட மோதுப; என்னையென்னுந் தன்மைப் பெயர் ஈண்டு இவ்வாசிரியர்க் காசிரியரை உணர்த்துமென்றுதல் உன்னை யென்னும் முன்னிலைப் பெயர் இவர் மாணாக்கரை யுணர்த்துமென்றுதல் கோடல் பொருந்தாமையானும், இனிது பொருள்படாமையானும் அது பாடமன்றென்க. இம்மூன்றும் ஆராய்ந்தார் முத்தர் என்பது வேறு தொடராகலின் மூன்றென்றது இட வழுவோடு கூடிய திணை வழுவாகாமை யுணர்க. என்னை என்பது உயிரை யென்னும் பொருளதாகலானும் சிவம் என்பது அஃறிணை முடிபுகொள்ளு மாகலானும் வழுவின் றென்றலு மொன்று. செய்யுமென்முற்றுப் பலர்

26. Intelligence, He called me.
The joy within my intelligence, He called Sivam.
What constantly hid Thee from me, He called Pasam.
Whoever have understood these three
They are the liberated.

[1] குறள், பா, 53.

பாவிடத்துச் சேறலின்மையின் ஆராய்ந்தவர் முத்தரெனவும், ஆமெனவும் வேறுவேறு தொடராக்கி ஆமென்பதனை முன்னைத் தொடர்ப்பொருளை வலியுறுத்தவாறாக உரைக்க. இஃது, ஆன்மரூபம் உணர்த்து முகத்தான் ஏனையவற்றது உண்மையுங்கூறி முப்பொருள்களதியல்பினை ஆராய்தலே முத்திக் கேதுவாமென்றவாறு.

---

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்—பொங்கு
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்தும் கன்மமலம் பார். (உஎ)

**இதன் பொழிப்பு:—** நீ எவ்விடத்தும் நிறைந்துநின்று அறிதற்குரிய வியாபக சித்து; நாம் நீ அறியுமிடத்தெல்லாம் உன் அறிவுக்கறிவாயிருந்து அறியச்செய்யும் அதிவியாபக சித்து; மிகுந்த ஆணவம் உனது வியாபகத்தன்மையை மறைத்து அணுத்தன்மையைச் செய்வது; மாயை அவ்வாணவ மறைப்பைச் சிறிதே நீக்கி உன்னறிவை உடம்பளவிற்றாக விளக்கி உடம்பு முதலியனவற்றை நீயேயாகக்காட்டி மயக்குவது; கன்மமலம் அவ்வுடம்பு முதலியவற்றான் ஒன்றையொன்றவ்வாத பலதிறப்பட்ட நன்மை தீமைகளைப் பயந்து நிற்பது; முப்பொருள்களின் இயல்பை இவ்வாறறிவாயாக எ-து.

**இதனகலம்:—** என்று னென்பதனை ஈண்டும் தந்துரைக்க. அறிவென்பனவற்றுக்கு மேலுரைத்தாங்கு உரைக்க. மறைத்தல் மயக்கலென்னுந் தொழில்களும் பலமென்னுஞ் செயப்படுபொருளும் தத்தம் வினைமுதல்களது தன்மை யுணர்கின்றன. பொருளியல்பு கூறும் வழி, உயிர் உடம்பளவின் வியாபகமாய் அவ்வவ்வுடம்பிற்கேற்பச் சுருங்கியும் விரிந்தும் நிற்குமெனவும், புல் நுனிமேல் நிற்குஞ் சிறுதுளிபோல இதயகமலத்தின்கண் உயிர் அணுவளவாய் இருந்து தன்னறிவு

---

27. Thou art the intelligence that is everywhere
We are the One Intelligence instructing everywhere
Puffed-up mala hideth, Maya doth confound.
Lo! it is karma that yieldeth all the diverse fruits.

விளக்கொளிபோல உடல்புழுமுதும் வியாபிக்க நிற்குமெனவும், பிறவாறுங் கூறுவாருளராக, உயிர் நித்தமாய் எங்கும் வியாபகமாய் அறிவாய் நிற்கு மென்பதே சித்தாந்தமாகலின், "எங்குமிருக்கும் அறிவு நீ" எனவும், அவ் வாறாயினும் உயிர் சிவத்தைப்போலப் பெருவியாபக மாகாது அடங்கிய வியாபகமாய் நிற்கச், சிவம் அதனைத் தன்னுள் அடக்கிநிற்கும் பெரு வியாபகமாயும், உயிர் அறிவுடையதாயினும் தானே அறியும் இயற்கை அறிவினதாகாது அறிவிக்கவே அறியும் செயற்கை அறிவினதாய் நிற்கச் சிவம் தானே அறிந்தும் உயிர்கட்கு அறிவித்தும் நிற்கும் இயற்கை அறிவாயும் நிற்குமென்பார், "ஏகமாய் அங்கங்கு உணர்த்தும் அறிவு நாம்" எனவும், உயிர் வியாபகமாயினும் அதற்கு அத்தன்மையை மறைத்து அணுத்தன்மையைச் செய்தது ஆணவமலமென்பார் "மலம் மறைத்தல்" எனவும், அம் மறைப்பைச் சிறிதுநீக்கி விபரீதவுணர்வைச் செய்தது மாயையென்பார் "மாயை மயக்கல்" எனவும், பிறப்பின் கண் காணப்படும் இன்பதுன்ப வேறுபாடுகளைச் செய்தது கன்மமலமென் பார், "விகாரப் பலமனைத்துங் கன்மமலம் பார்" எனவுங்கூறினர். இதனை,

> [1] அசித்தரு வியாபகம்போல் வியாபக மருவ மின்றாய்
> வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய தாகி
> நசித்திடா ஞானச் செய்தி அநாதியே மறைத்து நிற்கும்
> பசுத்துவ முடைய தாகிப் பசுவென நிற்கும் ஆன்மா.

என்றோதியவாறுபற்றியும் உணர்ந்துகொள்க.

இனி ஆணவமலம் மறைக்குமாறு மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என எழுவகைப்படும். அவற்றுள், மோகமாவது இழிந்தபொருளை இழிந்ததென் றுணர்த்தவும் உணராது அதனின் மயங்கச்செய்வது. மதமாவது அவ்விழிந்தபொருளை விரும்பித் தான் விரும்பிய பொருளிற் சிறந்தது பிறிதில்லையென மதிக்கச்செய்வது. அராகமாவது அங்ஙனம் மதித்த பொருள்மேல் மேலுமேலும் வேட்கை நிகழச்செய்வது. கவலையாவது அப்பொருள்களை இழந்தவழித் துன்புறச் செய்வது. தாபமாவது அத்துன்பத்தால் மனம் நொந்து கையற்றுநிற்கச் செய்வது. வாட்டமாவது அக் கையறவால் மூர்ச்சை முதலியன எய்தி உடம்பு முதலியன மெலியச்செய்வது. விசித்திரமாவது உலக வாழ்க்கை யைப் பலபட எண்ணிக் களித்தலும் பரிதலும் செய்விப்பது.

இனி மாயாமலம் மயக்குங்கால் வன்னம், பதம், மந்திரம், புவனம், தத்துவம், கலை என்னும் அறுவகையாய்க் காரியப்பட்டு மயக்கும்.

[1] சித்தி, சு, 4, பா, 20.

அவற்றுள் வன்னம் முதலிய மூன்றும் சொற்பிரபஞ்சமும், ஏனைய மூன்றும் பொருட்பிரபஞ்சமுமாம். சொற்பிரபஞ்சம் அனைத்தும் சுத்த மாயையின் காரியங்களே. பொருட்பிரபஞ்சங்களுள்ளும் கலை சுத்த மாயையின் காரியமேயாம். ஏனைய புவனந் தத்துவம் என்பனவே சுத்த மாயையிற் றோன்றுவனவும் அசுத்தமாயையிற் றோன்றுவனவும் என இருவகைப்படும். சுத்தமாயை அசுத்தமாயையென மாயை இரண்டுள என்பது மேற்கூறினும். வன்னம் எழுத்து. வடமொழிச் சைவாகமத்துட் காணப்படும் எழுத்துக்கள் ஐம்பத்தொன்று; எல்லாப் பதங்கட்கும் மூலமாய பதங்கள் எண்பத்தொன்று; எல்லா மந்திரங்கட்கும் மூலமாய மந்திரங்கள் பதினொன்று; புவனங்கள் இருநூற்றிருபத்துநான்கு; புவனம் உலகம். தத்துவங்கள் முப்பத்தாறு; அவை மேலே காட்டப்பட்டன. கலை ஐந்து. அவை நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்திய தீதை. இப் பஞ்ச கலைகள் ஏனைய புவனம் முதலிய ஐந்தையும் தங்கண் அடக்கி வியாபகமாய் நிற்கும். இவ்வாறும் அத்துவாக்கள் எனப்படும். அத்துவா வழி. உயிர் இவற்றால் அறியாமை தேயப்பெற்று ஒவ்வொன்றாகக் கழித்து மேற்செல்லவேண்டுதலின் இவை வழியெனப்பட்டன. நிருவாணதீக்கையில் ஞானசிரியர் உயிரை இவற்றினின்று விடுபடச் செய்வர். அது அத்துவசுத்தி அல்லது அத்துவசோதனை என்றும், கலாசோதனை என்றும் சொல்லப்படும். இவ் அத்துவாக்களினியல்பும் அண்டங்களினியல்பும் எல்லாம் சிவஞானமாபாடியத்துட் காண்க.

இனிக் கன்மமலம் பயனாய் வருமாறு:— அநாதியாயுள்ள மூல கன்மம் உயிர்களது மனம் வாக்குக் காயமென்னும் மூன்றுந் தொழிற்படுங் காலத்து நல்வினையுந் தீவினையுமென் றிருவகையாய்க் காரியப்பட்டு ஆகாமியமென நிற்கும். பின் அவ்வினை பயன்படுங்காலம் வருந்துணையும் நுண்ணிலையை அடைந்து சஞ்சிதம் எனப் பெயர்பெற்று நிற்கும். பின்னர் அது பயன்படுங்கால் நல்வினை இன்பத்திற் கேதுவாய ஆகூழாயும், தீவினை துன்பத்திற்கு ஏதுவாகிய போகூழாயும் பிராரத்தமெனப் பெயர்பெற்று நிற்கும். பிராரத்த வினைப்பயன் வருங்கால் உயிர்களும் உலகமும் தெய்வமும் ஏதுவாகவரும். அவற்றுள் உயிரான்வருவது ஆத்தியான்மிகம் எனவும், உலகத்தான்வருவது ஆதிபௌதிகமெனவும், தெய்வத்தான்வருவது ஆதிதைவிகம் எனவும்படும். ஐவளிபித்துக்களாற் றம்முடன் பின்வரும் நலந்தீங்குகளும், பிற நல்லோர் தீயோரானும் விலங்கு முதலியவற்றானும் வரும் நலந்தீங்குகளும் ஆத்தியான்மிகம். மழையும் வெயிலுங் காற்றும் முதலியவற்றானும், பிறபொருள்களானும் வரும் நலந்தீங்குகள் ஆதிபௌதிகம். பிறப்பு இறப்பு இளமை முதுமை துறக்கம் நிரயம் முதலிய நலந்தீங்குகள் ஆதிதைவிகமென்க. முற்செய்த

வினையை அனுபவிக்குங்கால் விருப்பும் வெறுப்புங்கொண்டே அனுபவித்தலின் அவ்விருப்பு வெறுப்புகட்கேற்ப மனமொழி மெய்கள் தொழிற்படுமாகலின் அத் தொழிற்பாட்டால் மேலைக்கு வித்தாகிய ஆகாமியந் தோன்றும். அதனால், கன்மமலம் நாசோற்பத்தியாமென்பர். இவ்வாறு மும்மலங்களின் செய்தியுங் கண்டுகொள்க.

இனி மலங்களுள் ஆணவமலம் பொருளால் ஒன்றேயாய் எண்ணிறந்த உயிர்களை மறைக்கும் எண்ணிறந்த சத்திகளை உடையதாம். அச்சத்திகள் ஒவ்வொருகாலத்தில் நீங்குங் கால எல்லைகளை யுடையன என்க. மந்திரத்தால் தடையுண்ட நெருப்புச் சுடாதவாறு போலச் சத்தி நீங்கியவழி ஆணவம் மறைத்தல் இல்லை.

ஆணவமலத்தின் இயல்பினை,

[1] ஏகமாய்த் தங்கால எல்லைகளில் மீளும் எண்ணரிய சத்தியதாய்.

எனவும்,

[2] ஒன்றதாய் அநேக சத்தி யுடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச்செம் பினிற்க ளிம்பேய்ந்
தென்றும்அஞ் ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே.

எனவும் கூறுமாற்றானுணர்க.

இனிக் கன்மமலம், அநாதியாய மூலகன்மம் நாசத்திலுற்பத்தியாம் ஆகாமிய முதலியனவாய்க் காரியப்பட்டு, ஆன்மாக்கடோறும் செல்லும். இதனை,

[3] இருவினை அநாதி; ஆதி இயற்றலால்; நுகர்வால் அந்தம்.

எனவும்,

---

[1] சிவப்பிர, சூ, 2, பா, 2. [2], [3] சித்தி, சூ, 2, பா, 30, 40.

[1] நணணியிடும் உருவதனுக் கேது வாகி
நானுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரும் ஆதலால் அநாதி யாகிப்
பலவாகி அணுக்கள்தொறும் படர்வ தாகி
எண்ணிவரு மனவாச கன்மத்தால் இயற்றும்
இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே.

எனவுங் கூறுமாற்றான் உணர்க. இதனுள், "மதிகதமாய்" என்றது "புத்தி தத்துவம் பற்றுக்கோடாக நின்று" எனவும், "புலர்காலை மாயை மேவிப் பொருந்தும் என்றது "பிரளயகாலத்தில் புத்தி தத்துவம் மாயையில் ஒடுங்குதலின் அம் மாயையையே தான் பற்றிக்கிடக்கும்" எனவும் கூறியவாறென்க.

இனி மாயாமலத்தின் இயல்பினை,

[2] நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் அகிலத் துக்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகந் தனுகர ணமும்உ யிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யும் அன்றே.

என்பதனுறிக. சுத்தமாயை அசுத்தமாயை இரண்டும் வேறுவேறென்பாருளராயினும் ஒன்றென்பதே வலியுடைத்தென்பது மேற்கூறினும். மும்மலங்களும் அநாதி என்பது,

[3] நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே – வல்லி
மலகன்மம் அன்றுளவாம்.

எனவும்,

---

[1] சிவப்பிர, சூ, 2, பா, 10. [2] சித்தி, சூ, 2, பா, 53, [3] சிவஞானபோ, சூ, 2, அதி 2, பா, 3.

[1] மும்மலம் நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தனுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்.

எனவும்,

[2] உயிருண் டாவே உளதுமலம் மலமுளதாம் ஒழிந்த எல்லாம்
நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதி யாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்து மாறே.

எனவுங் கூறுமாற்றால் உணர்க. வல்லியென்றது மாயையை.

இனி, மாயையின் காரியங்களாகிய தனு கரண புவன போகங்களை மாயேயமென வேறொரு மலமாகவும், இம் மலங்களைத் தொழிற்படுத்து கின்ற சிவசத்தியைத் திரோதானகரி யென்பதோர் மலமாகவும் வைத்து மேற்சொல்லப்பட்டவற்றொடு கூட்டி மலங்கள் ஐந்தென்றும்சொல்லப்படும். அதனை,

[3] மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயும்மும் மலங்கள் தத்தந் தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வர்; இம் மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும்.

எனவும்,

[4] மோகமிக வுயிர்கடொறும் உடனாய் நிற்கும்
மூலஆ ணவமொன்று முயங்கி நின்று
பாகமிக வுதவுதிரோ தாயி ஒன்று
பகர்மாயை ஒன்று படர்கன்மம் ஒன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரும் மாமாயைத் திரட்சி ஒன்றென்(று)
ஆகமலம் ஐந்தென்பர்.

எனவும் வருவனவற்றானுணர்க.

---

1, 3 சித்தி, சூ, 2, பா, 86, 87. 2, 4 சிவப்பிர, சூ, 2, பா, 7, 14.

இங்குக் கூறப்பட்ட மலங்களாகிய பாசங்களும், அவற்றொடு கூடிநிற்கும் ஆன்மாக்களாகிய பசுக்களும், அப் பசு பாசங்களையுடைய முதல்வனாகிய பதியும் என்னும் அம் முப்பொருள்களினியல்பை இங்ஙனம் ஆய்ந்துணர்தலே முத்திக்கு வாயிலாகிய ஞானமாமென்க.

இது மேல் " இம் மூன்றும் ஆராய்ந்தவர் முத்தர் " என்றமையின் அம் முப்பொருள்களது இயல்பினை உணர்த்தியவாறு.

---

செங்கமலப் பொற்பாதன் சீர்பாத வல்லவங்கள்
நங்கமலை வாழ்கிளியே! நாடிக்கேள்—சங்கையிலாத்
தத்துவத்தைக் காட்டியதின் தத்துவத்தைக் காட்டி அருள்
தத்துவத்தைக் காட்டியது தான். (உஅ)

**இதன் பொழிப்பு:—** நந் திருவாரூரின்கண் மனம்வைத்த மாணவகனே! உற்றுக் கேட்பாயாக; மும்மலங்களி னியல்பையும், அவற்றொடு பொருந்திநிற்கும் உயிர்களதியல்பினையும், அவ்வுயிர்க்குயிராகிய சிவத்தினது உண்மையினையும் எனக்கு ஐயமறத் தெளிவித்தது எமது அருட் குரவரது செவ்விவாய்ந்த திருவடிகளேயாம் எ-து.

**இதனகலம்:—** செங்கமலப் பொற்பாத னென்பது வாளா பெயராய் நின்றது. சீர்பாதம் சீர்த்தபாதம் என்க. அஃதாவது முன்னைத் தவமுதிர்ச்சி யுடையார்க்கு நேர்படும் பாதமென்பது. வாழ்தல் ஈண்டு மனம் வைத்தலின் மேற்று; முன்னின்றார் பிறிது நினைவினராயவழி, " நீர் ஈங்கில்லை " யெனவும், " யாண்டுள்ளீர் " எனவும் கூறுதலை வழக்கினுட் காண்க. " சங்கையிலா " என்பது துவ்வீறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். தத்துவமென்றது உபலக்கணமாய் ஏனைய மலங்களையும் உணர்த்திற்று.

---

28. O, Parrot that hath the home in our Kamalai,
Lend thy willing ears to hear the powers
Of His noble golden feet like lotus red.
They showed the nature of countless tatvas
The Tatva of the soul therein
And the tatva of the loving grace.

பாசமென்னும் இனமொன்றுதல்பற்றி "அதின்" என்றார். அருளென்றது அதனையுடைய சிவத்தின்மேற்று. காட்டியதென்னும் ஒருமை தொழின்மேனின்றது. தான் அசைநிலை. காட்டியது சீர்பாதவல்லவங்கள் என இயைக்க. தத்துவத்தைக் காட்டி, அதின் தத்துவத்தைக் காட்டி, அருள் தத்துவத்தைக் காட்டியது என்றதனாற் காட்சிப்படும் பாசவியல்புபற்றிப் பசுவியல்பும், பின்னர்ப் பசுவியல்புபற்றிப் பதியியல்பும் உணரப்படுமென்பதுகொள்க. அது, [1]"உளதில தென்றலின்" என்றற் றொடக்கத்தனவாக ஆன்மப் பிரகாசத்தினைக் கருவிகளின் தொழிற்பாடுபற்றியுணர்த்துதலானும், [2]'தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" என்றதனானுமறிக. இன்னும் இதனானே பாசம் பசு பதி யென்பன முறையே தூல சூக்கும பரங்களாமென்பதூஉம் உணர்க.

இது, மூப்பொருள்களது இயல்புணர்தல் அருட்குரவரது திருவருளானேயாம் என்றவாறு.

---

தேசு செறிகமலைச் செங்கமலப் பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன்—பாசவினை
வாட்டினான் மீட்டுநான் வாரா வகைஅருளைக்
காட்டினான் கூட்டினான் காண். (உ௯)

இதன் பொழிப்பு:— மணி முதலியவற்றின் ஒளிகள் மிகுந்த திருவாரூரின்கண் எழுந்தருளியுள்ள செந்தாமரை மலர்போலும் திருவடிகளை யுடையவரும், தமிழ்மொழியானே திருவாய்மலர்ந் தருளுகின்றவருமாகிய ஞானப்பிரகாசரென்னும் எமது அருட்குரவர் முன்னர்ப் பாசங்களை யறுத்துப், பின்னர் யான் அப் பாசங்களிற் றிரும்பாதவாறு திருவருளாலே தெளிவித்துப், பின் அத்திருவருள் வாயிலாகச் சிவத்தை யடையச்செய்தார் எ-து.

29. He with golden feet like lotus red
Coming of Kamalai full of splendour
Jnanaprakas, whose Tamil is of great repute,
He made the pasam of Karma wither
Showed His Grace and united me to it,
Lest I should be born again.

[1] சிவஞானபோ, சூ, 3. [2] சிவஞானபோ, அவையடக்கம்.

இதனகலம்:— காண் முன்னிலையசை. "நீ அறி" என்றுரைத் தலுமாம். இது மும்மலங்களும் பேதிபண்ணி நீக்குங்கால் முன்னர்ப் பாச நீக்கமும், பின்னர்த் திருவருளும், அதன்பின்னர்ச் சிவப்பேறும் முறை யானே உளவாமென மேலனவற்றது பயனுணர்த்தியவாறு.

இவை ஆறு வெண்பாக்களானும் ஞானத்தினியல்பு சிந்திக்கு மாற்றின்வைத்து வகுத்துணர்த்தப்பட்டது.

---

நானிங்காய் நீயங்காய் நாட்டமற வைத்ததற்பின்
நானெங்கே நீயெங்கே நாதனே!—வானெங்கும்
ஒன்றாகி நின்ற உணர்வுநீ உன்னறிவில்
நன்றாகத் தோன்றுசுகம் நாம். (௩௦)

இதன் பொழிப்பு:— எமது முதல்வரே! எனது தன்மை அதுவா யினும் யான் மாயா காரியங்களிடத்தும், நீர் மாயையைக் கடந்தவிடத்து மாக இயைபில்லாதவாறு அடியேனை வைத்தமையின், யான் என்னையுந் தேவரீரையும் உணரும் வலியிலேனாயினேன். இனி உணருமாறென்னை? இதுவினா. நீஅம் மாயாகாரியங்களல்லே; ஆகாயம்போல எவ்விடத்தும் நிறைந்துநின்ற அறிவே யெனவும், யாம் நின்னின்வேறல்லேம் அவ் வறிவில் நன்குவிளங்கும் இன்பமே யெனவும் மேற்கூறிய அவ் வியல்பினை மாயாகாரியங்களான் மறவாது தெளிந்து நிற்றலே உணருமுறைமையாம். இது விடை எ-து.

இதனகலம்:— இங்கு அங்கு என்பன மாயையின் அகத்தையும் புறத்தையும் உணர்த்தின. எங்கே என்பன இல்லை என்னும் பொருளவாய் அறியமாட்டாமையை யுணர்த்தின. வானென்புழி ஒப்புப்பொருளில்

---

30. "When the perception that I am here and Thou art there
Hath been brought to an end,
Where would I be and where wouldst Thou, O, Lord?
"Thou art the Intelligence standing united
Through all the Universe, and We the joy
Appearing clear in Thine Intelligence."

வந்த இன்னுருபு விரிக்க. எங்கும் ஒன்றாகி என்றது நிறைந்தென்றவாறு. உணர்வு நீ யென்றதனான் மாயாகாரியங்களல்லே எனவும், "உன்னறிவில் தோன்று" மென்றதனான் "நின்னின் வேறல்லேம்" எனவும் நின்ற மறுதலைப் பொருள்கள் வருவிக்கப்பட்டன. இறுதியிலுரைத்தன குறிப் பெச்சம்.

"எங்கும் ஒன்றாகிநின்ற உணர்வு நீ உன்னறிவில் நன்றாகத் தோன்றுசுகம் நாம்" என்றது 'பசு பதிகளினியல்பினை' என்னுந் துணையாய் மறித்துணர்வு நிகழக் கூறியதாகலின் கூறியதுகூறலன்மை யுணர்க.

இது, மேற்கூறியவாறு ஞானத்தினியல்பைத் தொகுத்தும் வகுத்தும் உணர்ந்தவழியும் அனுபவங்கூடாது; அங்ஙனமுணர்ந்தவாற்றால் தெளிந்தவழியே அது கூடுமென்றவாறு. எனவே, அவ்வுணர்வுகட்குப் பயன்தெளிதலாயிற்று. தெளிவில்வழி மெய்ப்பொருளுணர்வாற் பயனின்றா மென்பது, [1]"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின் – அரு ளாதான் செய்யும்அறம்" என உவமமாக்கி யுரைத்தவாற்றானு முணர்க.

---

அலைவற் றிருந்த அறிவுநீ ஆங்கே
நிலைபெற் றிருந்தசுக ஞேயம்—மலைவற்
றிருந்ததுகண் டாயே இருந்தபடி அத்தோ
டிருந்துவிடெப் போதும் இனி. (௩௧)

இதன் பொழிப்பு:— தத்துவங்களிற் சென்றலையாது அவற்றி னீங்கி நின்ற அறிவாகிய நீ அங்ஙனம் நீங்கிநின்ற நிலைக்கண், நின்றுழி நில்லாதுதிரியும் அத் தத்துவங்கள் போலன்றி நிலைபெற்றுத் தோன்று கின்ற இன்ப வடிவினதாகிய ஞேயப்பொருள் தெளிவுபடத் தோன்று தலைக் கண்டாயன்றே! இனி அஞ்ஞேயப்பொரு ளிருந்தவாறு அதனோடே எப்போதும் நீங்காதிருந்துவிடு எ-து.

31. Thou art the Intelligence standing unagitated.
Perceivest thou therein the joy
That endureth without agitation as well.
Remain true and fast in that realisation
United with it for ever hereafter.

[1] குறள் பா, 249

இதனகலம்:— தத்துவங்களி னீங்குதல் சிந்தித்தவழியே பெறப் பட்டுக் கிடத்தலின் ஈண்டு "அலைவற்றிரு" என்றது "அலைவற்றிருந்த அறிவு நீ" என அனுவதித்தும், சிந்தனையால் தத்துவங்களி னீங்கினார்க்கு ஆண்டே கயிறற்றவழி ஊசற்குத் தரையல்லது பிறிது நிலையின்மை போலத் தமக்குச் சிவமல்லது பிறிதுநிலையின்மை தெற்றென விளங்கு மாகலின் "ஆங்கே நிலைபெற்றிருந்த சுகஞேயம் மலைவற்றிருந்தது கண்டாயே" எனவும், அவ்வாற்றான் அஞ்ஞேயப்பொருள் சிந்தனைக்கண் வெளிப்பட்டபின்னர் அதனை மகவின்கைப் பொற்கிண்ணம் போலப் பராக்கால் வீழ்த்துப்போகாது தெளிவான் இறுகப்பற்றுதலே இனிச் செய்யக்கடவ தென்பார் "இனி அத்தோடு இருந்துவிடு எப்போதும்" எனவும், அங்ஙனம் பற்றுதற்கு நாஞ் செயற்பால தொன்றுமின்றி அதனை நோக்கி நிற்றன்மாத்திரையேயா மென்பார் "இருந்தபடி இருந்துவிடு" எனவுங் கூறினர். அதனோடென்பது அத்தோடெனத் தொகுத்தலா யிற்று.

இது, தெளிவாமாறு இதுவென்பது உணர்த்தியவாறு.

---

அகத்தை இழந்தருளாய் அவ்விடத்தே தோன்றுஞ்
சுகத்தில் அழுந்திவிடச் சொன்னான்—மகத்தான
சிற்பரனா ரூர்தனில்வாழ் செங்கமலப் பொற்பாத
தற்பரஞா னப்பிரகா சன். (௩௨)

இதன் பொழிப்பு:— நானென்பதனை யிழந்து, அருளேதானாய்ப் பின் அவ்விடத்துத் தோன்றுகின்ற சுகத்தில் அழுந்தி, அதனால் பாசக் கூட்டங்களை விடுக என்று அருளிச்செய்தார்; பேரறிவினராய்த் திருவா ரூரின்கண் எழுந்தருளியுள்ள செந்தாமரை மலர்போலும் திருவடிகளை யுடைய, உயிர்கட்குத் தலைவராகிய ஞானப்பிரகாசரென்னும் எமது அருட்குரவர் எ-து.

---

32. He bade me cast off the ego from me
Sink in the joy that riseth in grace
The Magnificent one transcending all knowledge,
He with golden feet like lotus red, residing in Arur
He that is highest, Jnanaprakas.

இதனகலப் :— அகமென்பது நானென்னும் பொருட்டாய வட சொல். நானென்பதனை யிழத்தலாவது கேட்டல் சிந்தித்தல்களான் முதல்வன் திருவருளையின்றித் தனக்குச் செயலின்றென வுணர்ந்தவாறே தெளிந்து, அதனுன் முன்னர்த் தத்துவங்களே தானுகவும், பின்னர்த் தன்னைத் தத்துவங்களின் வேறாகவும், தனக்கு முதல் திருவருளாகவும், அத் திருவருட்கு முதல் இறைவனுகவும் அறிந்த அறிவுகளும் அவற்றின் வழிச் செய்யுஞ் செயல்களுமெல்லாம் அவன் செயலேயன்றி நஞ்செயலல்ல எனக் கண்டு அக் காட்சியான் ஞேயத்தைக்காணும்வழி நானென்றொரு பொருள்நினையாது கண்டு நிற்றல். இந்நிலைதானே, "ஏகனுகி" எனச் சிவஞானபோதத்துள் கூறப்பட்டதென்க.

இனி, அருளே தானுதலாவது, அங்ஙனம் நானென்பதனையிழந்து ஞேயமொன்றே பொருளாகக் காணும்வழி அக் காட்சிக்குத் தடையாய் மனம் முதலிய கருவிகளின்வழித் தொழிற்பட வருமாயின், அவ்வரவு தானும் அவனது பணியாக அறிந்து தொழிற்பட்டு நிற்றல். இதனை, "அவனருளாலல்ல தொன்றையுஞ் செய்யாமையாகிய இறைபணிநிற்ற" லென்றார் சிவஞானபோதத்துள். இவ் விருவகையினையும் ஞானதரிசனம் பரைதரிசனமுதற் சுத்தவவத்தை யீராகப் பத்தாகவைத்து வகுத்துரைத்தார் துகளறுபோதத்துள். அகத்தை யிழத்தலும் அருளாதலுமென்னு மிரண்டுந் திருவருளுணர்வானே ஆவனவாயினும், அவ்வுணர்வான் ஞேயத்தைக் காணுதலொழிந்து பிற செயல்களினீங்கி நிற்றல் அகத்தையிழத்தலெனவும், பிற செயல் செய்யவரின் திருவருளை மறவாது செய்தல் அருளாதலெனவும் உணர்க. முன்னதனைச் சிவதரிசனமெனவும், பின்னதனைச் சிவயோகமெனவுங் கூறுப. அகத்தை யிழத்தற்குப் பயன் மலத்தினீங்கிச் சிவானந்தத்தைத் தலைப்படுதல். அருளாதற்குப் பயன் மாயை கன்மங்களினீங்கிப் பிறப்பறுதல்.

இனி, நானென்பதனையிழந்து அருளேதானயவழிச் சிவாநந்தத் தோற்றம் உண்டாமாகலின், "அவ்விடத்தே தோன்றுஞ் சுகத்தில்" எனவும், அச்சுகநிலையிற்றானே வழுவாது நிற்க மாயையுங் கன்மமுமாய பாசங்கள் நீங்குமாகலின், "அழுந்திவிடச் சொன்னுன்" எனவுங் கூறினர். அழுந்திவிட என்பது காரணகாரியப் பொருட்டாய் நின்றது. இங்ஙனங் கூறவே, அகத்தையிழந்து அருளாய் அவ்விடத்தே தோன்றுஞ் சுகத்திலழுந்தியவழி உளதாவது பாசநீக்க மென்பது பெறப்பட்டது. [1]"ஏகனுகி இறைபணி நிற்க – மலமாயை தன்னொடு வல்வினை இன்றே"

[1] சிவஞானபோ, சூ, 10.

எனச் சிவஞானபோதத்துள் அருளிச்செய்தமை காண்க. அகத்தை யிழந்து அருளாயவழிச் சுகவொளி தோன்றுமென்பதனைப், [1]"பைய இருந்து பதைப்பற்றபின் உனக்குத் - துய்ய சுகப்பிரபை தோன்றுமே" என்பது முதலாகச் சுகரூபமென வைத்துத் துகளறுபோதத்துள் வகுத்தோதுதல் காண்க.

இனி, அகத்தை இழக்குமாற்றினை, [2]"அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி" எனவும், அருளாய் நிற்குமாற்றினை,

> [3] நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
> நாமல்ல நாமும் அரனுடைமை — ஆமென்னில்
> எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை
> முற்செய்வினை யுந்தருவான் முன்.

எனவும் அருளியவாற்றான் உணர்ந்துகொள்க.

இது, தெளியுமாற்றினை யுணர்த்தியவாறு. இவை மூன்று வெண்பாக்களானும் ஞானத்தினியல்பு தெளிவிக்கப்பட்டது.

---

கிட்டாத ஈசனுனைக் கிட்டி அருள்புரிந்த
நிட்டாநு பூதி நிலையிலே—முட்டா
திருவன்னி சேர்ந்துமாற் றேறியபொன் போல
வரும்இன்ப பூரணமா வை. (௩௩)

33. Stand unhindered in the state
Of realisation of holy union
Which the Lord, Unapproachable
Drawing near, in grace vouchsafed to thee.
As gold put in fire enhanceth in quality
Even so shalt thou become
The perfection of joy that cometh to thee.

[1] துகளறு, பா, 53, [2] சிவஞானபோ, சூ, 10. [3] டிை சூ, 10. அதி, 2, பா, 1.

**இதன் பொழிப்பு:—** கிடைத்தற்கரிய முதல்வன் தானே தனது கருணையால உன்பால் வந்து உனக்கு அருள்செய்த நிட்டையாகிய அநுபவ நிலையிற்றானே வழுவாது நில்; அங்ஙன நிற்கவே நெருப்பையணைந்த தனால் மாற்றொளி மிகப்பெற்ற பொன்போல ஒருகாலைக் கொருகால் மிகும் பேரின்பநிறைவினை யுடையையாகுவை எ-து.

**இதனகலம்:—** நிட்டையாவது முன்னர்ச் சிந்தித்துத் தெளிந்த தனை அநுபவமாகப் பெறுதலென்பார் நிட்டையிலே யென்னாது "நிட்டாநுபூதி நிலையிலே" என்றார். நிற்றல் இருத்தல் என்பன ஈண்டு அறிவுத் தொழின்மேலவாகலின் மூட்டாமை மறவாமை என்க. மறத்தலாவது தெளிவாற்பெற்ற ஞேயத்தினையன்றிப் பிறபொருளை அறிதல். ஞேய மொன்றனையே மறவாது அறிதல் யாங்ஙனங் கூடுமென்பார்க்கு, எத்துணையும் அரிய முதல்வன் எத்துணையும் எளிய தமக்கு எளிவந்து அருள் செய்த திறத்தினை உன்னுந்தோறும் அவன்மாட்டு அன்பு மீதூருமாகலான் அவ்வன்பானே அவனைமறவாதறிதல் கூடுமென்பார் "கிட்டாத ஈசனுனைக்கிட்டி அருள்புரிந்த" என்று உடம்பொடுபுணர்த் தோதினார். பிறவித்துன்ப நீக்கத்திற்கும், பேரின்பப் பேற்றிற்குங் காரணமாய சிறப்புப்பற்றி ஆசான்மூர்த்தியாய்வந் தருள்புரிந்த தொன்றனையே கூறினாராயினும் இனம்பற்றி முன்னர்ப் பெத்தத்தில் உயிர்க்குயிராய்நின்று உலகபோகத்தினை நுகர்வித்து வளர்த்த உபகாரத்தையுன்னுதலும், இப்போதும் அவ்வாறு நின்று சிவபோகத்தினை நுகர்வித்து வாழ்விக்கும் உபகாரத்தையுன்னுதலும் கொள்ளப்படும். [1]"அயரா அன்பின் அரன் கழல் செலுமே" எனச் சிவஞானபோதத்துள் பொதுப்பட ஓதுதலுங் காண்க.

[2] வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா!
ஊனை நாடகம் ஆடு வித்தவா!
உருகி நானுனைப் பருக வைத்தவா!
ஞான நாடகம் ஆடு வித்தவா!
வைய வையகத் துடைய விச்சையே.

எனவும்,

[1] சிவஞானபோ. சூ. 11. [2] திருவாச. சதகம். பா. 95.

[1] உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளம்மன்னிக்
கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே.

எனவும் எல்லாவற்றையும் ஒருங்குநினைந்து வியந்துருகுமாறும்,

[2] உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற மெய்யா.

எனவும்,

[3] வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனுங்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்
டூன்வந் துரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்.

எனவும்,

[4] பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த செல்வமே! சிவபெரு மானே!.

எனவும் வேறுவேறு நினைந்துருகுமாறும் ஆண்டாண்டுக் கண்டுகொள்க. இவ்வாறுருகும் அன்புதானே பேரின்பத்திற்குக் காரணமா மென்பது, [5]"அன்பினில் விளைந்த ஆரமுதே" எனவும், [6]"இன்பமே என்னுடை அன்பே" எனவும் பிறவாறுங் கூறுமாற்றான் உணர்க.

சிவத்தைச்சார்ந்து பேரின்பம் நிரம்பப்பெறு முயிர்க்கு நெருப்பைச் சேர்ந்து மாற்றொளி நிரம்பிய பொன்னே உவமையாகற்பாலதன்றி, மாசு நீங்கி ஒருகாலைக்கொருகால் ஒளிவிட்டுவரும் பொன் உவமையாகாமையின், [7]"சுடச் சுடரும் பொன்போல்" என்றாற்போல நிகழ்காலத் தாற்கூறாது "வன்னிசேர்ந்து மாற்றேறிய பொன்போல" என இறந்த காலத்தாற் கூறினர்.

[1] திருவாச, கண்டப், பா, 3. [2] ஷை. சிவபுரா, வரி 33. [3] ஷை. அம்மானை, பா, 4. [4], [5] ஷை. பிடித்த, பா, 9, 3. [6] ஷை. கோயிற்றிருப், பா, 1. [7] குறள், பா, 267.

சிவபோகம், உலகபோகம் போல வரம்புணரப்படுத லின்றிப் புதிது புதிதாய் வரம்பின்றி விளைந்து இன்பஞ்செய்து நிற்றலின் அது "வருமின்பம்" எனப்பட்டது. எனவே, "இன்ப பூரணமா வை" என்புழிப் "பூரணம்" என்றது அவ் இன்பநுகர்ச்சிக்கு இடையீடின்மை யாயிற்று.

பேரின்பம் எல்லையற்றதாதலை, [1]"அந்தமொன்றில்லா ஆனந்தம்" [2]"அளவிலா மாளா இன்பமா கடல்" என்றற் றொடக்கத்துத் திருமொழிகளானுணர்க.

இன்பந்தரும் பொருளது தன்மையை உணர்தல்தானே இன்பமாகலின், உலகப்பொருட்டன்மை முற்று முணரப்படுதலின் உலகின்பம் புதிதாதலின்றி வரையறைப்படுதலும், சிவத்தது தன்மை உயிர்களான் அங்ஙனம் உணரவாராமையின் உணருந்தோறும் இன்பம் புதிதுபுதிதாய் விளைந்து வரையறைப்படாமையும் உடையவாயின. இதனை,

> [3] அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
> செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

எனவும்,

> [4] *  *  *  *  இக் கொடியிடைதோள்
> புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம் பின்னும் புதிதாய்
> மணந்தாழ் புரிகுழலாள் அல்குல்போல வளர்கின்றதே.

எனவும், புனைந்துரை வகையால் காமவின்பத்தின் மேலிட்டுக் கூறிய வாறுபற்றி யுணர்ந்துகொள்க. [5]"ஆராவமுதே அளவிலாப் பெம்மானே" என்புழி ஆராமை அளவிலாமையானுயிற்றென்பது குறிக்கப்பட்டவாறுணர்க. ஆர்தல் நிரம்புதல்; என்றது தெவிட்டுதலை. எனவே, [6]"கனியினுங் கட்டிபட்ட கரும்பினும் பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும் ......... இனியன்" என்றாற் போல்வனவும், சிவபோகத்தது புதுமை யுணர்த்திய வாறாமென்க. முதல்வன்றன்மை முழுதும் யாண்டும் உயிர்களான் அறியவாராதென்பது,

---

[1] திருவாச, கோயிற்றிருப், பா, 10. [2] ஷெ பிரார்த்தனைப், பா, 6. [3] குறள் பா, 1110. [4] திருக்கோவை, பா, 9. [5] திருவாச, சிவபுரா, வரி, 67. [6] அப்பர், இடைமருது குறுந், பா, 10.

[1] நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்.

எனவும்,

[2] கடலலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றுங்
கடலளக்க வாராதாற் போலப் — படியில்
அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாங்
கருத்திற்குச் சேயனைக் காண.

எனவும் கூறுமாற்றானுணர்க.

மாற்றேறிய பொன்போல என்புழி மாற்றேறிய பொன் அம் மாற்றொளியானிரம்பினாற் போலவெனப் பொருட்கேற்றவினை வருவித்துக் கொள்க. இன்ப பூரணமென்புழிப் பகரந் தொகுத்தலாயிற்று; நிலை மொழி தமிழ்ச் சொல்லாகலின் வடநூன் முடிபெனல் பொருந்தாது. "முட்டாதிரு, இன்ப பூரணமாவை" எனவே, அங்ஙனமிருத்தலே நிட்டை கூடுதலென்பதும், அதற்குப்பயன் இன்பப்பேறென்பதும் பெறப்பட்டன. அவ் வின்பநிலை முன்னர் இனிதுணர்த்தப்படும்.

இது, நிட்டையாமாறும், அதன்பயனும் உணர்த்தியவாறு.

---

அநாதிசுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா—அநாதி
இருந்தமலம் போக்கி! இறைஅருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு. (௩௪)

---

34. Eternal Bliss is the form of Hara
Also eternal Bliss in form is the soul
While beneath His feet, with eternal malam removed.
Remain thou perceiving that state
By the grace of God.

[1] திருமுருகாற், வரி, 278. [2] திருக்களிற், பா, 90.

**இதன் பொழிப்பு:—** அநாதியே இன்பவடிவினனாகிய முதல்வனது திருவடி வியாபகத்துள் நின்று என்றும் அநாதியாய இன்ப வடிவினதாதற்குரித்து ஆன்மா; அற்றாயினும், அநாதியே அதற்குத் தடையாய் இருந்தது ஆணவமலமாகலின் அதனை அவனது திருவருளினாற்போக்கி இனி நீ அத்திருவருள் கண்ணாக ஞேயத்தைக் கண்டபடியேமாறாது கண்டு கொண்டிருப்பாயாக எ-து.

**இதனகலம்:—** அடிக்கீழென்பது வியாபக வியாப்பியமுணர்த்திய வாறென்பது மேலுமுரைத்தாம். இருந்த என்பது இசையெச்சத்தால் தடையாயிருந்த எனப் பொருள்தந்து நின்றது. சொற்பல்காமைப் பொருட்டு அநாதியிருந்தமல மென்பதனை வேறுதொடராக வைத்துரையா ராயினர். அருளினாலே என்பது தாப்பிசையாய் மேலுஞ் சென்றியைந்தது. இருந்தபடி யென்றது பெயராதென்னும் பொருட்டாய் அந்நிலையது பண் புணர நின்றது.

முதல்வன் திருவடிப்பேறே ஆன்மாவிற்கு முடிந்த பேறாதல் விளக்குவார், இனி நீ இன்ப நுகர்ச்சியை யொழித்துச் செய்யக்கடவ தொன்றில்லையென "இருந்தபடியே கண்டிரு" வென்பார் அதற்குக் காரணங் கூறுவாராய் அவ் வின்பநுகர்ச்சியே நினது இயற்கை நிலை யெனவும், அவ் வியற்கைக்கு மாறாய்த் துன்பநிலையை யெய்துவித்தது நினக்கு அநாதிக் குற்றமாய ஆணவமலமெனவுங் கூறுதற்பொருட்டு. "அநாதி சுகரூபி அரனடிக்கீழ் என்றும் – அநாதி சுகரூபி ஆன்மா' எனவும், "அநாதி யிருந்தமலம்" எனவுங் கூறினார். இயற்கையாதலின் அதன்மேற் பெறற்பாலதுமில்லை, அதனி னீங்குமாறுமில்லை யென்பது கருத்து. [1]"பேரா இயற்கைதரும்" என வீடுபேற்றினைப் பேராதநிலை இயற்கைநிலை என்றதூஉம், [2]"பிரமபுரந் தொழவிரும்பி யெண்ணுதலாஞ் செல்வத்தை யியல்பாக அறிந்தோமே" [3]"மீண்டுவாரா வழியருள் புரிபவன்" என்றற் றொடக்கத்தனவாகக் கூறுவனவும் இக் கருத்தேபற்றி எழுந்தனவென்க.

இது, நிட்டையாற் பெறப்படுஞ் சிவானந்தாநுபவ நிலையின் இயல்பு உணர்த்தியவாறு.

---

[1] குறள், பா, 370. [2] சம்பந்தர், பிரமபுரம், பா, 5, [3] திருவாச, கீர்த்தித்திரு வகி, 117.

இற்றை வரைக்கர ணத்தோ டிணங்கினையே
இற்றைவரைச் சென்மம் எடுத்தனையே—இற்றைவரைத்
துன்பவெள்ளத் துள்ளே துளைந்தனையே யீதறநல்
இன்பவெள்ளத் துள்ளே இரு. (௩௫)

இதன் பொழிப்பு:— படைப்புக்காலந் தொட்டு இதுகாறுங் கருவி கரணங்களிற் றொடக்குண்டு பிறவியிற்பட்டுப் பெருந்துன்பத்திற் பட்டாயன்றே; இனி அத்துன்பமெல்லா நீங்கப் பேரின்பவெள்ளத்துள் திளைத்திருப்பாயாக எ-து.

இதனை கலம்:— இனி மீளப் பந்தநோக்கம் எழுமாயின் பெத்த முத்திகளது துன்பவின்பப் பெருக்கங்களை யுணர்ந்து அதனின் நீங்குக வென்பார், இவ்வாறு கூறினர். முதல்வன் திருவடி யின்பத்தோடு நோக்கக் காரணக் கடவுளர்களது பதவியின்பங்கடாமும் மேருவின் முன் அணுவாமாதலின் அவ் வின்பத்தை யெய்தினர்க்குப் பிற இன்பங்களின் மேல் நாட்டஞ் செல்லாதென்பது,

[1] கொன்றைத் தொங்கலா னடியவர்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே.

[2] வேண்டேன் புகழ் வேண்டேன்செல்வம் வேண்டேன்மண்ணும் விண்ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம் வேண்டார்தமை நாளுந்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு திருப்பெருந்துறை யிறைதாள்
பூண்டேன்புறம் போகேன் இனிப் புறம்போக லொட்டேனே.

என்றற் றொடக்கத்துத் திருமொழிகளானறிக.

பெத்த நிலைக்கண்ணும் இன்பமுண்டென்பார்க்கு, அது முன்னும் பின்னும் பெருந்துன்பத்தினைச் செய்து சிறுவரைநிற்குஞ் சிற்றின்பமெனவும், முதல்வன் திருவடியின்பம் அன்னதன்றி மேன்மேலெழும் பேரின்பமெனவுங் கூறுவார், "நல்லின்பவெள்ளம்" என்றார்.

---

35. Till now thou hast been in union with karana
Till now thou hast been taking births
Till now thou hast been immersed in a flood of pain.
That this may end, abide thou in the goodly flood of joy.

[1] சம்பந்தர், சாய்க்காடு, பா, 7. [2] திருவாச, உயிருண்ணிப், பா, 7.

இது, பெத்தமுத்திகளது துன்ப இன்பங்களை ஒருங்குவைத் துணர்த்தி மீளப் பந்தத்தின்கட் செல்லாது முத்தி நிலைக்கண் நிறபித்தவாறு

---

தேகாதி நானல்ல என்றறிந்தால் சித்தமயல்
போகாத தென்னையோ புண்ணியா—தேகாதி
தன்னளவே அம்மயக்கம் சத்தியமாய் எப்பொழுதும்
உன்னளவே இல்லை உணர். (௩௬)

இதன் பொழிப்பு:— முன்னைத் தவப்பயனுயுள்ளீர்! உடம்பு முதலிய மாயேயங்கள் நானல்ல என்றுணரும் உணர்வு கைவந்த வழி யன்றே ஞேயத்தழுந்துதலாகிய நிட்டை கைவரப்பெற்றுப் பேராவியற்கை யெய்துதல் கூடும்? அவற்றை யான் அங்ஙனம் உணர்ந்தவழியும் அவற்றை நானென்று மயங்கும் மயக்கம் என்னைவிட்டொழியாதுவந்து தாக்குதற்குக் காரணம் என்னையோ? இதுவினா. அம் மயக்கம், காயமெடுக்கப்பட்ட கலத்துள் அக் காயம் வாசனைமாத்திரமாய் நிற்றல்போல அம் மாயேயங் களுள்ள துணையும் வாதனை மாத்திரமாய் உன்னை ஒரோர்கால்மெலிதாய் வந்துதாக்கி அவ்வுடம்பளவினதாய் நிற்றலன்றி முன் மெய்யாய் எப் பொழுதும் உன்னறிவினை மயக்கி வலிதாயிருந்தாற்போலில்லை என்று உணர்வாயாக. இதுவிடை எ-து.

இதனகலம்:— தன்னென்பது பன்மை யொருமை மயக்கம். தேகாதி தன்னளவே யென்றதனுன் அவ்வாதனை மாத்திரையாய் நிற்கும் மயக்கம் உன்னை நிட்டையிற் செல்லாவாறு தடுத்து முன்போலப் பந்த முறுத்தவல்லதன்று என்பதாம்.

---

36. "Even when it hath been understood
That body and such things are not I
The confusion of the mind goeth not
Why, O, Virtuous one?"
"That confusion extendeth as far as body and such things only.
Know this, it never doth reach as far as thee."

இது, நிட்டையின்கட் சேறலுறுவார்க்கு நிகழ்வதோர் ஐயம் அறுத்தவாறு.

---

ஆறாறு தத்துவநீ அன்றென் றறிந்தனையே
ஆறாறும் கண்டறிவன் ஆயினையே—மாறாமல்
உன்னறிவில் ஆனந்தத் தோங்கினையே ஓராமல்
நின்னறிவை விட்டதுவாய் நில். (௩எ)

இதன் பொழிப்பு:— முப்பத்தாறு தத்துவங்களும் நின்னின் வேறென்றறிந்து, அவையனைத்தும் சடமாதலையும் நீ சித்தாதலையும் அநுபவமாக வுணர்ந்து, பின் உனதறிவின்கட்டோன்றும் ஆனந்தத்தை அடைந்து உயர்ந்தாயன்றே! இனி, நீ அவ்வானந்தத்தை வேறாக உணராது அதுவேயாய் நிற்பாயாக எ-து.

இநனகலம்:— தேகாதிகளை நானென்று மயங்குமயக்கம் அவற்றி னீங்கி நிட்டையினின்றாரை ஏனையோரைப்போல வந்து மயக்குமாறில்லை யென்பார் "அறிந்தனையே", "கண்டு அறிவனாயினையே", "ஓங்கினையே" எனக் கீழ்ப்போனவற்றைத் தனித்தனி யெடுத்துக்காட்டியும், இனி அம் மயக்கவாதனை ஈண்டு உன்னைத் தாக்குவதாயின் தாக்குமாறு நீ ஞேயத்தை உணருங்கால் "யான் இதனை உணராநின்றேன்" என யான் எனவும் இது எனவும் பகுத்து உணராநின்றேன் எனத் தன்முனைப்பைச் செய்வதேயாமாகலின், அதனை அவ்வாறு பகுத்துக்காணாது ஒற்றித்து நிற்குமாற்றான் நீங்குதலே செய்யக்கடவதென்பார் "ஓராமல் நின் அறிவைவிட்டு அதுவாய் நில்" எனவுங் கூறினார்.

---

37. Surely hast thou learnt that six and thirty tatvas are not thou,
Surely hast thou seen those six and thirty tatvas and grown wise,
Surely hast thou constantly increased in the joy
That springeth in thine intelligence.
Leave perceiving with thy knowledge and stand at one with that.

[1] யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்.

என்றார் வள்ளுவனாரும்.

ஞேயத்தை யுணருங்கால், "யான் இதனை உணராநின்றேன்" என எண்ணுதல் உண்மையேயாகலின் அது தேகாதிகளை யானென்று உணரும் உணர்வோடொப்ப மயக்கவுணர்வாதல் யாங்ஙனமெனின், ஒன்றையுணருமிடத்துப் பிறிதொன்றனை உணரமாட்டாமையன்றே உயிரின தியல்பு; அவ்வாறாக, யான் இதனை உணராநின்றேன் என்புழித் தன்னையும் தன்செயலையும் உணர்வதல்லது அவ்வழி ஞேயத்தை யுணராமையானும், யாண்டும் முதல்வன் உடனாய்நின்று அறிவித்தும் அறிந்தும் நின்றாலன்றி உயிர்ஒன்றை உணரமாட்டாமையானும் அவ்வாறெண்ணுதல் மயக்க உணர்வேயாமென்க. இதுபற்றியே காண்பான் காட்சி காட்சிப் பொருளென்னும் மூன்றும் அற்ற இடமே முடிந்தவிடமென்பர் பெரியோரென்க. இனி இம் மூன்றும் அற்ற இடமென்பதற்கு இங்ஙனம் மூன்றையும் பகுத்துக்காணும் வேற்றுமையுணர்வு நீங்கிய இடமென்பது கருத்தென உணரமாட்டாதார் காட்சிப் பொருளொழிந்த பொருளிரண்டும் கயிற்றிலரவுபோலப் பொய்ப் பொருளாமெனவும், அப் பொய்ப்பொருளை மெய்ப்பொருளாகக் காணுதலே மயக்கவுணர்வெனவும், அவ்வாறன்றி அப் பொய்யைப் பொய்யெனக் கழித்தலே மெய்யுணர்வெனவுங் கூறுப. கயிறுதானே தன்னை அரவென மயங்குதல் கூடாமையின் அங்ஙனம் மயங்கும் பொருள் வேறுண்டென்பதனை அவரும் உடம்படுதல் வேண்டுமாகலின் காட்சிப்பொருளொழிந்த இரண்டும் பொய்யென்றதும் மயக்கவுணர்வேயாமென்க. எனவே, காண்பான் காட்சி காட்சிப்பொருள் எனப் பொருள் மூன்றில்லை என்றலும், அவை உளவாயினும் அவற்றை இங்ஙனம் பகுத்துக்காணுதலும் உடையோர் சிவாநுபூதியையெய்தினோராகாரென்பதும் பெறப்படும். இதனைக்,

[2] காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்.

என இனிது விளக்கினார் உமாபதிசிவனாரென்க.

---

[1] குறள், பா, 346. [2] வினாவெண்பா, பா, 11.

இது, தேகாதி தன்னளவேயாகிய அம் மயக்கம் கிட்டையினின்ருரை மீளப் பந்தமுறுத்த வல்லதல்லதாயினும் ஆண்டு அது செய்யுஞ் சிறுமை இது என்பதும், அஃதுண்டாயவழி அஃது இவ்வாற்ருனகலும் என்பதுங் கூறியவாறு.

---

மாதா பிதாச்சுற்றம் என்று மயங்கினேயே
நீதான் தனுவாகி நின்றனேயே—ஈதெல்லாம்
பொய்யென் றறிந்தனேயே பூரணா னந்தவெள்ளம்
மெய்யென் றறிந்தனேயே மெய். (௩அ)

**இதன் பொழிப்பு:—** மாணவகனே! முன்னெல்லாம் நீ, தாய் தந்தை சுற்றத்தார் என்னும் இவர்களேயே உனக்கு உயிர்போன்றவரென்றும், இவ் உடம்புதானே நீயென்றும் மயங்கியிருந்து, இப்பொழுது அவையெல்லாம் நிலையாதன என்றும், சிவத்தை அடைந்தமையால் வருகின்ற நிறைந்த பேரின்பமொன்றே என்றும் நிலைபேருயுள்ளதென்றும் உணர்ந்தாயன்றே! அவ்வுணர்வுதானே மெய்யுணர்வாம் எ-து.

**இதனகலம்:—** மாதா பிதாச் சுற்றம் என்புழி இரண்டனுருபு ஏற்றுநின்ற செவ்வெண் தொகை தொக்கது. என்று என்புழி இனியர் என்னும் சொல்லெச்சம் வருவிக்க. நீதான் என்புழித் தானென்பது சித்தாகியநீ சடமாகிய உடம்பாய் நின்றனே என்னும் பொருள்தோன்ற நின்றது. அதனுனும் இனி நீ அம்மயக்கத்திற்படுவாயல்லே என்றபடி. ஈதென்பது அப் பெத்தநிலையைச் சுட்டிய மாணவகன் கூற்ருய் நின்றது. எல்லாமென்பது முழுதுமென்னும் பொருட்டு. பொய் மெய் என்பன ஈண்டுப் பொது உண்மைகளே உணர்த்தின. இறுதிக்கண் மெய்யென்புழி அதுவே என்னும் எழுவாய் தோன்ருது நின்றது. இங்ஙனங் கூறவே,

---

38. Thou wert surely perplexed with thoughts of mother, father and kin,
Thou thyself surely stood with thy body identified,
All these were lies, thou hast understood.
Thou hast understood that the flood of perfect joy is true.
Verily, true this is

பொய்யைப் பொய்யெனக் கண்டு கழித்துப் பின் மெய்யை மெய்யென உணர்ந்தமையால் இனி உன்னை அப் பொய் சாருமாறும், ஒரோவழிச் சார்வதுபோலத் தோன்றினும் நிலைத்துநிற்குமாறும் இல்லை எனவும், சார்வதுபோலத் தோன்றியவழி அவை பொய் இதுவே மெய் என்று உணரவே அவை சாராது ஒழியுமெனவுங் கூறினாராயிற்று.

இது, தேகாதி தன்னளவேயாகிய மயக்கம் சிறிதாயினும், அதனைத் தீ யெச்சம்போல வளருமென்னாது நின்று கெடும் என்ற தென்னையோ! வென்பார்க்கு, அதற்குக் காரணங் கூறுமுகத்தான் அது வளராமைக் காத்தற்கு ஒருவகை உபாயம் கூறியவாறு. சிறந்த உபாயம் வருகின்ற வெண்பாவாற் கூறுப.

---

மனையில்வரு போகத்தின் மாதர்மக்கள் பாச
வினையில் அழுந்தி விடாதே—உனைஇழந்து
காணமற் கண்டானைக் காட்சி யறக்கலந்து
பூணமல் எப்பொழுதும் பூண். (௩௯)

**இதன் பொழிப்பு:—** இன்னிலைக்கண் வருகின்ற ஐம்புல வின்பத் தின்கண்ணும், பெண்டிர் பிள்ளைகள் என்னும் பிணிப்பினால் வருகின்ற முயற்சியின்கண்ணும் அழுந்தாது தாமரையிலையின் நீர்போல ஒட்டற்று நின்று, திருவருளுணர்வால் நினது தன் முனைப்பையிழந்து, நீ அறியாத வாறு நின்னை எப்பொழுதும் நோக்கியிருந்து நின் பருவமறிந்து வந்து நினக்கு அருள்செய்த உயிர்க்குயிராகிய முதல்வனை, யான் காண்கின்றே னென்னும் காட்சியறக்கண்டு, அழுந்துகின்றே னென்னும் அழுத்தமற எப்பொழுதும் அவனிடத்து அழுந்திநில் எ-து.

---

39. Immerse not thyself in pleasures of the home
In bonds of spouse and children
Lose thyself and unite, losing perception
With Him who is not seen but revealeth Himself
Wear him, without thyself wearing Him, ever and aye.

**இதனகலம்:—** மனையில்வரு, மாதர்மக்கள் என்புழி லகர ரகர ஒற்றுக்களை நீக்கி வெண்சீராக்குக. போகத்தில், வினையில் என்புழி எண்ணும்மை விரித்துரைக்க. ஏகாரம் இசைநிறை. உடம்புள்ள துணையும் அது கொண்ட போகமும் அதற்குத் துணையாய முயற்சியும் நீங்காமையான் நிட்டையினின்றார்க்கும் அவை உண்மையின் அவர் அவற்றின்கண ழுந்தாது. சிவத்தின்கணழுந்துதலே அப் பிராரத்த நுகர்ச்சியினும், அதனால் வரும் ஆகாமியத் தோற்றத்தினும் நீங்குதற்குபாயமாமென்பார் "அழுந்தி விடாதே" "உனையிழந்து கண்டானைக் கலந்து பூண்" என்றார்.

[1] இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவன்றன் மெய்ப்பொருளே
ஆயவத னாலுணரும் அச்சு.

என்றார் சிவஞானபோதத்தினும். காணாமல் பூணாமல் என்றது மலகாரியமாகிய யான் எனது என்னும் செருக்கு நீங்குதற்குக் கூறியவாறு. எனவே, மேற்கூறிய மயக்கங்கள் மூறுகியெழாமைக் காத்தற்கும் இதுவே உபாயமாதலுணர்க.

நிட்டையில் நின்றார்கள் போகமும் முயற்சியும் உடையராய்க் காணப்பட்டாலும் அவர் அவற்றில் அழுந்தாது நிற்பர் என்பதனை,

[2] ஊசல்படு மனமின்றி உலாவல் நிற்றல்
உறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தல்
மாசதனில் தூய்மையினில வறுமை வாழ்வில்
வருத்தத்தில் திருத்தத்தில் மைதுனத்தில் சினத்தில்
ஆசையினில் வெறுப்பில்இவை அல்லாது மெல்லாம்
அடைந்தாலும் ஞானிகள்தாம் அரனடியை அகலார்.

என்பதனாறிக.

[3] வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால்
மற்றுநான் அறியேன் மறுமாற்றம்.

எனவும்,

[1] சிவஞானபோ, சூ, 10, அதி, 1, பா, 3. [2] சித்தி, சூ, 8, பா, 23. [3] சுந்தரர், ஒற்றியூர், பா, 1.

[1] ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்து
மைந்தரும் ஒக்கலும் மனமகிழ்ந் தோங்கி
இவ்வகை இருந்தே மாயினும் அவ்வகை
மந்திர வெழுத்தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
முத்தியும் இழந்திலம் முதல்வ.

எனவும் அருளினாற் போல்வனவெல்லாம் அவ்வகை அநுபவத்தான் எழுந்தன வென்க.

பிராரத்தவினை விளையுங்கால் அதன்கணழுந்தி நுகர்வார்க்கு விருப்பு வெறுப்புக்கள் நிகழும். அவை நிகழவே அவை மேலைக்கு வித்தாய் ஆகாமியத்தைத் தரும். ஆகவே, பிராரத்த வினைவின்கண் அழுந்தாதார்க்கு அதனான் வரும் இன்பத்துன்பங்களும், மேற் பிறவிக் கேதுவாகிய ஆகாமிய வினையும் இல்லையென்றுணர்க.

இது, தேகாதிகளை நானென்றுணரும் மயக்கம் வாசனை மாத்திரமாய் நிற்பதாயினும் அதுவே பற்றுக்கோடாகப் பண்டை உலகிய லறிவெல்லாநிகழ்ந்து முன்போலப் பிராரத்தமும் ஆகாமியமும் உளவாகிப் பிறப்பின்கட் செலுத்திவிடும்போலும் என்னும் ஐயத்தினை நீக்கி, அதற்குபாயங் கூறுமுகத்தான் நிட்டைமேவினோர்க்கு அவை அங்ஙனமா மாறில்லை என்பதுணர்த்தியவாறு.

---

சுத்தவத்தை நாடியிடுஞ் சுத்த இராப்பகலா
மெத்தவத்தை நாடி விடுவையேல் — சுத்தவத்தை
தானாய் இரண்டுந் தவிர்ந்த சிவானந்த
வானவை நீயே மதி. (௪௦)

40. If thou seekest the suddha state with its suddha night and day,
Thou shalt realise that state and note this,
Thou shalt become the Akas of Sivanand
Where both night and day are not.

[1] திருவிடைமருதூர்மும்மணிக், பா, 19.

இதன் பொழிப்பு:— மாணவகனே! நீ, தூய்தாகிய சிவத்தை அறிதற்கண் நிகழ்வனவாகிய சுத்த இராப்பகலெனப்படும் மேனிலையை அடைந்து விடுவையாயிற் பின் சகல கேவலங்களிற் படுதலின்றிச் சுத்த இராப்பக லெனப்படும் அவ்விரண்டைத்தானுங் கடந்து சிவானந்தப் பேற்றினை உடையவனாவை; இதனை அறிவாயாக எ-து.

இதனகலம்:— முன்னின்ற சுத்தவத்தை என்பது சுத்த வத்துவை யென்பதன் விகாரம். சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளைப் பற்றுதல் விடுதலென்னுங் கருத்துப்பற்றி இரவும் பகலுமென இரண்டாய் அடக்கிக் கூறுதலும் ஓர் மரபு. கேவல இராப்பகல் சகல இராப்பகல்களி னீக்குதற்குச் சுத்த இராப்பகலென்பார் அஃது இன்னதென்றற்குச் "சுத்தவத்தை நாடியிடும்" என்றார். "நாடி விடுவையேல்" என்பது ஒரு சொன்னீர்மைத்து. ஆண்டு விடு என்பது துணிவுப் பொருண்மைத்தாய் அதனது அருமை தோன்றநின்றது. பின்னின்ற சுத்தவத்தை என்பது சுத்தாவத்தை என்பதன் குறுக்கம். சுத்தவத்தைதானாய் என்புழி நின்ற தானென்பது பிரிநிலை ஏகாரத்தின் பொருட்டாய் ஏனைக் கேவல சகலமென்னும் இரண்டவத்தைகளையும் பிரித்து நின்றது. அவ்விரண்டு மெனச் சுட்டு வருவித்துரைக்க. இரண்டுந் தவிர்ந்த எனவே சுத்தத்திற் சாக்கிர முதலிய ஐவகை அவத்தை வேறுபாடுகளையுங் கடத்தல்பெற்றாம். இது, துகளறுபோதத்துட் சுத்தபராயோக முதலாகச் சொல்லப்பட்ட எழுவகை நிலைகளைக் கடத்தலாம். சிவானந்தம் அதீதத்தின்கட்டானே வாய்க்கப்பெறுவதாயினும் அஃது அவத்தைவேறுபாடுள்வழி ஒருதலைப்பட நில்லாமையின், "இரண்டுந் தவிர்ந்த சிவானந்தவானவை" என்றார். துகளறுபோதத்துட் சிவப்பேற்றினை அதீதத்தின்பின் வைத்ததூஉம் இதுபற்றி. சுத்தாவத்தைகள் ஐந்தனையும் மேலே உரைத்தாம். ஏகாரம் தேற்றம்.

இது, சுத்தாவத்தையைத் தலைப்பட்டோர் மீளப் பிறப்பின் கட்படாரென்பதுணர்த்தி, நிட்டையில் நின்றார்க்கு மீள உலகியலின்கண் மீட்சி உண்டாகாமை உணர்த்தியவாறு.

---

சுத்தநிலம் உன்றனக்குச் சொல்லக்கேள் தொல்லைவினைத்
தத்துவங்கள் ஆறுறுந் தாம்பெருகக்—கத்திடுவர்
எல்லாம் இழந்த இடமே அதுவாக
நில்லாய் அதுவே நிலை. (சக)

இதன் பொழிப்பு:— இராப்பகலற்ற இடமெனப்படுஞ் சுத்தநிலமாகிய முத்திநிலைதான் யாதெனின், அதனை உனக்குச் சொல்லுதுங்கேள்; பிறபிற சமயிகளெல்லாந் தத்தம் பழவினைப் பயனால், தம் அறிவுவிளங்கு மாற்றிற்கேற்ப நிலமுதல் நாதமீறாக உள்ள தத்துவங்களுள் ஒரோவொன்றனை முத்திநிலையென்று ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் பெரிதுங்கூறிப் பிதற்றுவர்; அவையெல்லாம் பொருந்தா. தத்துவங்கள் முப்பத்தாறனையுங் கடந்து தத்துவாதீதமாய் நிற்குஞ் சொரூப சிவமே முத்திநிலையென்னும் சித்தாந்த வசனமே பொருந்துவதாம். ஆகலான் நீ அச்சிவமேயாக நில்; அதுவே உண்மைநிலை எ-து.

இதனை கலம்:— வினையென்புழித் தொக்குநின்ற மூன்றுருவதுவிரிக்க. எல்லாமிழந்த இடம் சொரூபசிவமேயாகலின் அஃது அதனைக் குறித்தற்கு இழுக்கின்மை உணர்க. அதுவென்பது ஆகவென்பதனோடு மியைந்தது.

முத்திநிலையினைச் சமயிகள் பலரும் பலவாறு கூறலிற், "சுத்தநிலம் உன்றனக்குச் சொல்லக்கேள்" எனவும், அவர் அங்ஙனங் கூறுதல் முதல்வன் திருவருளன்றித் தம் குறையுணர்வுகொண்டு ஆராய்தலானென்பார், "தொல்லைவினை" எனவும், அவர் முத்தியென்றுரைப்பனவெல்லாம் முத்தியன்றிப் பந்தமாய தத்துவங்களேயென்பார் "தத்துவங்களாறுறும்" எனவும், அவர்கள் தம்மூழான் மயங்குதலின் உண்மையையுணர்த்தினும் உணரமாட்டாது தம்முள் இகலிப் பூசலியற்றுவரென்பார் "தாம்பெருகக் கத்திடுவர்" எனவும், யாம் கூறுவது மாயாதீதமாகிய

41. I shall tell you of the land of the pure—
Men prattle till their old timeless karma and contact with tatvas increase.—
It is the spot beyond all these.
Stand there.—That is the proper place.

இடமாகலின் அது பந்தமாதலில்லையென்பார் "எல்லாம் இழந்த இடமே அது" எனவும், அஃது அன்னதாதலின் அதன்கண் நீ ஐயுறாது நிற்க வென்பார் "ஆக நில்லாய் அதுவே நிலை" எனவுங் கூறினார்.

உலகாயத முதலிய சமயங்களில் நின்றோர் கூறும் முத்தி பேதங்களை,

[1] இம்மையே ஈரெட்டாண் டெய்திஎழி லாரும்
ஏந்திழையார் முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றும்முத்தி ஐந்து கந்தம்
அறக்கெடுகை யென்றும்அட்ட குணமுத்தி யென்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றும்தன் மெய்வடிவாம் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

[2] அரிவையரின் புறுமுத்தி கந்தம் ஐந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி இதுமுத்தித் திறத்த தாமே.

என்பவற்றானும், அவையெல்லாம் ஒரோவொரு தத்துவங்களில் நிற்கும் என்பதனை,

[3] மொய்தரு பூத மாதி மோகினி அந்த மாகப்
பொய்தரு சமயம் எல்லாம் புக்குநின் றிடும்பு கன்று
மெய்தரு சைவ மாதி இருமூன்றும் வித்தை யாதி
எய்துதத் துவங்க ளேயும் ஒன்றுமின் றெம்மி றைக்கே,

என்பதனானும் உணர்க. அதுவாக நிற்றலாவது சிவோகம் பாவனையில் நிற்றல்; அதனை வருகின்றவெண்பாவிற் கூறுதும். இது,

[1] சித்தி, சூ, 8, பா, 12. [2] சிவப்பிர, சூ, 2, பா, 32. [3] சித்தி, சூ, 2, பா, 73.

[1] யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

என்றாங்கு எவனெவன், எவ்வெத்தத்துவங்களி னீங்கினன் அவனவன் அவ்வத்தத்துவங்களாற் பந்த முறுதலிலனாயினும் எல்லாத் தத்துவங்களி னீங்கிப் பந்தமுழுதுமறப் பெற்றோன் அடையுமிடம் இது எனவும் அது சுத்தாவத்தைகளைத் தலைப்பட்டோர் இறுதியிலடையும் முடிந்த பயனென வும் கூறி அதனது சிறப்புணர்த்தியவாறு. "அதுவாக நில்லாய்" என்றது அதனையடைதற்கு உபாயங் கூறியவாறு.

---

நெருப்பென்றால் வாய்சுடுமோ நெய்பால்தேன் கட்டி
கருப்பென்றால் தித்தியா காணீ—விருப்பமுடன்
நீபிரமம் என்றக்கால் நீபிரமம் ஆயினையோ
நீபிரமம் சற்குருவா னில். (சஉ)

இதன் பொழிப்பு:— நெருப்பென்று கூறிய துணையானே அச் சொல் வாயைச் சுடுதலும், நெய்பால் முதலியனவாகக் கூறியதுணையானே அச் சொற்கள் நாவில் தித்தித்தலும் இல்லையாதலை நீ நோக்குவாயாயின், நினது விருப்பத்தால் நின்னைப் பிரமமென நீ கருதியதுணையானே அக் கருத்து நின்னைப் பிரமமாகச் செய்யாதென்பது நினக்குப் புலனும். ஆதலின், அருளாசிரிய னுணர்த்திய அருள்வழி நிற்பாயாயின் நீ பிரம மாதல் உண்மையாம் எ-து.

இதனகலம்:— மேல், "அதுவாக நில்லாய்" என்றது, நான் பிரமமெனக்கருதும் அத்துணையேயன்றிப் பிறிதில்லை போலுமென மயங்கற்க என்பார் இங்ஙனங் கூறினர். தான் அதுவாக நிற்குமாறு

---

42. Would it burn thy mouth if thou said 'fire'?
It wouldn't taste sweet if thou said 'ghee,
Milk, honey, candy, jaggery.'
Shalt thou become Brahmam
If thou sayest thou art Brahmam ever so eagerly?
Stand thou Brahmam by the good Guru made.

[1] குறள், பா, 341.

முதல்வன் உயிர்க்குயிராய்நின்று உபகரித்துவரும் உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துச்செய்யும் அன்பானே தனது அறிவிச்சை செயல்கள் அவனையன்றித் தன்னையுள்ளிட்ட பிறபொருள்கள்மேற் செல்லாது நிற்ற லென்பது மேல் "கிட்டாத ஈசன் உனைக்கிட்டி" என்புழிக் கூறப்பட்டது. அந்நிலையில் நிற்கலாற்றாதார்க்குப் பாவனை மந்திரங் கிரியை என்னும் சாதனமுறையும் உளது. இவையிரண்டும் அருளாசிரிய னருளானன்றி யுண்மையான் உணர்ந்து பயன்பெறலாகாமையின் "நீ பிரமஞ் சற்குரு வால் நில்" என்றார். இவை அருளாசிரியர்பாற் கேட்டுணர்தற்பாலன என்னுங் கருத்தால், "ஈசனருள் புரிந்த நிட்டாநுபூதி நிலையிலே" என மேலும், "சற்குருவானில்" என ஈண்டுங் கூறியொழிந்தாராயினும் அநுபூதி நிலையினை மேல் ஒருவாறு கூறினாற்போலச் சாதனமுறையையும் ஈண்டு ஒருசிறிது உரைக்கின்றாம்.

முப்பத்தாறு தத்துவங்களும் நீ அல்லை; நீ அவற்றின் வேறு; அவற்றொடு கூடி நின் பெருமையை இழந்து சிறுமையுறுதல் நினக்கு இயற்கையன்று; சிவத்தொடுகூடிப் பேரின்ப நுகர்தலே நின்னியல்பு என்றுணர்த்தியவழி அங்ஙனம் உணர்த்திய துணையானே அவற்றை வேறாகவும் சிவத்தைத் தனக்கு உயிராகவும் தெளிந்து நிற்றல் அதிதீவிர பக்குவமுடையார்க்கு ஆகும். ஏனையோர்க்கு அவ்வாறன்றி இங்குமங்குமாய் ஊசலாடலே உளதாம். அத்தகையோர்க்கே பாவனை மந்திரம் கிரியை யென்னும் சாதனம் வேண்டப்படும். அவற்றுள் சிவோகம்பாவனை யென்னும் பாவனையே அவர்க்குரிய பாவனையாம்.

அஃதாவது சிவமாகின்றேன் நான் என்று பாவித்தல். சோகம் என்பதற்கும் அவனாகின்றேன் நானென்பதே பொருளாகலின் சோகம் சிவோகமென்பன பொதுவும் சிறப்புமாய அத் துணையே வேற்றுமை; பிறிதில்லை என்க. "அது நீ யாகின்றாய்", "அது நானாகின்றேன்", "அது இதுவாகின்றது" எனவரும் உபநிடத மகாவாக்கியங்களுங் காண்க.

இனிச் சிவம் அவன் அது என்னுஞ் சொற்களால் உணரப்படும் பிரமப்பொருளும், நான் நீ இது என்னுஞ் சொற்களால் உணரப்படும் ஆன்மாவும் வேறு வேறு பொருள்களாமென்பதற்கு அவற்றை அங்ஙனம் வழங்கும் வழக்கே சான்றாமாகலின் ஒருபொருள் மற்றொரு பொருளாதல் யாங்ஙனமெனின்! செம்பு பொன்னானாற்போல ஒன்று மற்றொன்றாய் வேறுபடுதலாமெனப் பரிணமங் கூறுவர் பேதவாதசைவர்; பிரமசாரி சந்நியாசியானாற்போல உபாதிவயப்பட்டபொருள் அவற்றினீங்குமாற்றான்

ஆமென்பர் ஏகான்மவாதிகள். மைந்தன் இளவரசனுதற்போல விசேட வியைபு பெறுதலானுமென்பர் பாஞ்சராத்திரிகள். பரிணமம் சடத்துக் கன்றிச் சித்துப்பொருளாகிய ஆன்மாவிற்குக் கூடாமையானும், பிரம சாரி சந்நியாசியாயினும் தனது குரவனுகாமையின் அது ஆன்மாப் பிரமமாதலைச் சாதிக்காமையானும், மைந்தன் இளவரசனுதற்போல விசேடவியைபினுனுமென்றலும் அவ்வாருதலானும் அவையெல்லாம் பொருந்தா.

இனிச் சித்தாந்தம் வருமாறு:- நீலத்தொடுசார்ந்து நீலமாயும் மாணிக்கத்தொடு சார்ந்தவழி மாணிக்கமாயும் நிற்கும் படிகம்போல மாயேயங்களொடு சார்ந்தவழி மாயேயங்களாயும் பிரமத்தொடு சார்ந்த வழி பிரமமாயும் சார்ந்ததன் வண்ணமாய் நிற்குமியல்புடையது ஆன்மா. அதனுன் மாயேயங்களினின்ற ஆன்மா அவற்றினீங்கிப் பிரமத்தைச் சாருமிடத்து அப் பிரமப் பொருளேயாதல் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையானுமென்க. எனவே, சித்தாய் வியாபகமாய் உள்ள ஆன்மா விற்குச் சார்தலாவது அறிதலேயாகலான் தத்துவங்களை நானல்ல வென்றறிந்து நீங்கிச் சிவம்நானென்றறிந்தவழி அவ்வான்மாச் சிவமாதற் கிழுக்கின்மையுணர்க.

இனி ஆன்மாவிற்குஞ் சிவத்திற்கும் இயைபுண்டாயினன்றே ஆன்மாச் சிவத்தைச் சார்ந்து சிவமாதல் கூடும்! அவ்வியைபுதான் யாதென்பார்க்கு அவ்வியைபுணர்த்த வெழுந்ததே “அத்துவிதம்” என் னுஞ் சொல்லென்பது. அத்துவிதமாவது ஒருவகையான் அபேதமும், ஒருவகையாற் பேதமும், ஒருவகையாற் பேதாபேதமும் என்னும் மூவகை யுந்தோன்ற இருபொருள் பிரிப்பின்றி ஒற்றுமைப்பட்டுநிற்றல். அபேதம் கலப்பினுலும், பேதம் அதனதன்றன்மையாலும், பேதாபேதம் அவற்றது தொழிற்பாட்டாலும் உணரக் கிடக்குமென்க. எனவே சிவமும் ஆன்மா வும் இங்ஙனம் அத்துவிதமாய் இயைந்துநிற்றலாற் சிவோகம் பாவனையால் ஆன்மாச் சிவமாமென்பதுணர்ந்துகொள்க. இவ்வத்துவிதத்தின்கட்படும் பற்பல மதவேறுபாடுகளும் அவற்றது மறுப்பும் முதலியனவெல்லாம் சிவஞானபாடியத்துள் கண்டுகொள்க.

இச் சிவோகம்பாவனை போலியன்று; உண்மையேயென்பது கருடோகம்பாவனைவல்லார் அக் கருடனேயாய் நின்று விடத்தைத் தீர்க்கு மாற்றினை யெடுத்துக்காட்டிநிறுவுப. ஈண்டுக் கருடனென்றது கருடனுக்கு அதிதெய்வமாகிய மந்திரதேவதையையென்க. சிவோகம் பாவனை யின்ன தென்பதையும் அஃது உண்மையாய்ப் பயன்படுமாற்றினையும்,

[1] கண்ட இவை அல்லேன்நான் என்றகன்று காணுக்
கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினொடும் உளத்தவன்றான் நின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலும் மலங்களெலாம் கருடதியா னத்தால்
விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
பண்டைமறை களும்அதுநான் ஆனேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

என்பதனுணறிக.

[2] வழித்தலைப்படு வான்முயல் கின்றேன்
உன்னைப்போ லென்னைப் பாவிக்கமாட்டேன்.

என்னும் திருமொழியுங் காண்க.

[3] யாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கின் அத்துவித மார்க்க முறலாம்
ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செய் யெந்தைநீ குறையும் உண்டோ.

என்றார் இவர்வழியடியாருமென்க. இன்னும் ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாதலும், அதனுன் அது அவ்வந்நிலைக்கேற்பப் பூதான்மாமுதல் மந்திரான்மாவீறாக அறுவகையாய் நிற்குமாறும், அதனுற் சிவோகம் பாவனை செய்தல் சிவத்தையடைதற்குச் சிறந்த உபாயமாமாறும் பிறவு மெல்லாம் சருவஞ்ஞானோத்தராகமத்திற் கூறியவாறுபற்றி விளக்கப் படுதலைச் சிவஞானமாபாடியத்துள் இனிதுணர்க.

இனி, அவர்க்குரிய மந்திரம் திருவைந்தெழுத்தாகும். அது ஆன்மா இறைவனுக்கு உடைமைப் பொருளாதலையும், பதி பசு பாசங்கள் பெத்தத்தினிற்கு மாற்றினையும் முத்தியினிற்கு மாற்றினையும் உணர்த்து மாற்றை யறிந்து முத்திக்காலமாகிய இஞ்ஞான்றைக் கேற்பக் கணிக்கப் படும். [4]"சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் – அவனெழுத் தஞ்சின் அடைவாம்" என்பதனைச் சிகார முதலாக வைத்துணர்ந்து திரோதமும் மலமும் இவ்விடத்தின்மை யுணர்க. இன்னும் அவர்செய்யும் அந்தரியாகமென்னும் அகவழிபாட்டின்கண் நியாசம் அருச்சனை ஓமம் என்பனவற்றிற்கும் அத் திருவைந்தெழுத்துத்தானே மந்திரமாமென்க.

[1] சித்தி, சூ, 9, பா, 7. [2] சுந்தரர், ஒற்றியூர், பா, 5. [3] தாயுமா, எங்குநிறை, பா, 3. [4] உண்மைவிளக், பா, 42.

இனி அவர்க்குரிய கிரியை அந்தரியாகமெனப்படும் அகப்பூசையாம். அதனை அவர் செய்யுமாறு இறைவன் திருமேனி திருவைந்தெழுத்தால் அமையுமாற்றினையறிந்து இதயத்தின்கட் பூசையும் உந்திக்கண் மூலக்கனலை விந்துத்தானத்து அமுததாரையாகிய நெய்யை இடைகலை பிங்கலை நாடிகளாகிய சுருக்குச் சுருவங்களாற் சொரிந்து வளர்த்து ஓமமும் புருவநடுவின்கண் தியானமும் செய்தல். இதனை,

[1] அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் – அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டம் சானிக்கில்
அண்டனுஞ் சேடனுமா மங்கு.

எனவும்,

[2] அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்
டஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்து
அஞ்செழுத்தாற் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்டம் அணைந்தருளின் வழிநின்
றஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்கமதி யருக்கன்
அணையரவம் போற்றுேன்றும் ஆன்மாவில் அரனே.

எனவும் அருளியவாற்ருனும், அவற்றதுரையானும் உணர்ந்துகொள்க.

இப் பாவனை மந்திரங் கிரியைகளால் மலவாசனை தேய்ந்து தேய்ந்து பற்றறக்கழிந்து சிவம் இனிது விளங்கிநிற்குமென்பது,

[3] சிந்தனையிற் பூசித்துச் சிவஞானத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடும்அவ் வொளிபோல மருவியரன் உளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

என்பதனைறிக.

---

[1] சிவஞானபோ, சூ, 9, அதி, 3, பா, 1. [2], [3] சித்தி, சூ, 9, பா, 8, 10.

நிட்டைமேவிய வழியும் ஆன்மாச் சிவமேயாய்நிற்றல் இத்துணை அருஞ்செயலினு லாவதாகலின், "நெருப்பென்றால் வாய்சுடுமோ" என்பது முதலாகக்கூறி, "நீ பிரமமென்றக்கால் நீ பிரமமாயினையோ" எனவும், "நீ பிரமம் சற்குருவானில்" எனவுங் கூறினர். அவற்றானே உபநிடத மகாவாக்கியங்களின் பொருளுணர மாட்டாது "நானே பிரமம்" என ஏகான்மவாதங்கூறித் தற்போதத்தை வளர்த்துச் செருக்கித்திரியும் மாயாவாதிகள் மதமும் போலியாதல் பெறப்பட்டவாறறிக. அவர் மதம் போலியாதலேயன்றி முதல்வன் திருவடிஞானத்தை மறப்பித்துச் சீவ போதத்தை மிகுவித்தலானன்றே,

[1] — எல்லாம்போய்த்
தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி
எம்மைப் புறங்கூறி இன்புற்றுச் — செம்மை
அவிகாரம் பேசும் அகம்பிரமக் காரர்
வெளியாம் இருளில் விடாதே.

என உமாபதிசிவனும்,

[2] பன்முகச் சமய நெறிபடைத்தவரும் யாங்களே கடவு ளென்றிடும் பாதகத்தவரும்.

என இவர்வழியாடியாரும் அருளிச்செய்தாரெனவறிக.

இஃது, அதுவாக நிற்குமாற்றினை யுணர்த்தியவாறு.

---

ஆர்க்குந் தெரியாத ஆனந்த இன்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டுவிடு கின்றதில்லை—யார்க்கும்
தெரியாப் பரப்பிரமஞ் சேர்த்தாய் உனக்குச்
சரியார் சிதம்பர நா தா. (சஙு)

43. The flood of sweet joy that none doth know
Floweth over, carrieth away, and leaveth me not.
Thou hast united me to the supreme Brahmam
That none doth know.
Who is Thy equal, Chidambaranatha ?

[1] போற்றிப், வரி, 174-178. [2] தாயுமா, சிற்சுகோதய, பா, 10.

**இதன் பொழிப்பு:—** உலகியலில் நின்றருள் ஒருவராலும் அறியலாகாத பேரின்பவெள்ளம் கடல் கரைபுரண்டாற்போல மென்மேற் பொங்கியெழுந்து இஞ்ஞான்று என்னைவிட்டு நீங்குகின்றிலது. இவ்வாறும்படி, ஒருவர்க்கும் அறியவொண்ணாத பரப்பிரமமாகிய சிவமுதற் பொருளிடத்தே என்னைச் சேர்த்தருளினீர்; அதனால், சிதாகாச முதல்வராய்நிற்கும் எம்பெருமானிரே, உமக்கு நிகராவார் யாவர்? எ-து.

**இதனகலம்:—** யார்க்கும் என்பது ஆர்க்குமென மரீஇயிற்று. ஆனந்த இன்பம் என்பது மீமிசைஞாயிறு என்பதுபோல ஒருபொருட் பன்மொழி. அடுக்குப் பன்மைப் பொருட்டு. "விடுகுதில்லை" என்பது பாடமாயின் சித்தர் பாடல்களிற்போல ஆரிடவழக்காய்ச் சிதைவழக்கு வந்ததாகவுரைக்க. என்னை? குமரகுருபரரும், சம்பந்தசரணாலயரும்போலச் சிதைவழக்குக் களைந்து செந்தமிழ்வழக்கேபற்றிச் செய்யுள் செய்வாரேயன்றித் தாயுமானார்போலச் சிதைவழக்குகளைத் தழுவிச் செய்யுள் செய்வாரும் இவர் வழியடியாருட் காணப்படுபவாகலினென்பது. சரியென்பது ஒப்புமைப் பொருண்மை யுணர்த்திநிற்பதொரு சொல்லாய் இக்காலத்துவழங்கும். சிதம்பரமென்பதற்குத் தில்லையம்பலம் என்பது பொருளாக உரைப்பினும் அமையும்.

இது, நிட்டைகைவரப்பெற்றார்க்குவரும் பேரின்பப்பெரும்பயனும் அவர் தமக்கு முதல்வன் செய்த பெருங்கருணையை உணர்ந்து வியந்து அவன்மாட்டு அன்புசெய்தலுங் கூறியவாறு.

"பரவிமனம் போகாப் பரத்தடைய" என்பதுமுதல் இதுகாறுமுள்ள இருபது செய்யுட்களானும், கேட்டவுபதேசத்தைச் சிந்தித்தல் தெளிதல் பின் நிட்டைகூடல் என்னும் மூன்றும் உணர்த்தப்பட்டன. இதனை உபதேசவிளக்கம் என்ப.

கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் என ஞானம் நால்வகையாக நிகழுமென்பதனை,

> [1] கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
> கிளத்தலென ஈரிரண்டாங் கிளக்கின் ஞானம்
> வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவி னோர்கள்.

என்பதனானுணர்க.

[1] சித்தி. சூ. 8, பா. 24.

அதிதீவிர பக்குவமுடையார்க்கு ஆசிரியன் அருண்மொழியைக் கேட்டதுணையானே ஏனைச்சிந்தித்தல் தெளிதல்கள் நுண்ணியவாய் விரைய நிகழ்ந்து விரைவில் நிட்டை கைகூடும். ஏனையோர்க்கு அவை படிமுறையானே மெல்லநிகழ்ந்து பின்னர் நிட்டைகைவரும் என்க. சிவஞானபோதத்துள்ளும் எட்டாஞ் சூத்திர முதல் பதினொன்றாஞ் சூத்திரங்காறுமுள்ள நான்கு சூத்திரங்களானும் முறையே கேட்டல் முதலிய நான்கும் உணர்த்தப்பட்டனவென்பது அதனுரையானுணர்க.

இனி மலவாதனை நீங்குமாற்றிற்கு வேண்டும் உபாயமுதலியன எல்லாஞ் சிவஞானபோதத்துள் சிந்தித்தல் நிகழும்வழிக் கூறப்பட்டதாயினும் அஃது ஓர் இயைபுபற்றி யாண்டுக் கூறப்பட்டதாயினும் ஈண்டுப் போல நிட்டையின் பின்னர்க் கூறுதலே கருத்தென்பது பன்னிரண்டாஞ் சூத்திரத்துள் "வினையா லசத்து விளைதலான்" என்னும் வெண்பாவின் பாடியத்தானுணர்க. அங்ஙனமாதலினன்றே சிவஞானசித்தியுள் கேட்டல் முதலிய நான்கனையும் எட்டாஞ் சூத்திரத்திற்றானே விரித்துக் கூறி, [1]"நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தாங்கும் நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி" என முடித்து, "ஆசையொடும் அங்குமிங்குமாகி யலமருவோர் அரும்பாச மறுக்கும்வகை அருளின்வழி உரைப்பாம்" என்றெடுத்துக்கொண்டு, ஒன்பதாஞ் சூத்திர முதலியவற்றிற் பெரும்பான்மையும் முதனூலிற் கிடந்தவாறே தொகுத்துக் கூறி முடித்ததூஉமென்க. எனவே, ஆசிரியனருண்மொழியைக் கேட்டபின்னர் நிகழும் மலச் செய்திகளெல்லாம் வாதனைமாத்திரமே யென்பதும் அஃது சிந்தித்தல் முதலியவற்றால்தேய்ந்து தேய்ந்து நிட்டைமேவியவழிப் பெரிதும் மங்கிப் போய் மிக மெலிதாயுளதாம் என்பதும், அவ்வாறாகலின் [2]"ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்றது தெளிந்தபின்னர் அவ்வாதனை முறுகியெழாது கெட்டொழிதற்பாலதேயாதல்பற்றி யென்பதும் அற்றாயினும் அது முறுகாதவாறு குறிக்கொண்டு காத்தல் இன்றியமையாததென்பதற்கு "அம்மலங் கழீஇ" எனப்பட்டதென்பதும் நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

உள்ளங் கரைய உடல்கரைய ஆனந்த
வெள்ளங் கரைபுரண்டு மேலாகக்—கள்ளமலம்
பொய்யாக என்னுட் புகுந்தவா றென்கொலோ?
ஐயா தியாகவினோ தா. (சுசு)

இதன் பொழிப்பு:— அடைந்தவர்க்கு அருள்வழங்குதலையே பொழுதுபோக்காகக் கொண்டு விளங்கும் எமது முதல்வரே! அடியேனுடைய உள்ளமும் உடலும் நெகிழ்ந்துருகுமாறு பேரின்பவெள்ளம் எல்லையறப் பொங்கி மிகும்படியும், தன்னுண்மையையுங் காட்டாது என்னை மறைத்துநின்ற ஆணவமலம் இல்லையாம்படியும் நீர் அடியேனுள்ளத்துட் புகுந்தது எவ்வாற்றாலோ? எ-து.

இதனகலம்:— உள்ளமும் உடம்புங் கரைதலாவது பாலுந்தேனும் பருகினோர்க்கு அவற்றின் இனிமைமீதூர்வால் உள்ளத்தின்கண் உவகையும் உடம்பின்கட் பொலிவும் உளவாதல் போலக் கட்டினின்று நீங்கிக் கரையிறந்த இன்பம் பெற்றார்க்கு அவ்வின்பமீதூர்வான் உள்ளத்தின்கட் கசிவும் உடம்பின்கண் புளக முதலியனவு முளவாதல். அவை அங்ஙனமாதல் உயிர் இதுகாறுங் கண்டறியாததோர் இன்பத்தை இடையீடின்றி நுகர்தலானென்க. [1]"அடியேன் ஆவியோடாக்கை ஆனந்தமாய்க் கசிந்துருக" [2]"ஆவியோடாக்கை புரைபுரை கனியப் புகுந்துநின்றுருக்கி" என்றற் றொடக்கத்துத் திருமொழிகளெல்லாம் அவ் வின்பமீதூர்வான் எழுந்தனவென்க. "ஆவியோடாக்கை" என்புழி நுண்ணுடம்பாகிய மனமுதலியனவும் ஆக்கையென்னும் பொதுச்சொல்லினடக்கப்பட்டன. [3]"ஊனினையுருக்கி" என்பதும் அப்பெற்றித்து. ஆக்கை யென்பது நுண்ணுடம்பையுங் குறிக்குமென்பதற்குப் "புரைபுரைகனிய" என்பதுதானே சான்றாமென்க.

மேலாக, பொய்யாக என்புழி எண்ணும்மை விரித்துரைக்க. [4]"ஒருபொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும், இருபொருளுங் காட்டா திது" என்பவாகலின், ஆணவமலத்தைக் கள்ளமலம் என்றார். அது

4. How didst Thou enter me, Sire, that sportest in bountise
So that the flood of joy doth overflow the banks and rise
Consuming my heart, consuming my body
And that the roguish impurity hath become a falsehood.

[1], [2] திருவாச, கோயிற்றிருப், பா, 2, 3. [3] ஷை பிடித்த, பா, 9. [4] திருவருட், இரண். பா. 3.

நித்தமாகலின் முத்திக்கண்ணும் உளதாயினும், ஒளிமுன் இருள் தனது சத்திமடங்கிக் கிடத்தல்போல, தனது சத்திமடங்கிச் சூனியப்பொருள் போலக் கிடத்தலில் "பொய்யாக" என்றார். [1]"பொய்யிருள் கடிந்த மெய்ச் சுடரே!" என முத்திக்காலத்தநுபவத்தின்க ணெழுந்த திருவாக்கிற்கும் இதுவே கருத்தென்பது, சிவஞானபோதத்து ஆறாஞ் சூத்திர பாடியத்தான் உணர்க.

"புகுந்தவா றென்கொலோ?" என்பது புகுந்தபடி யாதோவென்னும் பொருட்டாய் அவ்வின்பப் பொருளாகிய சிவம் தமக்குவேறாய் நில்லாது, விறகில் தீயும் பாலில் நெய்யும்போல அத்துவிதமாய் நின்று விளங்கித் தோன்றியவாற்றினை வியந்தவாறுமென்க. [2]"என்னுள் எழு பரஞ் சோதி", [3]"என்மனத்துள்ளே எழுகின்ற சோதியே", [4]"உள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று நின்ற நின்தன்மை" என்றற்றொடக்கத் தனவாக ஆண்டாண்டுக் கூறுமாறுமுணர்க.

இதுமுதல் நிட்டைமேவினரது அநுபவநிலை கூறப்படுகின்றது. இது, நிட்டைமேவினர்க்கு வரும் சிவானந்தப் பேற்றினது சிறப்பும், அஃது ஆன்மாவிற்கு இயற்கையாதலுங் கூறியவாறு.

---

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும்—மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே. (சரு)

இதன் பொழிப்பு:— எல்லாத்தேவர்க்கும் பெரியதேவராயுள்ளீர்; எனது மெய் மொழி மனங்களென்னும் மூப் பொறிகளும் முன்போல இஞ்ஞான்றுந் தொழிற்பட நிற்பேனாயினும் அத் தொழிற்பாடுகளை

45. Whatever I do, whatever I say
Whatever I remain thinking, Mahadev !
If I but realise, by Thy Grace, all that action to be Thine.
I do not perceive mine.

[1], [2], [3], [4] திருவாச, கோயிற்றிருப், பா, 3, 1, 6, 7.

எல்லாம் யான் முன்போல நானென்னும் முனைப்போடு நின்றுணராது உமது திருவருளோடு நின்றுணர்தலால் அவையாவும் நுஞ்செயலேயாய்த் தோன்றலின் இக்காலத்து என்செயலாவது யாதொன்றையும் யான் காண்கிலேன் எ-து.

இதனகலம்:— அடுக்குக்கள் பன்மைப்பொருள. உம்மைகள் எண்ணுப்பொருளோடு, அவை பந்தத்திற் கேதுவாமியல்பினவென அவற்றது இழிபுணர்த்தலின் இழிவுசிறப்புப் பொருளவாயும் நின்றன. ஏகாரங்கள் நான்கனுள் முன்னைய இரண்டும் பிரிநிலை; இடைநின்றது தேற்றம்; ஈற்றில் நின்றது ஈற்றசை. அருளாலென்புழி ஆனுருபு உடனிகழ்ச்சிக்கண் வந்தது. உணரென்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஐந்தனுருபேற்று உணரினென நின்றது. அன்றிச் செயினென்னும் எச்சமாகக் கொள்ளின் உணருந்தொறுமென உரைத்து, அவ்வாறுணர்தல் அநுவாதமுகத்தாற் பெறப்பட்டதெனக் கொள்க.

நிட்டைமேவினர்க்கும் உடம்பும் அதுகொண்ட வினைப்பயனும் நீங்குதலின்மையின் அவர் பிராரத்தமெனப்படும் அவ் வினைப்பயன்களைக் காணுந்தோறும் முதல்வன் திருவடிஞானத்தினின்றே காண்பரென்பதும், அதனன் அவை அவர்க்குப் பந்தமாகா என்பதும்,

[1] ஏகமாய் நின்றே யிணையடிகள் ஒன்றுணர.

[2] பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்.

என்பவற்றானும்,

[3] எத்தநுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

என்பதனானுமுணர்க.

இது, நிட்டைமேவினர்க்குப் பிராரத்தவினை விளைவின்கண் நிகழும் அநுபவம் உணர்த்தியவாறு.

---

[1] சிவஞானபோ, சூ, 11, அதி, 1, பா, 2. [2] சித்தி, சூ, 11, பா, 2. [3] சிவஞான போ, சூ, 10, அதி, 2, பா, 1.

மாயைமலம் எங்கே மறைந்ததோ! மாயைதனில்
ஆயசகம் எங்கே அழிந்ததோ!—காயமதில்
தங்கும் புருடனெங்கோ! சச்சிதா னந்தவெள்ளம்
எங்கு மிகக்கோத்த தே!. (௬௬)

**இதன் பொழிப்பு:—** மயக்கவுணர்வைச் செய்வதாகிய ஆணவமும், அதன்வழிநின்று மயக்குவதாய மாயையும், அம் மாயையின் காரியமாகிய தனுகரண புவன போகங்களும், அவற்றுள் தனுவெனப்படும் உடம்பில் ஏகதேசப்பட்டுப் புருடனென நின்று வினைகளை ஈட்டியும் நுகர்ந்தும் வரும் உயிரும் இஞ்ஞான்று யாண்டையவென எமக்குத் தோன்றுகின்றன இல்லை; சிவானந்த வெள்ளமொன்றே எமக்கு யாண்டும் பொங்கித் ததும்பித் தோன்றாநின்றது எ-து.

**இதனகலம்:—** முன்னிற்கற்பாலதாய மலம் செய்யுணோக்கிப் பின்னின்றது. எங்கே மறைந்ததோ என்பதனை மாயை யென்பதனோடுங் கூட்டுக. சகமென்றது தனு முதலிய நான்கன்தொகுதியை. வினைக்குமுதலாய மலமாயை புருடன்கட் டோன்றாமை கூறவே அவற்றது விளைவாய கன்மந் தோன்றாமை தானே பெறப்பட்டது. சிவமென்னாது சத்துச் சித்தென்றார், மேலன அசத்த சித்தாயும், சதசத்துச் சிதசித்தாயுமுள்ளன வெனவும், அதனான் அவை இன்பப்பொருளாகா வெனவும் உணர்த்துதற்கென்க.

நிட்டைமேவினார், பிராரத்தவினை விளையுங்கால் அதனைத் திருவடி ஞானத்தினின்றுணர்தலால், அவர்க்குப் பிரபஞ்சங் காட்சிப்படாது சிவமே காட்சிப்பட்டு வினைப்போகமே சிவபோகமாய் விளையுமென்பது,

[1] ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினான்.

எனவும்,

46. Where hath the maya-mala hidded
Where hath the maya-made world perished
Where is the purusha that resideth in the body ?
Lo ! the flood of truth, intelligence and joy
Hath in profusion entered everywhere.

[1] சிவஞானபோ. சூ. 11 அதி 1 பா. 2

[1] பெற்றசிற் றின்பமே பேரின்ப மாயங்கே
முற்ற வரும்பரி சுந்திபற
முளையாது மாயையென் றுந்திபற.

எனவும்,

[2] உடம்புடைய யோகிகள்தாம் முற்றசிற் றின்பம்
அடங்கத்தம் பேரின்பத் தாக்கில் – தொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதுமொன் றில்லை
இளைப்பதுமொன் றில்லை இவர்.

எனவும்,

காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப் பேணு மடியார்.

எனவும் அருளியவாற்றானுணர்க.

இப்பெற்றியராயினர் முதல்வன் திருவருட்செயலையன்றிப் பிறிதொன்றை நினையாமை,

[3] நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

என்றருளியவாற்றானும்

[4] ஒன்றுவே றுணர்வு மில்லேன் ஒழிவற நிறைந்த கோலம்
மன்றில்நான் மறைக ளேத்த மானுடர் உய்ய வேண்டி
நின்றுநீ ஆடல் செய்கை நினைப்பதே நியம மாகும்
என்றுழும் புகலி மன்னர் இன்தமிழ்ப் பதிகம் பாட.

என்று அதனை விளக்கியவாற்றானும் அறிக. அவர்க்குப் பிரபஞ்சங் காட்சிப்படாது சிவமே காட்சிப்படுமென்பது,

[5] குற்றநீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ அருத்தம் இன்பம் என்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்பதென் முகம்மனே.

எனவும்,

[1] திருவுந்தி, பா, 33. [2] திருக்களிற், பா, 76. [3] சம்பந்தர், ஆலவாய், பா, 6, [4] பெரிய, சம்பர், பா, 866. [5] சம்பர், ஆலவாய், பா, 3.

[1] பொன்னாய் மணியானாய் போகமானாய்.

எனவும்,

[2] ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய்.

எனவும்,

[3] கூறும் நாவே முதலாகக் கூறுங் கரணம் எல்லாம்நீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமைநன்மை முழுதும்நீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கின்
தேறும் வகையென் சிவலோகா திகைத்தால் தேற்ற வேண்டாவோ.

எனவும், பிறாண்டும் இவ்வாறு அருளிச்செய்யுமாற்றானும், அவர் தஞ் செயலிழந்துநிற்றலை,

[4] அயல்மாண் டருவினைச் சுற்றமுமாண் டவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய
செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

எனவும்,

[5] ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டெ னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

எனவும் பிறவும் இவ்வாறு அருளிச்செய்தவற்றானும் அறிக.

[6] தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே.

என அப்பொருள்மேல் வைத்தோதியதுந் தன் செயலிழப்பை யுணர்த்தியதேயாம். இது, திருவருளாலே உணரச் சிவானந்தானுபவம் விளைதல் உணர்த்தியவாறு.

---

[1] அப்பர், தனித்திருத், பா, 7. [2] சுந்தரர், ஆரூர், பா, 10. [3] திருவாச, குழைத்த. பா, 5. [4], [5] திருவாச, தெள்ளேணம், பா, 11, 18. [6] அப்பர், ஆரூர்திருத், பா, 7.

நானுஞ் சுகவடிவாய் நண்ணினேன் நின்னருளால்
வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே—வானுஞ்
சுகரூப மன்றுமணந் தோற்றநிலம் போலுன்
அகரூப மட்டே அது. (சஎ)

இதன் பொழிப்பு:— நுமது திருவருளால் அடியேனும் இன்ப வடிவாய்ப் பொருந்தினேன்; அஃதன்றி எனது கருவி கரணங்களும் இன்பவடிவாய் நிலைபெற்றன. இது மாணுக்கர் கூற்று. அஃதொக்கு மாயினும், நின் கருவி கரணங்கள் இன்ப வடிவினவாய்த் தோன்றுதல், பூவின்கட் படிந்த காற்று அப் பூவின் மணத்தைத் தோற்றுவிப்பதுபோல அவை நின்னைச் சார்ந்துநின்ற சார்பானுயதன்றி அஃது அவற்றிற்கு இயற்கையன்றென்பது உணர்வாயாக. இஃது ஆசிரியர் கூற்று.

இதனகலம்:— உம்மை மூன்றும் எச்சவும்மைகள். வானென்பது உபலக்கணமாதலின் இவ்வாறுரைக்கப்பட்டது. "உன்னகரூபமட்டே" என்பது நின்னிடத்தில் வியாப்பியமாய் நிற்கும் அத்துணையேயன்றிப் பிறிதில்லை என்றவாறு. அது என்பது அணித்தாய் நின்ற, "வானுஞ் சுகவடிவாய் மன்னிற்றே" என்னுந் தொடர்ப்பொருளைச் சுட்டிநின்றது.

மாயை கன்மங்கள் ஆன்மாவின்கண் வியாப்பியமாய் அதற்குத் துணைசெய்து நிற்பனவாகலின், ஆன்மா எவ்வியல்பிற்றுயிற்று அவையும் அவ்வியல்பினவேயாதலின், "மணந்தோற்று அநிலம்போல் உன் அகரூப மட்டே அது" என்றார். மாயை கன்மங்கள் ஆன்மாவின் இயல்பின வாதலன்றித் தமக்கென வேறியல்புடையனவாய் நில்லாவென்பதை,

[1] மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் மருளெனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்.

என்பதனுணர்க.

47. I have become the form of joy, by Thy grace
Akas also hath stood as form of joy
But even akas is not the form of joy.
Like the earth that hath lost its smell,
The Akas is merely an inner form of Thine.

[1] சிவப்பிர, சு, 7, பா, 2.

"வானுஞ் சுகரூப மன்று" என்பது முதலியன அவை இனி விடற்பாலனவல்லவெனக் கொள்ளினுங் கொள்ளற்க என்று அவற்றது இயல்புணர்த்தியவாறு.

இது, நிட்டை கைவரப்பெற்றார்க்குக் கருவி கரணங்கள் மாறி நில்லாமை கூறியவாறு. அங்ஙனம் தம்வழியவாய் நின்ற அவற்றை அவர் ஆளுமாறு, திருவங்கமாலையுள்ளும், [1]"இடர் கெடுமா றெண்ணுதி யேல்" என்னும் திருத்தாண்டகத் திருப்பதிகத்துள்ளும், பிறண்டுங்காண்க.

---

ஈசன் அடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே—பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன் றன்னுடைய
நற்பதத்தைக் காணுமுன் நான். (சஅ)

**இதன் பொழிப்பு:—** யான், எனது அருட்குரவது திருவருளைப் பெறுத முன்னெல்லாம், வெள்ளத்துள் நின்று விடாய் தணித்தற்கு நீர் தேடுவான்போல முதல்வன் திருவடி வியாபகத்துள் நின்றும் அதனை அறியமாட்டாது என் அறிவுசென்ற இடங்களிலெல்லாம் ஆராய்ந்து எய்த்தொழிந்தேன்; இஃதோர் அறியாமையிருந்தவாறு! எ-து.

**இதனை கலம்:—** இருக்கையிலே என்புழி ஏகாரம் வேறிடத் திருந்து தேடுதலினின்றும் பிரித்தலிற் பிரிநிலை. தேடுதல் ஈண்டு அறிவினாற் றேடுதல். இளைத்தேனே என்னும் ஏகாரம் தேற்றம். பொற்பதத்தன் என்புழிப் பதமென்றது கதியை. [2]"நற்பதத்தார் நற்பதமே" என்புழிப்போல. நற்பதத்தைக் காணுமு னென்புழிப் பாதம் பதமெனக் குறுகிநின்றது. இஃதோர் அறியாமை இருந்தவாறென்பது குறிப்பெச்சம்.

---

48. Abiding though I was, under the feet of the Lord,
Weary I had grown, seeking His very feet everywhere,
Before I saw His holy feet, His pretty, ineffable feet,
His golden feet like lotus red.

[1] அப்பர், ஆரூர்திருத், பா, 1. [2] அப்பர், தனித்திருத், பா, 5.

கண்ணொளியும் விளக்கொளியும் கலந்து நின்றவழி அக் கலப்பின்கண் காட்டுவதாய தன்மையை உணராது காணுவதாய தன்மையை உணர்வார்க்கு விளக்கொளியின்றுமாறுபோல, எல்லாப் பொருளினும் அகம்புற மென்னுது நிறைந்து நிற்கும் முதல்வனியல்பைக் காணுது தன் முனைப்பைக்கொண்டு உலகத்தைக் காணலுறுவார்க்கு முதல்வன் இலனுமாகலான் இவ்வாறு கூறினர். இதனையே, சித்திரத்தைக் கண்ணுநோக்குவார்போலவும் கண்ணின்றிக் கையால் சுவர்த்தலத்தைத் தைவருவார் போலவுமெனத் தூலமாக வைத்துக் காட்டுப. இனி இங்ஙனம் தன்முனைப்போடு நின்று தேடி அலமருவாரை நோக்கியே,

[1] தரையை அறியாது தாமே திரிவோர்
புரையை யுணரார் புவி.

[2] வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாங்
கள்ளத் தலைவர் கடன்.

என அருளிச்செய்தாரென்க.

இஃது, அவர்க்கு முதல்வன் திருவடி வியாபகநிலை அநுபவமாதல் உணர்த்தியவாறு.

[3] ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்.

என்றதும் இந்நிலைபற்றியென்க.



---

நற்பதஞ்சேர் ஆரூரின் ஞானப்பிர காசனெந்தை
தற்பரனேர் ஞானவாள் தந்தானே—சொற்பனத்தும்
காரார் மறலிஅயன் கண்ணனுக்கும் அஞ்சேனை
யாராலும் என்செய்ய லாம். (௪௯)

49. Jnanaprakas in Arur of sacred standing,
My Father, the Highest, gave me a sword of wisdom
Who dare do anything to me who feareth not
Dark Death, Brahma or Vishnu even in my dreams?

[1], [2] திருவருட், அருளது, பா, 6. 8. [3] ஷெ அணைந். பா, 1.

இதன் பொழிப்பு:— எனது அருட்குரவர் எனக்கு, ஒப்பற்ற உண்மை ஞானத்தை அளித்துவிட்டமையான் அது பெற்றிலாதாரையே அடக்கவல்ல பசுவருக்கத்தாருள் யாவர்தாம் என்னை யாது செய்ய மாட்டுவர்! எ-து.

இதனகலம்:— அடியாரை நற்பதத்திற் சேர்க்கின்ற ஞானப் பிரகாசனென்க. பிறவிக் கேதுவாவனவற்றை யறுத்தலின் ஞானத்தை வாளாக உருவகஞ்செய்தார். அதனானே தாஞ் செல்லுநெறிக்குப் பகையாய் அடரவல்லாரை வேறலொருதலையென்பதும் பெறப்பட்டது. "காரார் மறலி அயன் கண்ணனுக்கு மஞ்சேனை" யென்றது உடம்பொடு புணர்த்தல். காரணக் கடவுளர்களின் வழிப்பட்டு ஐந்தொழிற்பட்டு வரும் பாதந்திரத்தி னின்றும் நீங்கினமையான் அங்ஙனங் கூறினர். அவர்கட்கு அஞ்சேனுகவே ஏனையோர்க்கு அஞ்சேனுதல் சொல்லவேண்டுமோ என்பது கருத்து. மக்களும் தேவருமாகிய எல்லாரும் வினைவிளைவிற்குத் துணையாகின்றவரன்றி வேறல்லராகலான் வினை நீங்கப்பெற்றார் அவர்கட்கு அஞ்சுமாறில்லையென்க. இதனை,

[1] அஞ்சுவதியாதொன்றும் இல்லை அஞ்சவருவதும் இல்லை.

[2] நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்.

[3] என்றுநாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்.
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம்.

[4] நாவலந்தீ வகத்தினுக்கு நாதரான
காவலரே யேவி விடுத்தாரேனுங் கடவமலோம்,

[5] தென்றிசைக்கோன் தானேவந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங் குணமாகக் கொள்ளோம்.

எனப் பலபடியாக விதந்தோதியவற்றானும், திருவாசகத்துள்,

[6] யாமார்க்கும் குடியல்லோம் யாதுமஞ்சோம்,

என்றதனானும் அங்ஙனங் கூறுவனவெல்லாம் வினையினீங்கித் திருவருள் கைவரப்பெற்ற வலிமையானென்பது,

[1] உடையார் ஒருவர் தமர்நாம்.

---

[1] அப்பர், அதிகை, பா, 1. [2], [3], [4], [5] அப்பர், மறுமாற்றத், பா, 1, 5, 6, 10.
[6] திருவாச, சதகம், பா, 30.

[1] தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.

[2] சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்.

[3] சிவனே யென்னும் நாவுடையார் நடையாள வுடையார்

[4] சிவன்என் சிந்தை சேர்ந்திருந்தான்,

எனவும்,

[5] தேவர்கோ அறியாத தேவதேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோன் என்னையும்வந் தாண்டுகொண்டான்.

எனவும் ஆண்டருளிச் செய்தவாற்றானுமறிக.

[6] தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.

என்றதூஉம் அக்கருத்தேபற்றி யென்க. அஞ்சப்படுவாருள் மறலியை முற்கூறியது, அவர்க்கஞ்சுதல் பக்குவ அபக்குவரென்னும் இருபாலாரிடத்தும் ஒப்ப நிகழுஞ் சிறப்புப்பற்றியென்க.

[7] கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

என இதனையே சிறந்தெடுத்தோதினார் திருவள்ளுவநாயனாருமென்க.

[8] அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற் றுபாச வடிவமான
அந்தகா நீஒரு பகட்டாற் பகட்டுவ தடாதடா காசுநம்பாற்
செல்லாதடா என்று பேசவா யதுதந்த செல்வமே!

என்றார் இவர்வழியடியாரும்.

---

1, 2, 3, 4 அப்பர், மறுமாற்றுத், பா, 1, 5, 6, 10, 5 திருவாச, சதகம், பா. 30.
6, 7 குறள், பா, 5, 269. 8 தாயுமா, தேசோமயா, பா, 9.

கண்ணனென்பது கரியனென்னும் பொருட்டாய காரணக் குறியாய் மாயோனை உணர்த்திற்று. கண்ணனுக்கு மென்னும் உம்மை சிறப்பும்மை. யாராலும் என்புழி உம்மை அசைநிலை. பிறவும்மையாகக் கொள்ளின், என்செய்யலா மென்பதனை யாதுஞ் செய்யலாகாதென்னும் பொருட்டாக உரைக்க. யாராலுமென உயர்திணைமேல்வைத்துக் கூறவே அஃறிணை சொல்லவேண்டாவாயிற்று.

இஃது, அவர்க்கு அவர்கொண்டு நின்ற உடம்பும் ஊழுமே யன்றி அவற்றின்வழிநின்ற உயிர்களும் மாறாய் நில்லாமை கூறியவாறு. [1]"அவைநல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே" என்றருளியதூஉம் இக் கருத்துப்பற்றியென்க.

---

வெறும்பாழிற் பேரின்ப வெட்டவெளி தன்னில்
குறும்பாளர் காணக் குடிலின்—உறும்பாசம்
ஓட்டிஎனை வைத்தனனே உற்றபிர பஞ்சமெலாம்
ஆட்டியஞா னப்பிரகா சன். (௫௦)

இதன் பொழிப்பு:— எனது அருட்குரவர் என்னை, அநாதியாகப் பொருந்திய பாசத்தை யறுத்து, வெறும்பாழ் எனவும், பேரின்பவெளி எனவுஞ் சொல்லப்படுவதாய் மலக் குறும்புடையோர்க்கு அறியவாராத தாகிய நிழலிடத்தின்கண் வைத்தருளினார் எ-து.

இதனகலம்:— சுட்டியறியப்படுவன ஏதுமில்லாமைபற்றி வீடு பேற்றினை "வெறும் பாழ்" எனவும், அன்னதாயினும் துன்பமும் இருளு மாகாது இன்பமும் ஒளியுமாயுண்மையிற் "பேரின்ப வெட்டவெளி" எனவும், என்றும் நீங்காதிருக்கும் இனிய நிலையாகலிற் குடிலெனவுங் கூறினர். பட்டப்பகல் வெட்டவெளி என்றாற்போல்வன பகல் வெளி

50. In the perfect void, in the utter expanse of great joy,
In the hovel the mischievous thieves can't find,
He placed me having driven the pasam,
Jnanaprakas that moveth all universe.

[1] சம்பந்தர், கோளறு பதிகம், பா, 1.

முதலியவற்றது பிருதி புணர்த்தி வழங்கும். அவற்றுள் முன்மொழி பிரிந்திசைக்கு மாயினும் பின்மொழி பிரிந்திசையாமையின் அவற்றை இரட்டைக் கிளவியாகக் கொள்க. கன்னங்கரிது, சின்னஞ்சிறிது முதலியனவும் அவை. வைத்தனனே என்னும் ஏகாரந் தேற்றம். உயிர்கள் பொருட்டு ஐந்தொழில் செய்யுமுதல்வன் இன்று எனக்கு ஆசிரியனாய் வந்தருள்செய்தானென்பார், தமது ஞானாசிரியரைப் "பிரபஞ்சமெல்லாம் ஆட்டிய ஞானப்பிரகாசன்" என்றார்.

இஃது, அவர்க்குச் சுட்டுணர்வின்றி வியாபகவுணர்வுண்டாதலும், அதனாற் பேரின்பம் விளைதலும், அதுவே மீளாநிலையாய் முடிந்தபேறாதலுங் கூறியவாறு.

---

என்றுஞ் சிவத்தோ டிணைபிரியா தேயறிவாய்
நின்றபடி தன்னை நிகழ்த்தினான்—மன்றில்
நடமாடும் ஆரூரன் ஞானப்பிர காசன்
திடமாக என்னுள்ளத் தில். (ருக)

**இதன் பொழிப்பு:—** எனது அருட்குரவர், யான் எஞ்ஞான்றும் சிவமுதற்பொருளோடு உடனாய் நிற்றலின் நீங்குதலின்றி அறிவுவடிவமாய் நின்ற முறைமையை எனது உள்ளத்தின்கண் திண்ணிதாக விளங்கச் செய்தார்; அதனை யான் இப்பொழுது அநுபவமாகக் காண்கின்றேன் எ-று.

**இதனகலம்:—** அதனை யான் இப்பொழுது அநுபவமாகக் காண்கின்றேன் என்பது குறிப்பெச்சம். அருளாசிரியன் அறிவுறுக்கும் அருண்மொழியைக் கேட்டகாலத்துக் கேள்விமாத்திரையான் விளங்கிய ஞானம் பின் முதிர்ந்து அனுபவமாங்காலத்து அதனை யறிவுறுத்த ஆசிரியன்மாட்டு அன்பும் அவ்வருண்மொழியின் அருமைப்பாடும் மிக்குத்

---

51. He showed it in my heart assuredly
The manner of my oxistence as intelligence
Ever united with Sivam without severance
He of Arur, that danceth in the Hall, Jnanaprakas.

தோன்றுமாகலின் அவ்வியல்புபற்றி இங்ஙனங் கூறப்பட்டதென்க. தீவிர வுணர்வுடையார்க்கு அது விரையத்தோன்றும். அஃதில்லாதார்க்கு அவ் வருண்மொழி முன்னர் ஆசிரியனாணை மாத்திரமாய்க் கொள்ளப்பட்டு, பின்னர் அநுபவமாய்த் தோன்றும். அக்காலத்து அவர்க்குத் தம் பண்டைநிலையை எண்ணியவழி நகையுண்டாதலும் உண்டென்க. இதனை இவர் வழியடியாருள் ஒருவராகிய தாயுமான அடிகள்,

> [1] இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
> எனருசித் திடவலியவந்
> தின்பங் கொடுத்தநினை யெந்நேர நின்னன்பர்
> இடையரு துருகிநாடி
> உன்னிய கருத்தவிழ உரைகுழறி உடலெங்கும்
> ஓய்ந்தயர்ந் தவசமாகி
> உணர்வரிய பேரின்ப அநுபூதி உணர்விலே
> உணர்வார்கள் உள்ளபடிகாண்.

என முன்னர்த் தீவிரநிலையுடையாரது தன்மையை விளக்கிப் பின்,

> கன்னிகை ஒருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
> கைக்கொள்வள்; பக்குவத்தில்
> கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
> கருதிநகை யாவள்அதுபோல்
> சொன்னபடி கேட்கும்இப் பேதைக்கு நின்கருணை
> தோற்றிற் சுகாரம்பமாம்.

என அஃதில்லாதாரது இயல்பினை விளக்கியவாற்றானுணர்க.

இஃது, அவர்க்குச் சுருதியானுங் குருவருளானும் உணரப்பட்ட ஞானம் சுவாநுபவமாதல் உணர்த்தியவாறு.

1.

நாதனார் தென்கமலை நாயனார் எவ்வுயிர்க்கும்
போதனார் செங்கமலப் பொற்பாதர்—பேதமற
ஒன்றிரண்டு தானறவே உண்மையிலே கூட்டிஎனை
இன்றறவே வைத்துவிட்டா ரே. (௫உ)

இதன் பொழிப்பு:— எனது அருட்குரவர் இன்று என்னைச் சமயவாதிகள் கூறும் முரண்பாடுகளெல்லாம் நீங்க உண்மை ஞானத்தைத் தலைப்படுவித்து ஒன்றெனவும் இரண்டெனவுங் கூறலாகாத சுத்தாத்துவித முத்தியின்கட் குறைவற வைத்தருளினார் எ-று.

இதனகலம்:— பொற்பாதர் இன்று என்னைப் பேதமற உண்மையிலே கூட்டி, ஒன்றிரண்டு அறவேவைத்துவிட்டார் என இயைக்க.

சமயவாதிகள் கூறும் முரண்பாடுகளாவன ஒன்றே பொருள் என்னின் வேறெனவும், வேறென்னின் அன்றெனவும் பிணங்கி முத்தியின்கண் ஆன்மாவுஞ் சிவமும் குடமுடைந்தவழிக் குடாகாயம் மகாகாயத்தோடொன்றுதல்போல ஒன்றுமெனவும், செம்பு இரதகுளிகையாற் பொன்னானாற்போல ஒன்றுகெட்டு ஒன்றுமெனவும், பாலு நீரும்போலக் கலப்பினால் ஒன்றுமெனவும், காய்ச்சிய இரும்பினீர்போலச் சென்றொடுங்குதலான் ஒன்றுமெனவும், மற்றும் இன்னோரன்னவாகக் கூறுவன. அவை எல்லாம் அருட்குரவனறிவுறுக்கும் உண்மை ஞானத்தை யுணர்ந்தவழி நீங்குதலின் "பேதமற உண்மையிலே கூட்டி" எனவும், சித்தாந்த முத்தியாவது அவையனைத்தினும் வேறாய் ஒன்றெனவும் இரண்டெனவுங் கூறவாராத சுத்தாத்துவித முத்தியாகலான் அதனை "ஒன்றிரண்டு தானறவே" எனவும், அந்நிலையைக் குறைவறப்பெற்றமையான் "அறவே வைத்துவிட்டாரே" என்வுங் கூறினார். ஏகாரங்கள் தேற்றம்.

---

52. The Lord, the Chief of Kamalai of the south
That granteth wisdom to all living things
He with golden feet like lotus red
Hath, this day united me with truth
And placed me securely
With all differences gone,
With the thought, that we are one or two, also gone.

[1] ஒன்றாலும் ஒன்றா திரண்டாலும் ஓசைபெறா
தென்றாலொன் றன்றிரண்டு மில்.

என்பவாகலின், ஆன்மாவுஞ் சிவமும் ஒன்றேயென்னிற் பெறுவானும் பேறும் இல்லையாயொழியும்; இரண்டென்னிற் சாயுச்சமென்றல் இல்லையாம். ஆதலின் அவ்விரண்டுநிலையும் அல்லாத அத்துவிதநிலையே முத்திநிலையாமென்க. பிற உவமைகளினும் இன்பம் நுகர்வானும் நுகர்ச்சியுமில்லாமை முதலிய குற்றங்களுளவாமாறு கண்டுகொள்க.

இனி அத்துவிதமென்னுஞ் சொல்லிற்குக் கேவலம் ஒன்றே எனப் பொருள் கொள்வாரும், விசேடண விசேடியத்தால் ஒன்றெனப் பொருள்கொள்வாரும் முறையே கேவலம், விசிட்டமென்னுஞ் சொற்களை அடையாகக் கோடலின் அவர் கூறுவன கேவலாத்துவித முத்தியும் விசிட்டாத்துவித முத்தியுமாகச் சித்தாந்தத்துள் அத்துவிதத்தினை அடையின்றிக் கோடலின் அம்முத்தியே சுத்தாத்துவித முத்தியாமென்க. இது சிவஞானபாடியத்துட் கண்டது.

இந்நிலை ஒன்றெனவும் இரண்டெனவுங் கூறலாகாமையின் "அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி" எனப் பெத்தகாலத்து ஆன்மாவே தோன்றச் சிவந்தோன்றாது நின்றாற்போல முத்திக்காலத்துச் சிவமே தோன்ற ஆன்மாத் தோன்றாது நிற்குமென் றருளிச்செய்தார் மெய்கண்டதேவநாயனார் என்க. அவர் சகலநிலைபற்றிக் கூறிய இது கொண்டு,

[2] ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ.

எனக் கேவலநிலைபற்றிக் கூறினார் தாயுமான அடிகளென்க. அத்துவிதமென்பதற்கு இரண்டில்லையெனப் பொருள்கொண்டு அபேதவாதமும், பேதவாதமும், பேதாபேதவாதமும்பட வுரைசெய்தாரை மறுத்து அதன் உண்மைப்பொருளை "அவையே தானேயாய்" எனவும், "தாந்தம் உணர்வின் தமி" எனவும் பொதுவதிகாரத்துள்ளும், "அவனே தானேயாகிய அந்நெறி" எனவும், "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்" எனவும் உண்மையதிகாரத்

[1] திருவருட், இன்புறு, பா, 5. [2] தாயுமா, எந்நாட், நிற்குநிலை, பா, 5.

துள்ளும் இனிது விளக்கியருளினமையின், ஆசிரியர் மெய்கண்டதேவ நாயனாரைப், [1]"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித – மெய் கண்ட நாதன்" எனச் சிறந்தெடுத்தோதி வாழ்த்தினார் அவ்வடிகளென்க.

இச் சுத்தாத்துவித முத்திநிலையை இங்ஙனம் மேற்கூறியவாற்றா னன்றி ஒன்றென்றாதல் இரண்டென்றாதல் கூறலாகாமையின்,

[2] எங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ங னிருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற.

எனவும், "சொல்லுவ தறியேன் வாழி முறையோ" எனவும் கூறுப.

அரிவையரின்பம் முதலாயின எல்லாந் தன்னின்வேறாய பொருளிடத்தினின்றுங் கருவி கரணங்கள் வாயிலாகத் தன் மாட்டுச் செயற்கையாய்ப் பொருந்தும் ஏகதேச வின்பங்களாய் யான் இவ் வெழி லுருக்கண்டின்புற்றேன், இவ் வின்னோசை கேட்டின்புற்றேன், இத் தீஞ்சுவை உண்டின்புற்றேன், இந்நறுமணம் உயிர்த்தின்புற்றேன், இம் மெல்லூற்றினை உற்றின்புற்றேன் என்றுணரவும் உணர்த்தவும்படுதலின் அவையெல்லாம் உணர்ந்துரைக்கப்படுவனவேயாம். சிவானந்தம் அவ் வாறின்றித் தன்னுள்ளத்துள் ஒழிவற நிறைந்த பொருளின்மாட்டுக் கருவி கரணங்களினீங்கி உரையுணர்விறந்து வியாபகமாய் நின்றநுபவிக்கப் படும் இயற்கையின்பமாதலின் அஃதொன்றுமே உரையான் உரைக்க வாராதது என்க. அங்ஙனமாயினும் அநுபவித்தறியும் இன்பமாதன் மாத்திரையான், [3]"மருவி இருவரும் புணர வந்த இன்பம் வாயினாற் பேசரிது" என்பரென்றுணர்க.

இஃது, அவர் அடைந்த இன்பநிலை இத்தகையதென்பது உணர்த்தியவாறு.

நன்னெஞ்சே நீகேட்ட நன்மையெலாஞ் சொல்லுதற்குக்
கன்னெஞ்ச மாலயனுங் காணுதோன்—வன்னெஞ்சர்
இன்னகுறை உண்டென்னு ஈசன் எதிர்வந்தான்
என்னகுறை சொல்லாய் இனி. (௫௩)

**இதன் பொழிப்பு:—** அயன் மால் முதலிய காரணக் கடவுளர்களாலும், அறியப்படாத பரசிவம் தானே ஆசான் மூர்த்தியாய் எழுந்தருளி வந்து உண்மை ஞானத்தைப் பொதுவகையாற் கேட்பித்தும், அளவைகளானும் பொருந்துமாற்றானும் ஐயமறச் சிந்திப்பித்தும், பின் தெளிவித்தும், தெளிந்தவாறே நிட்டை கூடுவித்தும் நின்றமையான் யான் முடிந்த நிலையை எய்தினேன் எ-து.

**இதனகலம்:—** உலகியலின் நீங்கி மெய்ந்நெறிக்கட் சென்றமையின் நெஞ்சத்தை "நன்னெஞ்சே" யென்றார். கேட்ட என்றது விரும்பிய வென்னும் பொருட்டு. நன்மையென்றது ஞான வாய்மையை. மலம் நீங்காமையிற் "கன்னெஞ்சமாலயன்" என்றார். உண்மைஞானத்தை யுணர்த்துவோர் பசுவருக்கத்துளொருவராதல் கூடாமையின் "மாலயனுங் காணுதோன் வந்தான்" எனவும், அவன் எத்தகைய குறைபாடும் இலனாகலின் "வன்னெஞ்சர் இன்னகுறை உண்டென்னு ஈசன்" எனவும், அவனாற் கேட்பித்தல் முதலிய நான்கினையும் எய்தி நிட்டை கைகூடப் பெற்றமையின் "என்னகுறை சொல்லாய் இனி" யெனவுங் கூறினார்.

இஃது, அப்பேற்றினதருமை கூறுமுகத்தான் அதனது குறைவின்மை கூறியவாறு.

---

53. The Lord whom the stone-hearted Vishnu and Brahma have not seen,
Of whom even the hard-hearted cannot say,
'Lo, He is wanting in this'—He hath come before thee
To tell thee of all the good things thou hast desired.
My good heart, what else dost thou want ?

இட்டசனம் எங்கே இதமகிதந் தானெங்கே
துட்டசனம் எங்கே தொழிலெங்கே — சிட்டருடன்
கூடி யிருந்ததெங்கே குன்றாச் சிவானந்த
நாடியது வாயிருந்த நாள். (ருச)

இதன் பொழிப்பு:— குறையாத பேரின்பமாகிய சிவானந்த மொன்றையே விரும்பி அதனையடைந்து அச்சிவானந்தமேயாய் அழுந்தி நிற்கும் அந்நிலையினை யுடையார்க்கு, இவ்வுலகியல் பற்றிவரும் உறவும் பகையும் நன்மையுந் தீமையும் நல்லாரும் பொல்லாரும் முயற்சியும் மடியும் ஆகிய வேற்றுமையுணர்வுகளெல்லாம் எவ்விடத்தன எ-று.

இதனகலம்:— ஏனையவற்றிற்கேற்ப இட்டசனம் தொழில் என்பவற்றிற்கு மறுதலையாய அநிட்டசனம், மடியென்பன வருவித்துத் தொழிலென்பதனை இறுதிக்கண் வைத்துரைக்க. நிட்டைமேவிச் சிவானந் தானுபவம் உற்றார்க்கு உலகவேறுபாட்டுணர்வு முனைத்து நில்லாமை,

[1] நன்றிது தீதென வந்த நடுக்கம் நடந்தன ஆகாதே,

[2] பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே.

[3] மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே.

[4] அங்கிது நன்றிது நன்றெனும் மாயை அடங்கிடு மாகாதே.

எனவும்,

[5] ஆளுச் செல்வத்து வானோர் இன்பம்
அதுவே எய்தினும் எய்துக ........
வரையில் தண்டத்து மாறாக் கடுந்துயர்
நிரயஞ் சேரினுஞ் சேர்க; உரையிடை

54. Where are the friends, where the things of pleasure and pain,
Where are the wicked, the actions where are they,
Where is the communion with the good,
The day thou hast desired Siva's joy that diminisheth not
The day thou hast stood as that ?

[1], [2], [3], [4] திருவாச, திருப்படையாட்சி, பா, 2, 3, 5, 8. [5] கோயினான்மணி, பா, 36.

வரோ ரென்னை யாறுது விருப்பி
நல்லன் எனினும் என்க; அவரே
அல்லன் எனினும் என்க; நில்லாத்
திருவொடு திளைத்துப் பெருவளஞ் சிதையா
தின்பத் தழுந்தினும் அழுந்துக; அல்லாத்
துன்பந் துதையினுந் துதைக; முன்பில்
இளமையொடு பழகிக் கழிமூப்புக் குறுகா
தென்றும் இருக்கினும் இருக்க; அன்றி
இன்றே இறக்கினும் இறக்க; ஒன்றினும்
வேண்டலும் இலனே வெறுத்தலும் இலனே;
ஆண்டகைக் குரிசில்நின் அடியரொடுங் குழுமித
தெய்வக் கூத்தும்நின் செய்ய பாதமும்
அடையவும் அணுகவும் பெற்ற
கிடையாச் செல்வங் கிடைத்த லானே.

எனவும் அவர்கூறுமாற்றானறிக.

இஃது, அவர்க்குப் பிரபஞ்சம் காட்சிப்படாமை உணர்த்தியவாறு. இதனானே அவர்க்கு ஆகாமியமின்மை உணர்க.

---

வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே—வாக்குமனக்
காயம் உடனிழந்து காண்ஞா திருஞான
ஞேயம் இழந்த நிலே. (௫௫)

இதன் பொழிப்பு:— மாயா காரியங்களாகிய கருவி கரணங்கள் பற்றுக்கோடாக வந்த வினை முழுவதூஉம் அப் பற்றுக்கோடு நீங்கவே நீங்குமாகலான் அதுபற்றிக் கவலாது காண்பான் காட்சி காட்சிப்பொருள் என்னும் மூவகைப் பகுப்பும் இறந்த அதீத நிலையில் நிற்பர் உண்மை ஞானங் கைவரப்பெற்றோர் எ-து.

---

55. All the things that come with speech or mind or body
They shall cease to be with speech or mind or body.
Lose thy speech and mind and body. Perceive the state
Wherein perceiver, perception and the perceived are lost.

இரதனகலர் :— வந்தபொருளென்றது வினையது தன்மையை விளக்கும் குறிப்பேதுப்பெயராய் ஈண்டுப் பிராரத்தத்தின் மேனின்றது. அதுபற்றிக் கவலற்க என்பார் அதீதத்தின் தன்மையை எடுத்தோதி அதனைக் காணென்றாராகலின் அதற்கிங்ஙனம் உரைக்கப்பட்டது உடனிரண்டனுள் முன்னையது உடனிலைப் பொருட்டாயும், பின்னது எண்ணுப்பொருட்டாயும் நின்றன. [1]"சாரியை யியற்கை – உடைமையும் இன்மையும் ஒடுவயினொக்கும்" என்பவாகலிற், "காயமுடன்" எனச் சாரியையின்றி நின்றது. [2]"வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்" என்புழிப்போல. இது சொற்பொருட்பின்வருநிலை.

சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமிய மென்னும் மூவகை வினைகளுட் சஞ்சிதம் ஆசான் மூர்த்தியது திருவருள் நோக்கத்தானும், ஆகாமியம் முதல்வன் திருவடிஞானத்தானும் கெட்டொழிய எஞ்சிய பிராரத்தகன்ம மொன்றே உடம்புள்ள துணையும் நிற்பதாகலின், அதுதானும் அவ்வுடம்பு நீங்க நீங்குமென்பார், "வாக்குமனக் காயத்தான் வந்தபொருளத்தனையும் வாக்குமனக் காயமுடன் மாயுமே" என்றார். ஞானிகட்கு மூவகை வினைகளும் இங்ஙனம் நீங்குமென்பதனை,

[3] எல்லையில் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்
ஒல்லையின் அகலும்; ஏன்ற உடற்பழ வினைய தூட்டும்;
தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல்
அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே.

எனவும்,

[4] ஏன்ற வினை உடலோ டேகும்;இடை யேறும்வினை
தோன்றில் அருளே சுடும்.

எனவும் கூறுமாற்றானுணர்க.

இஃது, அவர்க்குப் பிராரத்தம் போமாறு உணர்த்தியவாறு.

---

[1] தொல், எழுத், புணரிய, சூ, 30. [2] தொல், சொல், இடை, சூ, 2. [3] சிவப்பிர, சூ, 10, பா, 10. [4] திருவருட், அணைந், பா, 8.

புசிப்போஞ் சிவபோகம் பூரணமாய் எங்கும்
வசிப்போம் உலகில் வசியோம்—முசிப்பின்றி
வாழ்வோஞ் சிவத்தையுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோம் எமக்கார் சரி. (ருசு)

இதன் பொழிப்பு:— யாம் நுகர்வது உலகபோகமன்றிச் சிவபோகமே; யாம் வசித்தல் உடம்பின்கண் ஏகதேசமாயன்றி எவ்விடத்தும்; வியாபகமாயே யாம் வாழ்வது துன்பத்தோடன்றி இன்பமொன்றோடே; யாம்பணிதல் உலகர்கீழன்றிச் சிவமுதற்பொருளை அநுபூதிக்கண்வைத்து உணரும் தவத்தவர்களது சிறந்த திருவடிக்கீழே; ஆகலின் இவ்வுலகத்தின்கண் உமக்கு ஒப்பாவார் யார்? எ-து.

இதனகலம்:— உலகென்றது ஈண்டு உடம்பினை. பூரணமாய் எங்கும் வசிப்போ முலகில் வசியோ மென்றதற்கேற்ப ஏனைய விடத்தும் அவ்வவற்றது எதிர்மறைப்பொருள் வருவிக்கப்பட்டன. எமக்கார் சரி என்றது தமது அநுபூதி நிலையை வியந்ததன்றிப் பிறரை இகழ்ந்ததன்றென்க. இருவினையாற்பிணிப்புண்டு ஏகதேசமாய்க் கிடந்தார் அவ்வினைத் தொடர்பு நீங்கி வியாபகமாய சிவானந்தப் பெருவாழ்வினை யெய்தியவழி காலினுங் கையினுந் தளைபூண்டு சிறையழுவத் தழுந்திப் பன்னெடுங்காலங் கிடந்தார் அத்தளையுஞ் சிறையும் நீங்கப்பெற்று அவனி முழுதாளும் அரசராய் அரசுகட்டிலேறினாற்போல முன்பு அறியாததோரின்பமும் இறும்பூதும் மீதூருமாகலான் அம்மீதூர்வான் இங்஗னங்கூறுதல் அவர்க்கியல்பென்க. அதனை,

[1] ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை.

எனவும்,

[2] உறவாவார் உருத்திரபல் கணத்தினோர்கள்.

எனவும்,

---

56. We enjoy Sivabhoga, we live in perfection everywhere
We are not of the world. We live without end.
We bow down to the golden feet
Of the great tapasvins who have realised Sivam.
Who then are our equals ?

[1], [2] அப்பர் மறுமாற்றத், பா. 1, 4.

[1] பாராண்டு பகடேறி வருவார் சொலனும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற்றோமே.

எனவும்,

[2] என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்
இருநிலத்தில் இமக்கெதிரா வாரும் இல்லை.

எனவும், பிறவாறும் ஆண்டாண்டு அவர் கூறுமாற்றுனறிக.

[3] எங்குமியாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யாரடியார் அடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

என்றதும் அந்நிலையில் நின்றுரை நோக்கியென்க.

இனி வினைத்தொடர்பினீங்கிச் சிவானந்தத்தைத் தலைப்பட்ட சீவன் முத்தர்க்கு, குருலிங்கசங்கமவழிபாடுகளுள் ஏனையோர்க்கெய்தலரிய சங்கமவழிபாடுளதாதல் கூறவே ஏனையிருவகை வழிபாடுகளும் உண்மை கைமுதிக நியாயத்தான் அமைந்துகிடந்தனவென்க. எனவே, அவர், [4]"ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்றவாறு திருக்கோயில் வழிபாடுசெய்தலும், [5]"நறவார் பொன் னிதழிநறுந் தாரோன் சீரார் நமச்சிவாயஞ் சொல்ல வல்லோம்" எனவும், [6]"நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே" எனவும், [7]"அந்தமா திகளிலாத அஞ்செழுத் தருளினலே, வந்தவா றுரைசெய்வாரை வாதியா பேதியாவே" எனவும் கூறியவாறு அஞ்செழுத்தை விதிப்படி உச்சரித்தலுமுடையராய் ஒழுகுவரென்க.

சிவனடியாரைச் சிவனெனவே கண்டு வழிபடுதல் சிவஞான முடையோர்க்கன்றிக் கூடாதென்பது, [8]"ஈசனுக்கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார்" என்பதனுனறிக. சரியைத் தொண்டுதானும் ஞானத்தின் பொதுநிலையேயாகலின், அந் நிலையினையுடையார் சிவனடியார் சிவனே யாதலைப் பொதுவகையான் உணர்ந்து அவர்க்குத் தொண்டுசெய்தற்கு இழுக்கின்மையுணர்க. சிவனடியாரைச் சிவனேயென்றல் உபசாரமாகாது உண்மையேயாமென்பதை,

---

[1], [2], [5] அப்பர், மறுமாற்றத், பா, 3, 5, 4. [3], [8] சித்தி, சூ, 12, பா, 1, 2.
[4] சிவஞானபோ, சூ, 12. [6] அப்பர், நமச்சி, பா, 5. [7] சிவப்பிர, சூ, 10, பா. 11.

[1] அறிவரியான் றனையறிய ஆக்கை யாக்கி
அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத் தருளால்
செறிதலினால் திருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்குமத்தாற் சிவனு மாவர்
குறியதனால் இதயத்தே அரனைக் கூடுங்
கொள்கையினால் அரனாவர் குறியொடுதாம் அழியும்
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவர் என்றால்
நேசத்தாற் றொழுதிடுநீ பாசத்தார் விடவே.

என்பதனையறிக.

இது, நிட்டையெய்தினோரது ஆசாரங் கூறியவாறு. இப் பதின்மூன்று வெண்பாக்களானும் நிட்டையில் நிகழும் அநுபவம் உணர்த்தப்பட்டன. இதனை அநுபூதிநிலையென்ப.

---

அறிவுநீ என்ன அறிந்தறிந்து மாயைச்
செறிவுநான் என்றென்று சேர்ந்தால்—அறிவு
தெரிந்திடுமோ இன்பசுகஞ் சேர்ந்திடுமோ நின்னைப்
பிரிந்திடுமோ சென்மப் பிணி. (௫௭)

இதன் பொழிப்பு:— நின் உண்மையியல்பு அறிவேயென்று நாம் உணர்த்த அதனை நீ கேட்டல் முதலிய நால்வகையானும் உணர்ந்தும் பின்னும் சடமாகிய மாயாகாரியங்களையே நான் என்று மீளமீள மயங்குவையாயின், நின்னியல்பும் நின் அறிவுக்கறிவாயுள்ள சிவத்தினியல்பும் விளங்குதலும், அதனாற் சிவானந்தம் மேலிடுதலும் அதனாற் பிறவிப்பிணி நீங்குதலும் உளவாகுமோ எ-து.

57. Thou knowest full well thou art intelligence.
Still if thou join with Maya saying that thou art
Filled with it, would wisdom be found,
Would blissful joy come to thee,
Would the disease of birth leave thee ?

[1] சித்தி, சூ, 12, பா, 3.

**இதனகலம்:—** அடுக்குக்கள் பன்மைப்பொருள. அறிவென்றது சிற்றறிவும் பேரறிவுமாகிய இரண்டனையுமென்க.

இது, மேற்கூறிய அநுபவங்கூடாது பிரபஞ்சங் காட்சிப்பட நின்றார்க்கு ஓர் உபாயநிலை உணர்த்துதற்குத் தோற்றுவாய் செய்தற் பொருட்டு அப்பெற்றியாரை நோக்கிக் கூறியவாறு.

---

அரணங்கள் தாமெரித்த அத்தரே என்னுள்
கரணங்கள் ஓட்டும்வகை காட்டீர்—கரணங்கள்
நீஅதுவாய் நில்லாமல் நின்னறிவைக் கண்டருளிற்
போயதுவாய் நின்றுவிடப் போம். (ருஅ)

**இதன் பொழிப்பு:—** முப்புரங்களை எரித்த முழுமுதற்பொருளாய் உள்ள எனது அருட்குரவரே! அடியேன் எனது கருவிகரணங்களைப் போக்குதற்குரிய உபாயத்தினை அறிவித்தருள்வீராக. இது மாணக்கர் விண்ணப்பம். கருவிகரணங்கள் தொழிற்படுங்கால், அவற்றை நின்னியல் பினவாக மயங்காது, அவற்றது சடத்தன்மையை அறிந்தும், அவை சடமாயினும் அவையின்றி நினக்கு அறிவு நிகழாமையாகிய நின் அறிவின் தன்மையை உணர்ந்தும் திருவருளிற்சென்று, பின் கருவிகரணங்களும் நீயும் கூடிய இடத்து நிகழுஞ்செயலெல்லாம் அத் திருவருளின் செயலே என்னுமந்நிலையில் உறைத்துநிற்க அவை நின்னைத் தாக்காது நீங்கும். இது ஆசிரியர் அருளிப்பாடு.

**இதனகலம்:—** ஓட்டும்வகை யென்புழிநின்ற மகர ஒற்று அரை மாத்திரையினுங் குறுகுதலின் அலகின்றிநீங்க, அது வெண்சீராமென்க. அது இரண்டனுள் முன்னையது "கரணங்கள் நீ" என்னும் தொடர்ப் பொருளையும், பின்னையது திருவருளையுஞ் சுட்டிநின்றன. நீ என்பதும்

---

58. 'Father, that hath burnt the fortresses,
Show me the way to drive my karanas away!'
'If thou shalt not identify thyself with karanas
But perceive thou art intelligence,
Unite thyself with grace and abide as that
They shall depart from thee.'

அறிவென்பதூம் ஆகுபெயர். நின்றுவிடஎன்புழி விடுவென்பது துணிவின்கண் வந்தது. கருவிகள் சடமாதலையும், அவையின்றித் தன்னறிவு ஒன்றனையும் அறியமாட்டாமையையும் உணரவே, அவை யிரண்டனையுங் கூட்டித் தொழிற்படச் செய்வது திருவருளே என்பது போதருதலின், கரணங்களின் றன்மையும் நின்னறிவின் றன்மையும் உணர்ந்து திருவருளாய் நிற்கவென்றார். இஃது அந் நிட்டைமேவுதற்கு உபாயமாதலை,

> [1] விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல் முன்னம்
> அளந்தறி வளித்த வற்றின் அளவுமற் றவற்றி னாலே
> உளங்கொளுந் தனையு முள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே
> தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே.

என்பதனானறிக.

இஃது, அவர்க்கு ஓர் உபாயங் கூறியவாறு.

---

தானல்லா தத்தனையுந் தானென் றுழலாமல்
தானெல்லா மாயதனுள் தாக்காமல்—தானெல்லாம்
ஆனோம் எனும்போதத் தாக்காமல் ஈசனிடத்
தானோனே ஆயினவ னாம். (ருகூ)

இதன் பொழிப்பு:— முதற்கண் தான் கருவிகளிற்றொடக்குண்டு நில்லாது அவற்றினீங்குதலும், அங்ஙீக்கத்தான் ஏகதேச உணர்வைவிட்டு வியாபக உணர்வைத் தலைப்பட்டு அதனாற் கருவிகளின் வாதனை பற்றறக் கழிதலும், அக்கழிவான் வியாபக உணர்வின்கண்ணும் தன்னை நோக்காது தனக்கு முதலாகிய சிவத்தையே நோக்கி அதன்கண் அடங்கிநிற்றலும் உடையவரே சிவமாந் தன்மைப் பெருவாழ்வெய்தினோராவர். அதனாற் கருவிகளாற் றொடக்குண்பார் மேற்கூறியவாற்றான் அவற்றினீங்குதல் வேண்டும் எ-து.

---

59. He doth not confuse all that is not he to be himself,
He is not affected by Maya that hath become all,
He is not touched with the thought that he hathb ecome all,
He hath his being in the Lord : such alone liveth really.

[1] சிவப்பிர, சூ, 10, பா, 6.

இதனகலம்:— இறுதியிற் றந்துரைத்தன குறிப்பெச்சம். தானல்லாத என்புழி ஈற்று அகரந் தொகுத்தலாயிற்று. அதனுள் என்புழி அது கருவிகளின் வாதனையென்னும் பொருட்டாய் நின்றது. ஈசன் என்பதனை "ஆயினவனும்" என்பதனோடுங் கூட்டுக.

---

தேகநாம் என்றென்று செப்புவீர் ஈதில்வரும்
போகநாம் என்று புலம்புவீர்—நோக
வருந்துவீர் தீவினையின் மாறாத இன்பம்
பொருந்துவீர் எப்படிநீர் போய். (சுo)

இதன் பொழிப்பு:— தூலமுஞ் சூக்குமமுமாய வுடம்புகளையே நாம் என்று மயங்கி அதனிற்றொடக்குண்பார், அதனான் வினைப்பயன்களையே தமவாகக்கொண்டு திரிபெய்தலும், அத்திரிபுகளான் மேலும் வினையை யீட்டிப் பிறப்பின்கட்பட்டுத் துன்புறுதலுமுடையராவர் ஆதலின் அவர்க்குநீங்காத பேரின்பநிலையை யெய்தும் வாயிலில்லை; அதனான் அங்ஙனமுள்ள கருவிகளினின்று மேற்கூறியவாற்றால் நீங்குதல் ஒருதலையாகச்செய்யற்பாற்று எ-து.

இதனகலம்:— ஈதில்வருமென்றதனை லகரவொற்று நீக்கி வெண்சீராக்குக. திரிபென்றது விருப்பு வெறுப்புக்களை. போகநாமென்புழி நமது என்பதனை நாமெனவுபசரித்தார், ஒன்றிநின்று அருந்துதல்பற்றி. "தீவினையின் வருந்துவீர்" எனவும், "நீர் எப்படிப்போய் மாறாதவின்பம் பொருந்துவீர்" எனவும் மாறிக்கூட்டுக. தீவினையின் என்புழி இன் ஏதுப் பொருட்டு. இது மேலை வெண்பாவிற் கூறியதனை எதிர்மறை முகத்தாற் கூறி வலியுறுத்ததென்க.

---

60. Ye that say that your bodies are yourselves,
Ye that lament that experience therein are yourselves,
Ye that suffer pain because of wicked deeds,
How would Ye go and unite with changeless joy ?

தன்னை இழந்திடத்தே தானே சுகவடிவாய்
இன்னபடி என்றறியா எங்கோனுட்—பின்னமற
நின்றநிலை தானுந் தெரியாதே நின்றவர்கட்
கன்றே பிறப்பறுக்க லாம். (சுக)

இதன் பொழிப்பு:— யாவரானும் இன்னநிலையினன் என்று அளவிட்டறியவாராத முதல்வன், தற்போதம் நீங்கியவிடத்து அவருள்ளத்தின்கண் தானே இன்பவடிவாய் வேறற விளங்கிநிற்கும் நிலையைத் தானுந் தற்போதத்தாற் காணாது நின்றவர்கட்கன்றே பிறப்பையறுத்தல் கூடும்! அங்ஙனமாகத் தற்போதத்தால் உலகினைக் காணலுறுவார்க்கு யாங்ஙனம்பிறப்பறுதல் கூடும்? எ-து.

இதனகலம்:— எனவே, தற்போதஞ் சீவியாது நிற்றல்வேண்டும் என்பதாம். ஈற்றிற் றந்துரைத்தன குறிப்பெச்சம். இழந்திடத்தே என் புழிப் பெயரெச்சத்தகரந் தொகுத்தலாயிற்று. தானென்பது கட்டுரைச் சுவைக்கண் வந்தது.

---

உன்னுதே பற்ரு துரையாதே யொன்றியதி
னின்னுமம் இல்லை நிகழாதே—பன்னுட்
பரையிறந்து நிற்கும் பயனணைந்தார் நெஞ்சில்
திரையிறந்து நிற்கும் சிவம். (சுஉ)

---

61. Those who lose themselves and become the form of joy,
Who stand united, with not a mark to make them out,
With my Sovereign whose nature defieth definition,
Who perceive not the state wherein they do stand,
Such, such alone can sever the bonds of birth.

62. In whatever thou standest united
Without thinking, without grasping, without speaking aught
Thy name, thy self of name and form and act
Shall not be found.
In the hearts of those that have realised
The Benefit beyond the urging Para shakti
Sivam will stand with the screen riven through.

**இதன் பொழிப்பு:—** மனமொழிமெய்களின் தொழிற்பாடுகளாகிய முயற்சிகளைத் தமவாகக்கொண்டு முயறலும், அம் முயற்சியால் விளையும் நலந்தீங்குகளைத் தமவாகக்கொண்டு அழுந்துதலும் இல்லாது அவை எல்லாம் முதல்வன் றிருவருளுடையனவேயாதலை உணர்ந்து நிற்றலாகிய அருள் நிலையையுங் கடந்துநின்றாரது அறிவின்கண்ணே சிவம் தடையின்றி விளங்காநிற்கும் எ-து.

**இதனகலம்:—** எனவே, முதற்கண் அவ்வருணிலையில்நிற்றல் அதற்குபாயமாமென்றவாறு. உன்னுமை முதலியன தற்போதத்தாற் செய்யாமை யென்னும் பொருள. பற்றுதலென்றது செய்தலை. பற்றுதென் புழியுந் தேற்றேகாரம் வருவித்து அதனை உரையாதே யென்பதன் பின்னுகவைத்துரைக்க. ஒன்றியதென்பது தம்மாட்டுவந்து பொருந்தியது என வினைப்பெயர். பொருந்துவன தாம் பலவாயினும் சாதிபற்றி ஒன்றிய தென்றார். இல்லையென்புழி ஆகவென்பது வருவிக்க. நிகழ்தலென்றது அழுந்துதலை. பரையென்றது அருளென்னுந் துணையாய் நின்றது. இறந்துநிற்றலையே பயனென்றாராகலின் நிற்கும் பயனென்புழி நிற்கும் என்றது வினைப்பெயர்கொண்டதாம்; [1]"நின்முகங்காணு மருந்தினேன்" என்புழிப்போல. அறிவை ஈண்டு நெஞ்சென்றார், சிந்தையைச் சீவன் என்றுஞ் சீவனைச் சிந்தையென்றுங் கூறுமுறைமைபற்றி.

மனமுதலிய கருவிகளின் தொழிற்பாடுகளெல்லாம் முதல்வனுடையனவேயாதலை,

[2] உலகுடல் கரணங் காலம் உறுபலம் நியதி செய்தி
பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தானல்
நிலவிடா இவைதாம் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா அறிவ னுணை அணைத்திடும் அருளி னலே.

என்பதனனறிக.

*அருளறிந்து தானும் அறிவறிந்தே ஆங்குட்*
*பொருளறிந்து தானடங்கிப் போத—இருளகல*
*விம்மா திருந்து விகற்பமற ஒன்றாகிச்*
*சும்மா இருக்கை சுகம்.* (சுரு)

இதன் பொழிப்பு:— *முன்னர்த் திருவருளை யறிதல், பின் அவ் வருளே தானாய் நிற்குமுறைமை யறிதல், அதன்பின் அவ்வருட்கு உள்ளீடாகிய சிவத்தையறிதல், பின் அதன்கணடங்கித் தற்போதமாகிய மயக்கம் நீங்குமாறு பதைப்பற நிற்றல், அதன்பின்னர்த் தானது வென்னும் வேற்றுமையின்றி ஒன்றுபட்டுச் செயலறநிற்றல்; இவை முறையானே வாய்க்கப்பெற்றவழியே பேரின்பநிலை வாய்த்ததாகும் எ-து.*

இதனகலம்:— *எனவே, அஃது இயல்பான் விரைவின் வாய்க்கப் பெறாதார் அந்நிலை யுணர்ந்து அவ்வாற்றான் முயல்வராயின் அஃது அவர்க்கு அப் பயனை எய்துவிக்குமென்றவாறு. சுகத்திற்கு ஏதுவாம் நிலையைச் சுகமென்று உபசரித்தார்.*

---

53. Having realised the grace,
Having realised the intelligence that is oneself,
Having realised the truth abiding therein,
Having subdued the self,
With the dark cognisance of self dispelled,
With conceit gone, with distinction lost,
Remaining unified,
To rest in peace is Joy supreme.

செறியுந் தனுவாதி சேர்ந்தறிந்து நின்ற
அறிவை அறிவால் அறிந்தே—அறிவிழந்து
நின்றால் சுகானந்த நீடு நிலைவேறு
சென்றால் சுகங்கிடையா தே. (கூச)

இதன் பொழிப்பு:— கருவிகரணங்களைப் பற்றி நின்று அது வதுவாயழுந்தியறிந்து வந்த ஆன்மவறிவின் தன்மையை முதல்வனது திருவடி ஞானத்தால் அறியுமாற்றால் தற்போத நீங்கியவழியே சிவாநுபவம் பெருகும்; அவ்வாறன்றி அத் திருவடிஞானத்தை மறந்து தற்போதத்தால் கருவிகரணங்களிற் சென்றவழி அவ்வநுபவங் கூடாது எ-து.

இதனகலம்:— "தனுவாதி சேர்ந்தறிந்துநின்ற அறிவு" எனவே ஆன்மஅறிவென்பது பெறப்பட்டது. ஆண்டு அறிவென்றது ஆகுபெயர். அறிந்தென்பது அறிதலானெனக் காரணப்பொருட்டு. அறிவிழந்தென்புழி அவ்வறிவெனச் சுட்டு வருவிக்க. வலியுறுத்தற்பொருட்டு எதிர்மறுத்துங் கூறினர்.

ஆன்ம அறிவின்றன்மை பெத்தம் முத்தியென்னும் இரண்டிடத்தும் முதல்வனது உபகாரமின்றி உயிர்கட்கமைவதொன்றில்லை என்று அறிந்தவழிப் பொதுவகையானும், அம் முதல்வன் திருவடிவியாபகத்துள் அடங்கி நின்றவழி அநுபவத்தானும் அறியப்படுதலின் "அறிவை அறிவாலறிந்து" எனவும், அவ்வாறறிந்தவழித் தற்போதம் நீங்குதலின், "அறிவிழந்து" எனவுங் கூறினர். ஆன்ம சொரூபம் முதல்வன்றிருவடி ஞானத்தானே யுணரற்பாற் றென்பதனை, [1]"அரன் – தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்" எனவும், [2]"தன்னாலே தனையறிந்தாற் –

64. Having perceived by the Supreme Intelligence
That intelligence which stood perceiving,
Joined to gross body and other parts,
If one doth stand with finite perception lost;
The blissful joy shall stand with one forever:
But if one doth go other ways
Verily no joy shall one find.

[1] சிவஞானபோ, சூ, 9, அதி, 1, பா, 1. [2] சிவப்பிர, சூ, 8, பா, 2,

றன்னையுந் தானே காணும் தானதுவாகி நின்றே'' எனவும், [1]'' அதில் அறிவடங்கி-மன்னிட வியாபியாய வான்பயன் தோன்றும் அன்றே'' எனவும் அருளியவாற்றானறிக.

இது, தற்போதநீங்கி யருணிலையில் நிற்குமாற்றினை யுணர்த்திய வாறு. இருவகையுமடங்க, ''அறிவை அறிவாலறிந்தே'' என்றாராயினும் உபாயநிலையாகலின் ஈண்டுப் பொதுவகையானுணர்தலையே கொள்க.

---

தத்துவத்தை விட்டருளிற் றன்கலந்து தன்னிழப்பின்
மெத்துஞ் சுகத்தின் மிகவழுந்திச்—சுத்தமாய்
ஒன்றாகி நின்ற வுணர்வும் ஒழிந்தக்கால்
அன்றே சிவபோக மாம். (சுரு)

இதன் பொழிப்பு:— தத்துவங்களின் நீங்கி அருணிலையைத் தலைப்பட்டு, தற்போதமிழந்தவிடத்தே சுகோதயமாம். அச் சுகத்தின்கண் அழுந்தி அச் சுகமேயாய் நின்றவழியே சிவபோகமெனப்படும் பரபோக நுகர்ச்சியுளதாம் எ-து.

இதனகலம்:— எனவே, அறிவை அறிவாலறிந்து அறிவிழந்து நிற்றல் அதற்கு உபாயமாமென்பதூஉம், அவ்வுபாயத்தினிற்கவே அது வாயிலாக அச்சிவபோகநுகர்ச்சி கூடுமென்பதூஉங் கூறியவாறாயிற்று. இத்துணையும் உபாயமே கூறப்பட்டது.

---

65. Leaving the tatvas, mingling in the grace,
Losing the self and sinking well in joy
That then doth spring in plenty,
Becoming purified, standing unified,
If one loseth perception of that state of union,
Then, then alone shall be Sivabhogam.

[1] சிவப்பிர, சூ, 9, பா, 3.

சுட்டறிவு கெட்ட சுகாதீத உண்மையிலே
விட்டகலா தென்றும் விரவுவோர்—இட்டமுடன்
யோக சமாதிகளுங் உட்புறம்பாம் பூசைகளும்
ஆக நினையார் அவர். (௬௬)

இதன்பொழிப்பு:— தற்போத நீங்கிய சிவபோக நுகர்ச்சியில் நீங்காதுநிற்கும் நிலையினையுடையார் யோகங் கிரியை சரியையென்னும் இவற்றையும் நினையார்; அந்நிலையினராயே நிற்பர் எ-து.

எனவே, அஃதில்லாதார் அவற்றைச் செய்க என்றவாறு.

இதனகலம்:— சுட்டறிவென்பது ஆன்மவறிவென்னுந் துணையாய்த் தற்போதத்தைக் குறித்துநின்றது. சரியை கிரியா யோகங்கள் தாமும் தற்போதஞ் சீவித்து நின்றவழியே நிகழ்வனவாகலின், தற்போதமிழந்து சிவபோகத்தழுந்தினார்க்கு அஃதெழாமையான், அவர் அவற்றை நினைக்குமாறில்லையென்க. இதனானே, அவர்க்கது குற்றமாகாமையுமறிக. இனி, அவர்க்கு யாதானுமோராற்றால் தற்போதமெழுந்து உலகங் காட்சிப் படவருமாயின், அவ்வழி அவற்றை இயற்றுதலும் அவர்க்கியல்பென்க. எனவே, அவர்க்கு அவ்வாசாரங்களெல்லாந் தாமே நீங்குவனவன்றித் தாம் அவற்றை வலிதின் நீக்குவாரல்லரென்பதுணர்க. இதனை,

[1] ஞாலமதின் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லைச்
சீலமொடு தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லைத் தியானமிலைச் சித்தமல மில்லைக்
கோலமிலை புலனில்லைக் கரண மில்லைக்
குணமில்லைக் குறியில்லைக் குலமு மில்லைப்
பாலருடன் உன்மத்தர் பசாசர்குணம் மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்.

எனவும்,

66. Those that have lost perception of their senses,
And have inseparably interfused for ever
With the Truth beyond bliss
Never shall they wish for yogic trance,
Outward adoration or worship within.

[1] சித்தி, சூ, 8, பா, 32.

[1] ஞால நீதியும் நான்மறை நீதியும்
பாலருன் மத்தர் பசாசரில் எனவும்
உறங்கி னோன்கை வெறும்பாக் கெனவும்
தானே தவிரா தாறுற் புரியா
தொழிந்திடின் நிரயத் தழுந்துதல் திடமே.

எனவுங் கூறியவாற்றானறிக.

[2] இருகைதான் குவிக்கவெனின்
நானும் என்னுள நிற்றிநீ
நான் கும்பிடும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யன் முறையோ.

என்றதும் தற்போதஞ் சீவித்தலை நோக்கி என்க.

இட்டமென்றது தற்போதவெழுச்சியை. ஆகவென்பது ஆதலை என்னும் பொருட்டு. அவரென்பது அத் தன்மையரென்னும் வினைக் குறிப்பாய் ஆக்கம் எஞ்சிநின்றது. ஆண்டுப் பிரிநிலையேகாரந் தொக்கு நின்றது.

இது, நிட்டை கைவரப்பெற்றோரியல்பு கூறுமுகத்தான் அது பெறாதார்க்குப் பிறிதுமோருபாயம் கூறியவாறு.

---

நின்னறிவில் யானொளித்து நீயாகி நின்றதுபோல்
என்னறிவில் நீயொளித்தே யானாகி—எந்நாளும்
நிற்கவல்லை யாமாகில் நின்சனனம் போக்குதற்குக்
கற்கவல்ல தேதுமில்லை காண். (சுஎ)

---

67. Just as I hid Myself in thine intelligence
And stood as thou,
If thou canst hide thyself in Mine intelligence
And stand as I, always,
Lo, there is nothing more to learn
To end thy round of births.

[1] சங்கற்ப, மாயாவாதி நிரா, வரி, 232 - 236. [2] தாயுமா, கருணாகரக், பா, 6.

இதன் பொழிப்பு:— பெத்தகாலத்து நினதறிவின்கண் யாம் தோன்றாது நீயேயாய் நின்றாற்போல, இம் முத்திக்காலத்து நமதறிவின்கண் நீ தோன்றாது நாமேயாய் நிற்கவல்லையேல் நினது பிறப்பையறுத்தற்கு வேறு உபாயம் தேடவேண்டா எ-து.

இதனகலம்:— இது, ஞானமேவப் பெறாதாற்கு அது மேவுதற் பொருட்டு விதிக்கப்படும் சரியை கிரியா யோகங்களை, ஞானம் கைவரப் பெற்றாற்கு விதித்தல் ஏலாதுபோலுமென்றார்க்குச் செயலாறென்றாயினும் தற்போதம் முனைத்துச் செய்தலும், அருள்வழிநின்று செய்தலுமாகிய கருத்தான் வேறுபாடுடைமையின் அவர் செயலோடு இவர் செயலிடை வேற்றுமை பெரிதாதலை விளக்கி அவை அவர்க்குபாயமாதல் தெளிவித்தவாறு. அருள்வழிநின்று செய்தல், அறம் பாவங்கட்கு நாம் என்கடவேம் என்று செய்தல். [1]"அறிவதொரு குறி குருவின் அருளினலறிந்து, மன்னுசிவன் றனையடைந்து" எனச் சிவஞானசித்தியுட் கூறுதலின் ஒரு குறியின்கண் வைத்துணர்தலும் ஓர் உபாயமாதலறிக.

யோக சமாதிகளும் உட்புறம்பாம் பூசைகளுமாகியவற்றுள் ஈண்டு ஏகதேசக்காட்சியின்றி முதல்வனது வியாபகத்தை யுணர்தற் கேற்குமாற்றாற் செய்வனவற்றையே கொள்க. ஈண்டைக்கு உபாயமாகற் பாலதுவேயாகலின். மேற்சுட்டறிவு கெட்ட சுகாதீத வுண்மையென்றுடம்பொடு புணர்த்ததும் அதுபற்றி. "எல்லா மீசனிடத்திலும் ஈசனெல்லா இடத்தினிலுநின்ற அந்நிலைமை அறிந்து" என்றருளியவாறு காண்க. ஆம் அசை. காண் முன்னிலையசை.

இது மேலதனைத் தெளிவித்தவாறு. இத்துணையும் உபாயமே கூறப்பட்டது.

இன்பசுகத் துள்ளே இருக்கலாம் எப்போதும்
துன்பவினை யுன்னைத் தொடராது—வன்பா
மருட்டேக மாயடங்கி மாயாமல் நெஞ்சே
அருட்டேக மாயடங்கு வாய். (சுஅ)

இதன் பொழிப்பு:— மயக்கத்தைச்செய்யுங் கருவிகளிற் றொடக்குண்டல் பிறப்பில் வீழ்ந்து கெடுதற்கேதுவாம். ஆதலான் அஃதொழிந்து அருணிலையில் நிற்பாயாகின் எஞ்ஞான்றும் நீங்காத பேரின்பத்தில் திளைத்திருத்தல்கூடும். துன்பத்திற்கேதுவாய வினையும் உன்னைப் பற்றமாட்டாது எ-து.

இநனகலம்:— மயக்கத்தைச் செய்தல் ஆன்ம சொரூபத்தை விளக்காது தற்போதத்தை நிகழ்வித்தல். வினைகள் பலவாயினும் சாதி பற்றித் "தொடராது" என்றார்.

---

தேக மறந்து திருவருளாய் நின்றுசிவ
போகம் விளையப் புணர்நெஞ்சே—நோக
வருந்தாமற் றீவினையின் வாடாமற் றுன்பம்
அருந்தாமல் நீபிறவா மல். (சுகூ)

68. Thou canst dwell in blissful joy;
Never shall painful karma pursue thee,—only
Perish not in identity with the body, the seat of hardy confusion,
Calmly abide, my heart, embodied in grace.

69. Forgetting the body, standing as holy grace,
Commune oh! my heart, to grow Sivabhoga,
That thou may be without suffering pain,
Without withering in wicked deeds,
Without eating the fruits of pain, without taking birth again.

இதன்பொழிப்பு:— நீ இறந்தும் பிறந்தும் வருந்தாமல், கொடிய வினைப்பயன்களால் தாக்குண்ணுமல், துன்பங்களை அடையாமல், எக்காலத்தும் பிறவாமல் இருக்கவும், இன்பமயமான சிவபோகம் நினக்கு மேன்மேல் விளையவும் நீ தூலமுஞ் சூக்குமமுமாயவுடம்புகளை மறந்து முதல்வன் திருவருளை மறவாது நின்று அம் முதல்வனை அணைந்து நிற்பாயாக எ-து.

இதனகலம்:— பிறவாமல் சிவபோகம்விளைய இதுசெய்க எனவே, திருவருளை மறந்து தேகத்தொடுபுணர்ந்து மாறிநிற்பார்க்குப் பிறவியும் வினைப்போகமுமே உளவாமென்பது பெறப்படும். பிறவாமலென்புழி இருத்தற்கென நின்ற சொல்லெச்சம் வருவித்து முடிக்க. சிவபோகம் என்றதனுற் புணர்தல் சிவத்தையென்பது தானேவிளங்கிக் கிடந்தது.

இவை இரண்டுவெண்பாக்களானும் கரணங்களிற் சேறலினது இழிபும், திருவருள்நிலையில் நிற்றலின் சிறப்பும் உணர்த்தியவாறு.

---

பூதாதி பாசமன்றோ பூரணமு னந்தமன்றோ
பேதமற நம்முட் பிரானன்றோ—வாதனைகள்
விட்டாற் சுகமன்றோ என்றுணர்வில் வேண்டுவதுங்
கெட்டாற் பிறப்புங் கெடும். (எ0)

இதன் பொழிப்பு:— பூதங்கள் முதலிய தத்துவங்கள் துன்பத்திற் கேதுவாகிய தளைகளென்றும், முதல்வனொருவனே இன்பமயமாகிய வீடுபேறென்றும், அவன் நம்மில் வேறுதலின்றி உடனாய் நின்ற தலைவன்

---

70. Are not the elements and the like bonds?
Is not perfect joy the end?
Does not the Lord dwell in us without distinction?
Is not it joy if experience is left behind?—
If even such hankering queries do not rise in our thoughts,
Then there shall be an end of birth.

என்றும், மும்மலங்கள் வாதனையாளவினவாகவும் நில்லாது, பற்றறக் கழிந்தவழியே நிரம்பிய இன்பமுளதாமென்றும் அறிகின்ற அவ் வறிதனும் நீங்கியவழியே பிறப்பற்றநிலை எய்தியதாம் எ-து.

இதனகலம்:— எனவே, அங்ஙனமறிதல் அந்நிலை எய்துதற்கு உபாயமாதலன்றி அதுதானே பயனன்றென்றவாறு. அன்றேயென்பன அவ்வத் தொடர்மொழிப் பொருளைத் தேற்றஞ் செய்தலிற் பால் வழுவுந் திணைவழுவுமாகாமையுணர்க. பூரணன் ஆனந்தமென்பது [1]"இல்லவள் மாண்பானல்" என்புழிப்போலக் குணி குணமாய்நின்றது. இஃது ஈண்டுக் கூறிய வுபாயங்களெல்லாம், தம்பயனைக் கொடுத்து நீங்குமாற்றினை உணர்த்தியவாறு.

---

அழுந்தாதே பாசத் தனுதினமும் ஐயோ
விழுந்தால் எழுந்திருக்க வேண்டும்---செழும்பாகை
மீறித் தருமிரத வீட்டின்ப மாமலைமேல்
ஏறித் திரும்பலா மே. (எக)

இதன்பொழிப்பு:— கருவிகரணங்களைக் கொண்டு நுகரப்படும் இன்பங்களின் மேம்பட்ட அளவிலா இன்பத்தைத்தரும் முத்திநிலையாகிய மலையிற் கால்வைத்தேறிய பின்னும் அதனது உச்சியிற் சென்றிருத்தல் ஒழிந்து, பாசமாகிய பள்ளத்தை நோக்கியிழியலாகுமோ! அவ்வாறிழிந்து அப் பள்ளத்தில் வீழ்ந்தால் மீட்டும் எழுதலரிதாகும். ஆதலின், அந்தோ! அப் பாசங்களில் அழுந்தாதொழிக எ-து.

இதனகலம்:— எழுந்திருத்தல் என்புழி இருவென்பது துணை வினையாய் ஒரு சொற்றன்மைப்பட்டது. ஏகாரம் வினைப்பொருட்டாய் ஆகாதென்பதுபட நின்றது.

---

71. Sink not in bonds, alas, daily;
If thou fallest, thou willst have to rise.
Can one turn back having climbed up
The great mount of heavenly bliss,
Sweeter by far than rich syrup?

[1] குறள் பா, 53.

என்றுஞ் சனனத் திடர்க்கடலி லேழுழ்கிப்
பொன்றுமன மேயுனக்கோர் புத்திகேள்—நன்று
தனிச்சங்கஞ் சேராமல் தற்பரனைச் சேரில்
இனிச்சங்கஞ் சேரா திரு. (எஉ)

இதன் பொழிப்பு:— எஞ்ஞான்றும் பிறவி என்னும் துன்ப மயமான கடலிலே முழுகிக் கெடுகின்ற மனமே! உனக்கோர் அறிவுரை கூறுவன் கேட்பாயாக; நீ பிறவியினீங்கி முதல்வனை அடையவேண்டுவை யாயின் இனித் தத்துவக்கூட்டங்களில் சேராதிரு; அஃது உனக்கு நன்மையாம் எ-து.

இதனகலம்:— நன்றென்பதனை ஈற்றின்வைத்துரைக்க. நன்று தனித்து என்றியைத்து அறவே நீங்கியென்றுரைத்தலு மொன்று. தனித்தல் நீங்குதற்பொருட்டு. தனித்து தனிச்சென மருவிற்று. சங்கமென்றது ஈண்டுத் தத்துவக்கூட்டத்தை. இது திரிபென்னுஞ் சொல்லணி. இனித்து அங்கஞ் சேராதிரு எனக் கண்ணழித்து உடம்பை விரும்பி அதனல் தொடக்குண்ணுதிரு என்றுரைப்பினுமமையும். இது கருவிகளிற் றொடக்குண்டலாகாது என்பதனை வலியுறுத்தவாறு. மேல் பாசமென்றதும் அவற்றை.

இவை இரண்டு வெண்பாக்களானும் வீடுபேற்றின் இன்பமும் பிறப்பின் துன்பமுங்கூறிப் பிறவியில் மீளலாகாதென்பதனை விளக்குமுகத்தான் அவ்வுபாயத்தது இன்றியமையாமை கூறப்பட்டது.

"அறிவுநீ என்ன" என்பதுமுதல் இதுகாறுமுள்ள பதினாறு வெண்பாக்களானும், நிட்டையில் நிற்கப்பெறாது உலகின்கண் மீளுவாறு வார்க்கு அதனினீங்குதற்கு உபாயங் கூறப்பட்டது. இதனை உபாயநிலை என்பர்.

---

72. Listen, O mind, that perisheth sinking
In the troublous sea of birth forever;
If thou wouldst join the Supreme One
Without sojourning desolate in thy body,
Mix thou not in worldly gatherings.

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மாறல்—அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென் நெஞ்சமே
எல்லாஞ் சிவன்செயலென் றெண். (எங)

இதுமுதல் முப்பத்துநான்கு வெண்பாக்களால் முதல்வன் செயலின்றி ஆன்மாக்கட்குச் செயலின்றென்பதனை விளக்குகின்றார். இது நிட்டை கைவரப்பெற்ற சீவன்முத்தர்க்குப் பிராரத்தவினை தாக்குதலும் ஆகாமியம் ஏறுதலுமின்மைக்கு உபாயமாதலும், அது கைவரப்பெறாது ஏகதேசக்காட்சிவாதனையாற் பிரபஞ்சக்காட்சி நீங்காது அலமருவார்க்கு அவ்வாதனை நீங்கி வியாபகவுணர்வு கைவரப்பெறுதற்கு உபாயமாதலும், மந்ததரமும் மந்தமும் தீவிரமும் ஆகிய சத்திநிபாதமுடையார்க்கு அச் சத்திநிபாதம் முறுகி வளர்ந்து தீவிரதரமாய் நிகழ்தற்குபாயமாதலும், உலகர்க்கு முதல்வனது அருணிலையைப் பொதுவகையானுணர்ந்து சிவ புண்ணியங்களின் மனவெழுச்சி சேறற்குபாயமாதலும் உடைமைபற்றி மேற்கூறியவற்றது ஒழிபாக ஈண்டு விரித்துக்கூறப்படுகின்றதென்க.

**இதன் பொழிப்பு:—** யாவர்க்கும் அவரவர் வினைக்கீடாக முன்னே அமைந்து கிடக்கின்ற நலந் தீங்குகளை, அவற்றை அவர்க்குச் செய்தற் குரியாரைக் கொண்டு இறைவனே தனது திருவருளாற் செய்வித்தலின் யாவும் அவ்விறைவன் செயலென்பதே உண்மையாகலின், அச் செயல் கட்குத் துணையாய் முன்னிற்பாருட் சிலரை உறவினரென்றும், சிலரைப் பகைவரென்றுங் கருதி அவர்பால் உவத்தலுங் காய்தலுஞ் செய்தல் பெரியதோர் அறியாமையுடைத்து எ-து.

**இதனகலம்:—** முன்னிலைப் பொருள்களை நோக்காது அவற் றிற்கு முதலாகிய திருவருளை நோக்கினார்க்கு எல்லாச் செயலும் ஒரு செயலேயாய்த் தோன்றுமென்பது,

1 * * எந்தைநின்
திருவருள் நாட்டங் கருணையிற் பெறலும்

---

73. When it is the Lord that doeth all the deeds
Through each as each deserves,
Why judgest then, my heart, the men as good or bad?
Consider all the deeds to be Siva's own.

[1] திருக்கழுமல மும்மணிக், பா, 10,

யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரும் நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற எழுதிய
சிற்ப விகற்பம் எல்லாம் ஒன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே.

என்பதனுன் உணரப்படும். இன்னும்,

[1] அவனன்றி ஓரணுவும் அசையா தெனும்பெரிய
ஆப்தர்மொழி ஒன்றுகண்டால்
அறிவாவ தேதுசில அறியாமை யேதிவை
அறிந்தார்கள் அறியார்கள்யார்?
மவுனமொ டிருந்ததார்? என்போல் உடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்?
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவ்ய மெவ்விடம்
பூதபே தங்களெவிடம்
பொய்மெய்இத மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறியர் எவர்பெரியர் எவருறவர் எவர்பகைஞர்
யாதும்உனை யன்றிஉண்டோ
இகபர மிரண்டிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

என்று இவர்வழியடியார் அருளியதுங்காண்க. நல்லார் பொல்லார் என்பன ஈண்டு உறவினர் பகைவர் என்னும் பொருள.

இது, பிறரால் தனக்குவரும் நன்மை தீமைகள் அவர் செயல் ஆகாமை விளக்கியவாறு.

எங்கே நடத்துமோ எங்கே கிடத்துமோ
எங்கே இருத்துமோ என்றறியேன் —கங்கைமதி
சூடினான் தில்லையிலே தொந்தொமெனா நின்றுநடம்
ஆடினான் எங்கோன் அருள். (எச)

இதன் பொழிப்பு:— எனது நடத்தல் கிடத்தல் இருத்தல் முதலிய தொழில்கள்தாமும் என் இச்சைவழியன்றி இறைவன் திருவருள்வழி நிகழுமாயின் யான் பிறர்க்கு எங்ஙனம் நன்மை தீமைகளைச் செய்தல் கூடும்! எ-து.

இதனகலம்:— எங்கோனருள் எங்கே நடத்துமோ என்க. அறியேன் என்புழி அங்ஙனமானபொழுது பிறர்க்கு நான் யாதுசெய்தல் கூடுமென்பது குறிப்பெச்சமாய் நிற்றலின் இவ்வாறுரைக்கப்பட்டது.

இது, தன்னாற் பிறர்க்கு உளவாகும் நன்மை தீமைகளுந் தன் செயலாகாமை விளக்கியவாறு.

---

போகம் புவனம் பொருந்துமிடம் எங்கெங்கும்
தேகங் கரணந் திரியுமே—யாகிலது
தன்னைநீ யென்று தவியாதே நெஞ்சமே
நின்னையே கண்டருளில் நில். (எரு)

---

74. Whither it will lead me, whither it will lay me down,
Whither it will place me, I do not know
The Grace of Him, my Sovereign
Who weareth the Ganga and the Moon
Who danceth in Tillai with rhythmic jingle.

75. Wherever worlds and enjoyment be
There will the body and karanas roam ;
It being so, take them not to be thyself and suffer
O heart, perceive thyself and stand in grace.

**இதன் பொழிப்பு:—** எங்கணும் வியாபகமாய ஆன்மாவிற்கு அது நுகர்தற்குரிய போகமமைந்த புவனம் யாண்டுளது ஆண்டெல்லாம் அதனை நுகர்தற்குக் கருவியாகிய தனுவும் கரணமும் முதல்வன் திருவருளால் சுழன்று வருமென்பதே உண்மையாகலின் ஏகதேசப்பொருள்களாகிய அத் தனுகரணங்களையே நீயெனவும், அதனால் நீதானே அப் புவனங்களில் எல்லாம் போக்குவரவு புரிகின்றாயெனவும் மயங்குதலை யொழிந்து நினது வியாபகத் தன்மையையும், அத் தன்மையை மறைத்து நினக்கு அணுத்தன்மையைச் செய்த மலத்தை நீக்குதற்கு அதனைத் தந்த திருவருளின் செயலையும் அறிந்து அவ்வறிவானே நினக்குச் செயலற நிற்பாயாக எ-து.

**இதனகலம்:—** அது தன்னை என்பது பன்மை யொருமை மயக்கம். திருவருளால் என்பது அதிகாரத்தால் கொள்ளக் கிடந்தது. ஆன்மாவினது வியாபகம் கருவிகரணங்களின்றி அறிவு நிகழாமையின் அவற்றைத் தானே எடுத்துக்கொள்ளமாட்டாமை, அத்தனுகரணங்கள் முதலியவாற்றால் மலம் சிறிது நீங்கப்பெறுதல் முதலிய தன்மைகளெல்லா மடங்க "நின்னையே கண்டு" என்றாராகலின் இவ்வாறுரைக்கப்பட்டது. நின்னென்பது ஆகுபெயர். ஆன்மா வியாபகப்பொருளாதல் மேலே விளக்கப்பட்டது.

இது, நடத்தல்முதலிய செயல்கள் தாமுந் தன்செயல் அல்லவென மேற்கூறியது உண்மையாதலை விளக்கியவாறு.

---

ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும்
ஏதேது சிந்தித் திருந்திடினும்—மாதேவன்
காட்டிடுவ தானவருட் கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட. (எசு)

76. Whatever thou doest, whatever thou speakest,
Whatever thou thinkest about,
Never wander from the eye of grace
Which the great God doth show;
Fix that as thine aim and proceed.

**இதன் பொழிப்பு:—** நடத்தல் முதலியனவும் நின்செயல் அல்ல என்பதுணர்ந்தாயாயின் காயத்தான் ஒன்றைச் செய்தலும், வாக்கான் ஒன்றைச் சொல்லுதலும், மனத்தான் ஒன்றை நினைத்தலுமாகிய செயல்களுள் யாதொன்றைச் செய்யினும் முதல்வன் திருவருள் ஆன்மா விற்குக் கண்போல நின்றறிவித்து வருதலாகிய அவ்வியல்பினை மறவாது அத்திருவருள்தானே கண்ணாக நடப்பாயாக எ-து.

**இதனகலம்:—** அஃது உணர்ந்தாயாயின் என்பது ஆற்றலாற் கொள்ளக்கிடந்தது. எனவே, அவ்வுணர்ச்சிக்குப்பயன் அங்ஙனம் நடத்தலாயிற்று. அறியாதுசெய்த குற்றங் கழுவப்படுவதன்றி அறிந்துசெய்த குற்றங் கழுவப்படாமையின், திருவருட் செயல்களையெல்லாந் தஞ் செயலெனக் கொண்டொழுகுவதாகிய பொய்யுங் களவும் நன்றிகோறலும் முதலாய குற்றங்கட்கிடனாகிய செயல் அதனை யுணராதாரினும் உணர்ந்தார்க்குப் பெரிதுந் தீர்திறனில்லாக் குற்றமாமென்றவாறு. [1]"காண்பானொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட – வீண்பாவம் எந்நாள் விடும்" என்பதனானும் அச்செயல் குற்றமுடைத்தாதலறிக. இதுபற்றியே உலகத்துள் ஒன்றனை ஈதலும் ஏற்றலுஞ் செய்யுங் காலத்து சிவார்ப்பணமெனக் கருதல்வேண்டுமென விதிக்குஞ் சைவநூல்கள் என்க. அருட்கண்என்றது உருவகம்.

இது, தனக்குச் செயலறவொழுகும் ஒழுக்கமே உண்மை நல்லொழுக்கமாம் என்பது உணர்த்தியவாறு.

---

எடுத்தவுடற் கேய்ந்தகன்மம் எப்போதும் ஊட்டும்
விடுத்துவிட்டோம் என்பர் விழலர்—விடுத்த
ததுவன்றே ஐந்துமலம் ஆறுாறும் நீத்த
இதுவன்றோ யாம்துறவென் பேம். (எஎ)

77. Karma proper to the body taken will always be fulfilled
"We have given up deeds," declare the vain.
Giving up all actions is no renunciation.
We call this renunciation: freedom
From malas five and tatvas thirty-six.

[1] திருவருட், உயிர்விளக், பா, 3.

**இதன் பொழிப்பு:—** மலம்நீங்கி ஞானம் பிரகாசித்த வழியும் உடம்புள்ள துணையும் அது முகந்துகொண்ட பிராரத்தவினை தன்பயனை விளையாதொழியாது; அது ஒழியுமென்பாருளராயின் அவர் அறியாதாரே யாவர்; அற்றேல், பிராரத்தவினை நீங்காதவழி வினைத்தளை அறாமையின் முத்தியென்பதற்கு விடுதலை என்பதுபொருளாகலின் உடம்புடையார் ஒருவரையும் முத்தரென்றல் அமையாது போலுமெனின்; அறியாது கடாயினாய்! சீவன் முத்தர்க்குப் பிராரத்தவினை நீங்குதல் நீ கூறுமாறு போல ஊட்டாதொழிதலாகாது வேறாகலானும், அப் பிராரத்தத்துக்கு முதலாகிய சஞ்சிதமும் அதற்கு முதலாகிய ஆகாமியமுமாகிய கன்மங்களோடே அவற்றுக்குப் பற்றுக்கோடாகிய மாயை மாயேயங்களும் எல்லாவற்றிற்கும் முதலாகிய ஆணவமும், அவற்றைத் தொழிற்படுத்துவதாய திரோதான சத்தியுமென்னும் பஞ்சமலங்களினும் நீங்கினமையானும் அவரை முத்தரென்றற் கிழுக்கென்னை? எ-து.

**இதனகலம்:—** அதுவன்றே என்புழி ஏகாரம் ஈற்றசை. அது வென்பது ஊட்டாதொழிதலைக் குறித்தது. வேறென்றது ஊட்டும்வழி உயிரூழய்த் தாக்காது உடலூழாய்க்கழிதலை. ஐந்து மலம் ஆறாறும் நீத்த என்பது ஐந்து மலங்களை நீக்குமாற்றான் ஆறாறு தத்துவங்களை நீக்கியவெனப் பொருள்தந்து நின்றது. துறவென்பது விடுதியென்னும் பொருட்டு.

இது, மலநீங்கிய சீவன்முத்தர்க்குப் பேரின்பநுகர்ச்சியன்றிப் பிறிதுசெயலின்மை யின்மையின் "ஏதேது செய்திடினும் ஏதேது பேசிடினும்" என்பது அவர்க்கேலாதுபோலும் என்னும் ஐயப்பாட்டினை நீக்கி அவர்க்கும் பிராரத்தவினைவுண்மையின் அவ்வினைவின்கண் இங்ஙனம் ஒழுகற்பாலரென விளக்கியவாறு.

எவ்வுயிருங் காக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ—வவ்விப்
பொருகுவது நெஞ்சே புழுங்குவதும் வேண்டாம்
வருகுவதுந் தானே வரும், (எஅ)

இதன் பொழிப்பு:— எல்லாவுயிர்களையும் இடர்நீக்கிக் காத்தற்குக் கருணைக்கடன் பூண்டுள்ள இறைவனொருவன் இருக்கும்பொழுது அவ்வுயிர்களு ளொருவராகிய எம்மையும் அவன் காவாதொழிவானல்லனாகலின் நம்மைக் காத்தல்வேண்டி நாம் அவன் செயலை நம்செயலாகக்கொண்டு பிறரை வெறுத்தல் முதலியன செய்து மனம் நொந்து வருந்துதல் வீண்செயலாகும். ஏனெனில், நமக்கு வேண்டற்பாலதாய நன்மையும் அவனருளால், நாம் வேண்டாதேவரும்; வெறுக்கற்பாலதாய தீமையும், நாம் வெறாதே நீங்கும் ஆகலான் எ-து.

இதனகலம்:— வவ்வுதல் ஈண்டுத் திருவருளின் செயலைத் தனதாகக்கோடல். பொருதல் ஈண்டுக் காய்தலின்மேற்று. வருகுவதும் என்னும் உம்மையாற் போவதுந் தானேபோமென்பது தழுவப்பட்டது.

இஃது, எல்லாஞ் சிவன்செயலென் றெண்ணுவார்க்கு யாதொரு முயற்சியின்கண்ணும் மனவெழுச்சி செல்லாமையின் அவர், தங் குடியினரையேயன்றித் தம்மையும் உண்டிமுதலியவற்றாற் காக்கமாட்டாது கடிதின் மாய்ந்தொழிவராலோ வென்னும் ஐயப்பாட்டினைநீக்கி, அனைத்துயிர்களையும் அவற்றிற்கு ஆவனசெய்து காப்பான் அருளுருவாகிய முதல்வனென்பது உண்மையாகாது உபசாரமாயினன்றே அவ்வையப்பாடுளதாவது; அவ்வாறன்றி அஃதுண்மையேயாகலின் இவ்வாறையுறுதல் என்னையோவென விடுத்தவாறு. [1]"தன்கடன் அடியேனையுந் தாங்குதல்—என்கடன் பணிசெய்து கிடப்பதே" என வற்புறுத்தருளியதூஉம் இங்ஙனம் ஐயுறாமைப் பொருட்டென்பதுணர்க.

---

78. Is there or not a Lord to protect all beings ?
Are we too not of them ?
Why covet and wrangle and worry ? O heart ?
Whatever must come, of itself will come.

[1] அப்பர், கடம்பூர், பா, 9.

முப்பதுஞ்சென் றால்விடியும் முப்பதுஞ்சென் றாலிருளும்
அப்படியே எதும் அறிநெஞ்சே—எப்பொழுதும்
ஆங்காலம் எவ்வினையும் ஆகும் அதுதொலைந்து
போங்காலம் எவ்வினையும் போம். (எகூ)

**இதன் பொழிப்பு:—** ஒளியையும் இருளையுந்தரும் பகலும் இரவும் தத்தங்காலவெல்லையின் மாறிமாறி வருதலல்லது உலகினர் விருப்பத்தின் வழி வருதலும் போதலும் இல்லாமைபோல, ஆக்கக் கேடுகளைத்தரும் நல்வினை தீவினைகளும் தத்தங் காலஎல்லையில் மாறிமாறி வருதலல்லது அவற்றை எய்துவோரது விருப்பத்தின்வழி வருதலும் போதலும் இல்லை எ-து.

**இதனகலம்:—** முப்பதென்பது நாழிகைமேல்நிற்றல் விடியும் இருளுமென்ற சொற்குறிப்பானினிது உணரப்படுதலின் இரண்டிடத்தும் முப்பதுமென்றொழிந்தார். பகல் இரவுகளின் எல்லை, இடத்தானுங் காலத்தானும் ஏற்றிழிவுடையவாயினும் தாம் இருந்ததேயத்துப்பொதுவழக்குப் பற்றி முப்பதுமென்றார், உவமைமாத்திரைக்கே கூறுகின்றாராகலின்.

இஃது, எல்லாஞ் சிவன்செயலே என்றெண்ணுதல் எம்மனோர்க் கியலுமாறில்லை யென்பார்க்கு, அஃதியலாதாயினும் எல்லாம் வினைப் பயனேயென்பது நன்னெறிக்கணொழுகுவார் எல்லார்க்கும் ஒப்பமுடிந் தமையின் அதனையேனும் மறத்தல் கூடாமையின், அவ்வழியும் உனக்குப் போந்ததொன்றில்லை யென்பது உணர்த்துமுகத்தான் எல்லாஞ் சிவன் செயலேஎன்று எண்ணுதலே நன்று என்பது உணர்த்தியவாறு.

---

79. It will be dawn when thirty naligais have passed;
It will be dark when thirty more have passed.
It is so with everything, know thou, my heart.
In propitious times all deeds will come to fruit,
In unpropitious times all deeds will come to naught.

ஆவலுற்றி டுஞ்சகலத் தாவதுவும் ஆங்கவரே
கேவலத்தின் மூழ்கிக் கிடப்பதுவும்—நாஅரற்றல்
இல்லாத சுத்தத் திருப்பதுவும் இம்மூன்றும்
இல்லான் செயலென் றிரு. (அ௦)

**இதன் பொழிப்பு:—** ஆன்மாக்களுக்கு உளவாகுஞ் சகலம் கேவலம் சுத்தமென்னும் மூவகை நிலைகளும் அம் மூவகைநிலைகளுமின்றி, யென்றும் ஒருபெற்றியனாய இறைவன்செயலென்று அறிந்து அடங்குவாயாக எ-து.

**இதனகலம்:—** ஆன்மாக்கள் கருவிகரணங்களொடுகூடிப் பிறப்பு இறப்பிற்பட்டு உழலுதல் சகலநிலையும் கருவிகரணங்கள் சருவசங்கார காலத்தின் மாயையினொடுங்கியவழி மலத்தில் மூழ்கிக்கிடத்தல் கேவல நிலையும், மலநீங்கப்பெற்றமையால் கருவிகரணங்களினுபகாரம் வேண்டப் படாது நீங்கியவழிச் சிவத்தையணைந்து நிற்றல் சுத்தநிலையுமாகலான் ஆவதுவும், கிடப்பதுவும், இருப்பதுவுமென்றார். இது மேலே உரைத்தவாறு பற்றியுமுணரப்படும். இம் மூவகைநிலையும் முதல்வன் ஆன்மாக்கட்குச் செய்யுமுபகாரம் உள்வழியே யுளவாகலான் அவற்றை "இம் மூன்றும் இல்லான் செயலென்றிரு" வென்றார். மூன்றுமில்லானென்றது உடம்பொடு புணர்த்தலாற் பதியாதற்கு இயைபு உணர்த்தியவாறு. ஆன்மாக்கள் பொருட்டு முதல்வன் ஒடுங்கிய தனுகரணபுவனபோகங்களை மீளத் தோற்றுவித்தற்கு ஆவனவற்றைக் கேவலநிலைக்கட் செய்வனவற்றைச் சூக்கும ஐந்தொழிலெனவும், பின்னர்த் தனுகரணமுதலியவற்றை முன்போலத் தோற்றுதல் முதலியன செய்வனவற்றைத் தூல ஐந்தொழிலெனவும், சகலத்தில் ஆன்மா இலாடத்தானத்தேநின்று விடயங்களையறிதற்கண் உடனின்று உணர்த்துவனவற்றை அதிசூக்கும ஐந்தொழில் எனவுங் கூறுப. இனி முத்தியிற் சிவானந்தநுகர்ச்சியும் அவனதுபகாரமின்றிக் கூடாமையின் ஆண்டும் அவன் செயலுண்மை யுணர்ந்துகொள்க. ஈண்டுக்கேவலமென்றது அநாதி கேவலத்தையன்றிச் சருவசங்காரகாலத்தினுளதாகுங் கேவலத்தையென்க. அன்னதாதல் உணர்ந்துகோடற்கே

---

80. Our being in the sakala state wherein we feel desires,
Lying immersed in the kevala state,
And remaining in the suddha state,
Wherein the tongue knoweth no blabbering.
All is the work of Him who is beyond these three states.

சகலத்தை மூற்கூறினுரென்க. உம்மை எண் தொகைபெறுதல் ஒருதலை யன்றுகலின் ஈண்டுத் தொகைபெறுது நின்றது. இம்மூன்றும் என்பது, இல்லான் என்புழிநின்ற, உடைமைக்கு மறுதலையாய இன்மைக்குச் செயப்படுபொருளாய் நின்றது. இவ்வாறன்றி இம் மூன்றும் என் பதனை உம்மையெண்ணின் தொகையாக்கி இவற்றையென ஒருசொல் வருவித்து முடிப்பினுமாம்.

இஃது, எல்லாஞ் சிவன் செயலாதலை உரையளவைபற்றித் தெளிவித்தவாறு, சகலம் கேவலம் சுத்தமென்பன நால்வாய்பாடாகலின்.

---

பாசஞ் சடமுயிரோ தானுகப் பற்றறியா
தீசன் இரண்டும் இணைத்தாட்டிப்—பூசலென்றுஞ்
செய்பவனே தானே திரும்பிஅருள் செய்யாமல்
உய்பவர்கள் உண்டோ உரை. (அக)

இதன் பொழிப்பு:— கருவிகரணங்கள் சடமாகலின் அவை தாமே சென்று உயிரை அடையமாட்டா. உயிரோவெனின் அது சித்தாயினும் அக் கருவிகரணங்களைப் பொருந்துமுன்னர் ஒன்றை அறியவுஞ் செய்ய வும் மாட்டாமையின் அதுவுந் தானேசென்று அவற்றை எடுத்துக்கொள்ள மாட்டாது. ஆகவே அவையிரண்டன் கூட்டம் கருவிகரணங்கள் இன்றியே அறியும் இயற்கையறிவுடைய முதல்வனுல் ஆயிற்றென்பது தானே பெறப்படுதலின் அவனது திருநோக்கம் இன்றி உளராவார் ஒருவரும் இல்லை எ-து.

இதனகலம்:— சடமென்னுங் காரணத்தாற் காரியமும், பற்றறியாதென்னுங் காரியத்தாற் காரணமும் பெறப்பட்டன. இரண்டும் இணைத்தாட்டி, என்றும் பூசல் செய்பவன் ஈசனேயெனவும் மாறிக்

---

81. The bond is insentient and the soul
Knoweth not to cling of itself to the bond.
It is the Lord that linketh and moveth the two
And causeth strife always.
If He Himself bestow not His Grace again
Say, who is there who can attain salvation ?

கூட்டுக. பூசலென்றது உலகத்துழனியை. ஆகலானென்னும் சொல் லெச்சம் வருவிக்க. திருமியென்பது திரும்பியென மரீஇயிற்று. திரும்புதல் நோக்குதலென்னும் பொருட்டு. உளராதலாவது சகல முதலிய மூன்றவத்தைகளுள் ஒன்றில் நிற்றல். உண்டென்பது இல்லையென்பதன் மறுதலையாய் இருதிணைப் பொதுவினைக்குறிப்பாதல் பிற்கால வழக்கு.

இஃது, எல்லாம் சிவன்செயலேயாதலைப் பொருந்துமாற்றின் வைத்துத் தெளிவித்தவாறு.

---

முற்றின்ப மாமருளின் மூழ்குவதும் மோகமிகு
சிற்றின்ப மாமருளிற் சேர்குவதும்—உற்றிங்
கறிந்தானன் நெஞ்சே அகிலாண்ட மெங்குஞ்
செறிந்தான் செயலே தெளி. (அஉ)

**இதன் பொழிப்பு:—** வீட்டிற்குக் காரணமாகிய திருவடிஞானத்தைப் பெறுதலும், பிறப்பிற்குக் காரணமாகிய மயக்கத்தை எய்துதலும் உற்றுநோக்குங்கால் முதல்வன் செயலே என்பது தெளியப்படும் எ-து.

**இதனகலம்:—** முற்றின்பம் நிறைந்த இன்பம்; பேரின்பம் என்றவாறு. ஆமென்னும் பெயரெச்சமிரண்டும் முறையே அருள் மருள் என்னும் ஏதுப்பெயர் கொண்டன. முதல்வன் ஆசான்மூர்த்தியாய் வந்து உணர்த்தியவழியன்றித் திருவடிஞானத்தைப் பெறுதலும், அவன் திரோதானசத்தியோடியைந்தவழியன்றி இச்சை நிகழ்தலுங் கூடாமையின் அருளுணர்வுறுதலும் மருளுணர்வுறுதலும் அவன் செயலேயாயின. இவ்வாறெண்ணிப்பார்த்தல் அரிதாகலின் உற்று அறிந்தால் என்றார்.

---

82. My good heart, know this ;
Plunging in the grace that is perfect joy
And mingling in the grace of worldly joy that stupifies
Are both the work of Him who knoweth all,
Who is immanent in all the universe.

[1]" அவனருளாலே அவன் தாள் வணங்கி " என்பதனால் திருவடி ஞானமும், [2]" நின்னை எப்போதும் நினையலொட்டாய் நீ நினையப்புகின் - பின்னையப்போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி " என்பதனான் மயக்கவுணர்வும் அவன் செயலெனப்பட்டவாறறிக. [3]" ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே " என்னுந் திருத்தாண்டகத்துள் இரண்டும் அவன் செயலாதலை இனிது விளக்கியவாறுங் காண்க.

இரண்டும் அவன் செயலாயின் வீட்டின்பமும், பிறவித்துன்பமுமாய அவற்றது பயன்கள் உயிரையடைதல் இயையாதுபோலும் எனின்; அறியாது வினாயினாய்! என்னை? அவன்செயலென்றது, கண்ணுக்குக் காட்சிநிகழச்செய்யும் கதிரவன்போல உயிர்கட்கு அறிவிச்சை நிகழச் செய்பவனும், மைந்தர்க்கு அவர் வேண்டுவனவற்றை உதவும் தந்தை போல உயிர்கள் வேண்டுவனவற்றைப்பெற அளிப்பவனும் அவனேயென்னுங் கருத்தானன்றி, உயிர்களின் பக்குவவேறுபாட்டான் வீட்டினை நன்றெனத் தெளிதலும், பிறவியை நன்றென மயங்குதலுமாகிய அவ்விருவேறுவகை இயல்பினைச்செய்பவன் அவனென்னுங் கருத்தானன்றாகலின் என்பது. எனவே, தத்தம் பக்குவங்கட் கேற்பத் தாந்தாம் வேண்டியவற்றைத் தனது கருணையால் அளித்தலின் அப்பயன்கள் உயிரையன்றி முதல்வனை எய்துமாறு யாண்டையதென்க. [4]" வேண்டுவார் வேண்டுவதே ஈவான் " என்றதும் இதுநோக்கி.

இது, பந்தமும் வீடுமாகிய பயன்களை ஆக்குதலேயன்றி அவற்றை உயிரெய்துமாறு அவற்றிற்கு அவ்வவ்வுணர்வினை நிகழச் செய்தலும் அவன் செயலே என்பது உணர்த்தியவாறு.

---

[1] திருவாச, சிவபுரா, வரி, 18. [2] அப்பர், தனித்திருவிருத், பா, 4. [3] ஷெடி. தனித்திருத், பா, 3, [4] ஷெ மறைக்காடு, திருத், பா, 1.

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றால் யாதுறினும்
நின்னிடத்தில் யான்வேண்டல் நிச்சயமே—என்னிடத்தில்
இன்மை உயிர்க்குயிர்நீ யின்மை இருந்தியற்றின்
நன்மைதீமைக் கேதுவோ நான். (அ௩)

இதன் பொழிப்பு:— நம்பால் முதல்வன் திருவருட்செயல் இல்லையாயினன்றே நமது நலங்கருதி இந் நலங்களைத் தருக, இத் தீங்குகளை நீக்குக என அவன்பால் நாம் வேண்டுதலும், அதனால் அவற்றிற்கு நாம் காரணமாதலும் வேண்டும். அவ்வாறன்றி அவன் நம்மோடு யாண்டும் உடனாய் நிற்றலின் நாம் அவ்வாறாகவேண்டுவது என்னையோ! எ-து.

இதனகலம்:— யாதுறினுமென்பது எதன்கண் இச்சைசெல்லினு மென்னும் பொருட்டு. இன்மை என்புழி ஆக்கச்சொல் வருவித்து, உயிர்க்குயிராகிய நீ என்னிடத்தில் இன்மையென்பது இன்மையாக இருந்து இயற்றுவதாயின் நன்மை தீமைக்கு நானோ ஏதுவென்றுரைக்க. இன்மை இன்மை என எதிர்மறுத்துரைத்தார், நீக்கமின்றி நிற்பனென்றற்கு.

இது, நமக்கு நலஞ்செய்தற்கண் நம்மினும் அறிவும் ஆற்றலும் மிக்க அருளுடையனாய முதல்வன் நம்மைவிட்டு நீங்காது யாண்டுமுடனாய் நிற்றலின் நாம் அவன்பாலொன்றை வேண்டுதலும் வேண்டா என்பது உணர்த்தியவாறு. [1]"வேண்டத்தக்க தறிவோய் நீ" என்றருளியவாறுங் காண்க.

---

83, If in me there were no deed of Thine
Whatever befall, I must pray of thee, forsooth.
When it is not but that Thou dwellest in me
And workest as the life of my life
Am I the cause of acts, good or bad ?

[1] திருவாச, குழைத்த, பா, 6.

நாம்பெரியம் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும்—நாம்பெரியர்
என்பார் சிறியர் இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். (அ௪)

இதன் பொழிப்பு:— நமக்கு நன்மையறிய நாமே வல்லமென்னும் உணர்ச்சியைப் பற்றறக் களைந்து, நமக்கு நன்மையறிந்தளிக்க வல்லான் முதல்வனேயென்று அவனருள்வழி யடங்கி ஒழுகவல்லாரே பெரியாரென்று மறைகள் எடுத்தோதும். அவ்வாறன்றி நாமே வல்லமென்னும் உணர்ச்சியின்வழி ஒழுகுவோர் சிறியராவர்; அச் சிறியார்க்குத் துன்பமன்றி உளதாவது பிறிதில்லை எ-து.

இதனகலம்:— நாம்சிற்றறிவுடைய மென்பதுணர்ந்தார் உண்மையுணர்ந்தாராகலிற் பெரியராயினர். அங்ஙனம் உணராதார் அஃது உணராமையிற் சிறியராயினர். சிறியார்க்குளதாவது துன்பமெனவே பெரியார்க்குளதாவது இன்பமென்பது தானே பெறப்படும். அவர்க்கவை யுளவாதலைத் தாய்தந்தையரினும் தம்மைத் தாமே மதித்துத் தமக்கு நலந்தேட முயலும் அறிவில் சிறார்க்கும், அவர்வழியடங்கி யொழுகும் அறிவுடைச் சிறார்க்கும் முறையே துன்பமும் இன்பமும் உளவாதலின் வைத்துக்காண்க.

இது, மேலதற்குக் காரணங்கூறி வலியுறுத்தவாறு.

---

84. They are really great who seek not the name of greatness,
Who restrain themselves in modesty, the Vedas proclaim,
They are really small who boast that they are great
Say, who in this world have to bear suffering
If these have not ?

கட்டமாங் காயங் கலையனைத்துங் கற்றாலும்
அட்டமா சித்தி அடைந்தாலும்—இட்டம்
பரம சுகமே படியாத போது
திரம சுகமே தெளி. (அரு)

இதன் பொழிப்பு:— நூலறிவுகளும், அணிமாதி அட்டசித்திகளும் துன்பத்திற்கேதுவாய பிறப்பைத் தருவனவேயாதலின் நம்மால்விரும்பப் படும் பேரின்பத்தைப் பொருந்தாத காலமெல்லாம் நிலைநிற்பது துன்பமே. அதனான் மேற்கூறியாங்குப் பேரின்பநெறியில் நிற்க எ-து.

இதனகலம்:— அதனான் மேற்கூறியாங்குப் பேரின்பநெறியில் நிற்கவென்பது குறிப்பெச்சம். காயத்தைத் தருவனவற்றைக் காய மெனவும், இட்டத்திற்குரியதை இட்டமெனவுங் கூறினார். கற்றாலும் அடைந்தாலும் அவை காயமே எனக்கூட்டுக. திரம் நிலைபேறு. அசுச மென்பது சுகத்தின் மறுதலையாய துக்கத்தைக் குறித்தது.

இது, மேற்கூறிய நெறியன்றிப் பிறநெறிகளாற் பயனின்மை கூறி, அதனை வலியுறுத்தியவாறு.

[1] சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

என்றார் இவர் வழியடியாருமென்க.

---

85. Though one doth learn all the sastras
And achieve the eight great siddhis
While still in the body, the seat of troubles,
If one's desire be not set on the Supreme Bliss
One's lot will certainly be unhappiness, understand.

[1] தாயுமா, பராபரக், பா, 169.

மனவாக்குக் காயமுயிர் மன்னியசைப் பானும்
அனமாதி போகமளிப் பானும் — நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவா னும்பிறப்பில்
ஆட்டிவிடு வானும் அரன். (அசு)

**இதன் பொழிப்பு:—** வினைசெய்தற்குக் கருவியாய மனமுதலிய வற்றினும் அதற்கு வினைமுதலாய உயிர்களினும் கலந்துநின்று அவற்றை அவ்வாற்றிற்றொழிற்படச் செய்பவனும், அவ் வினைப்பயன்கட்கேற்ற உண்டி முதலிய நுகர்ச்சிப் பொருள்களைப் படைத்துக் கொடுப்பவனும், இவ்விருவாற்றானும் உயிர்கள் தொழிற்படுங்கால் அவற்றிற்கு நனவுமுதலிய ஐவகை நிலைவேறுபாட்டினை வருவித்து அவற்றில் வினையை ஈட்டியும், நுகர்ந்தும் வரச்செய்பவனும், பின்னும் மீளமீள உயிர்களைப் பிறவியிற் செல்லச் செய்பவனும், பிறப்பினை நீக்கி முத்தியிற் சேர்ப்பவனும் இறைவனேயன்றி உயிர்களல்ல எ-து.

**இதனகலம்:—** யாவுமென்பதனை இனிது விளக்குவார் இங்ஙனம் வகுத்தோதினர். மனவாக்குக் காயமுயிர் என்னும் உம்மைத்தொகையது இறுதிக்கண் ஏழாவதுவிரிக்க. அனம் என்பது இடைக்குறை. முத்தி கூட்டிடுவானும் என்பதனை இறுதியின்வைத்துரைக்க. இவை உயிர்களின் செயலாகாமை, இச் செயல்கள் உயிர்களின் இச்சைவழி நிகழாமை முதலியவாற்றால் தெற்றெனவுணரப்படுமென்பது கருத்து. அரனென் புழிப் பிரிநிலை ஏகாரந் தொக்கது.

இது, நாம் பெரியம் என்னுமதை நாடாதடக்கி முதல்வன்வழி நிற்றற்பொருட்டு உயிர்களது முதன்மையின்மை கூறியவாறு. இதனானே, சிவனது முதன்மைகூறிய [1]"ஆவனுற்றிடுஞ் சகலத்" தென்னும்வெண்பாவும் வேறுவேறு கருத்துப்பற்றி எழுந்தனவாதலுணர்க.

---

86. It is Hara who dwelleth in the mind
Speech and body and soul and moveth them
Who giveth enjoyment of food and like things
Who uniteth the soul in states like wakefulness
Who giveth deliverance to it,
Or maketh it travail in births.

[1] சிவபோக, பா, 80.

முன்னைவினைக் கீடா முதல்வன் அருள் நமைக்கொண்
டென்னவினை செய்ய இயற்றுமோ—இன்னவினை
செய்வோம் தவிர்வோம் திரிவோம் இருப்போம்இங்
குய்வோம் எனும்வகை யேது. (அஎ)

இதன் பொழிப்பு:— இவ்வுலகில் நமது முயற்சிகளெல்லாம் முற்பிறப்பிற்செய்த வினைவிளைவிற்குத் துணையாகவே முதல்வன் திருவருளால் நிகழ்தலின், நாம் இதனைச் செய்வோம் இதனைத் தவிர்வோம் என்றற்றொடக்கத்தனவாகப் பலபடக் கருதுமதனாற் பயனொன்றில்லை எ-து.

இதனகலம்:— இஃது,

[1] ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப—கோடியும் அல்ல பல.

என்றாங்குப் பலபட எண்ணும் நமதெண்ணங்களாற் பயனின்றென்பது உணர்த்துமுகத்தான் அங்ஙனம் எண்ணுதற்கும் நாம் உரியமல்லோம் என்பது உணர்த்தியவாறு.

---

ஊட்டும் வினையிருந்தால் உன்னுணே உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் புசிப்பிக்கும்—கேட்டுத்
திரியாதே வந்துதில்லைத் தெய்வமே என்றென்
றெரியாதே நெஞ்சே இரு. (அஅ)

87. Whatever the deeds will be that the grace of the Supreme
Shall arrange to be done through us
In accordance with our karma in the past ; who knows ?
What scope have we to say,
" We'll do this work, We'll not do that
We'll roam about or remain here
We will save ourselves " and so on ?

88. If there be the karma to be undergone, as sure as you are
It will bind your feet down to your suffering.
Neither wander about questioning
Nor burn in anguish repeating " God of Thillai, Oh !"
Peace, be still, my heart.

[1] குறள் பா. 337.

இதன் பொழிப்பு:— நல்லூழ் உளதாயின் அது விளையுங்காலத்து விளைந்து நன்மையைப் பயத்தல் பிழையாமையின் யாதானுமொரு நன்மையின்பொருட்டு முதல்வனைப் பல்லாற்றானும் வேண்டுதலும், அந் நன்மை கிட்டாதபொழுது அவனை நோதலுங்கூடா எ-து.

இது முதல்வனைக் காமியமாக வழிபடுதல் கூடாமைக்குக் காரணங் கூறியவாறு. "காமியஞ் செய்து காலங்கழியாதே" என்றருளியதுங் காண்க.

---

என்னதன்று நின்செயலே என்றறிந்தால் யான்விரும்பி
என்னவென்று வாய்திறப்பேன் ஈசனே—இன்னமின்னம்
எப்படியோ நாயேனை ஈடேற்ற வேண்டுமுனக்
கப்படியே செய்தருளு வாய். (அகூ)

இதன் பொழிப்பு:— நமக்கு நன்மைசெய்ய வேண்டுதலும் நம் கடனன்று; அவன் கடனே என்பது தெளிந்தார்க்கு அவன்பால் யாதொன்றனையும் வேண்டுதற்கு இயைபின்மையால், அவர் "நீ எம்மை எவ்வாற்றானுய்விக்க நினைக்கின்றனையோ அவ்வாற்றானுய்வித்தி" என்றே வாளா இருப்பர் எ-து.

இதனகலம்:— இன்னமின்னம் என்றது இதுகாறுஞ் செய்து வந்தனவும் என்னை உய்வித்தற்பொருட்டே என்பது விளக்கிநின்றது. வேண்டுமுனக்கு என்பது பெயரெச்சமுடிபு. உனக்கு எப்படியோ அப்படியே செய்தருளுவாய் என மாறிக்கூட்டுக. எப்படியோ என்றது எப்படிக்கருத்தோ என்றவாறு. எனவே, வீடுபேற்றினையும் யாம் நின்பால் வேண்டகில்லேம் என்பது கருத்தாயிற்று.

---

89. When I come to know nothing is mine but all Thy work,
What desire shall I have or what speak forth, O Lord,
Howsoever thou plannest further and further
To redeem me, a dog, so may Thy Will be done.

[1] மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ அடிமைசால அழகுடைத்தே.

எனவும்,

[2] நாயிற் கடையாய்க் கிடந்தேனை நயந்து நீயே யாட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கு மதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான் என்னதோ இங் கதிகாரம்
காயத்திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே.

எனவும் அருளியவாறுகாண்க.

[3] விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன் விரும்பியாட் பட்டேன்.

என்றதூஉம் இப்பொருட்டு.

இது, நிட்காமியமாக வழிபடுமாறு உணர்த்தியவாறு.

---

வன்மைபுரி காய மரப்பாவை தன்னைஅரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தாற் கட்டியே—நன்மைதின்மை
ஆட்டுவது நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல்போல் உண்டோ நகை. (௯0)

இதன் பொழிப்பு:— உயிர்கள் வினைக்கீடாக உடம்பொடுகூடி வினையையீட்டுதலும் நுகர்தலும் முதல்வனாலே நிகழ்தலின், அவ்வுடம்புகளின் இயக்கம் மரப்பாவையது இயக்கமும், வினை அம் மரப்பாவையைப் பிணித்த கயிறும், முதல்வன் அக் கயிற்றைப்பற்றி இயக்குவிப்பவனும்

---

90. The fools understand not that it is Hara
That bindeth with threads of karma
The wooden puppet, body, that worketh wickedness,
And maketh it dance in good and bad.
They assert these as their own doings!
Is there anything like this deserving to be laughed at?

[1], [2] திருவாச, குழைத்த, பா, 9, 8. [3] சுந்தரர், ஆரூர். பா, 2.

போல்வராக அஃதறியாதார் அவையெல்லாந் தஞ்செயலென மயங்கி, அம் மயக்கத்தினடியாகப் பலவுஞ் செய்தல்போலும் நகையைத் தருஞ்செயல் பிறிதில்லை எ-து.

காய மரப்பாவை, கன்மமெனுஞ் சூத்திரம் என்பன உருவகம். வன்மையென்றது வலியவினையை யுணர்த்தலிற் பண்பாகுபெயர். நன்மை தின்மை என்புழி ஏழாவது விரிக்க. நகைவிளைப்பதனை நகையென்றார்.

இஃது, உயிர்கள் முதல்வன் வழியினவென்பது உவமை முகத்தான் உணர்த்தியவாறு.

---

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
பேறாக ஆனந்தம் பெற்றாலும்—வேறாகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து. (கூக)

**இதன் பொழிப்பு:—** பாசநீக்கம் பெற்றுச் சிவானந்தத்தைத் தலைப்பட்ட சீவன் முத்தர்க்கும் பிராரத்தவினை, தாக்காமை மாத்திரை யல்லது விளையாமை இல்லை எ-து.

**இதனகலம்:—** கன்மமென்றது ஈண்டுப் பிராரத்தத்தை.

இது, கன்மமெனுஞ் சூத்திரத்தாற் கட்டியென்றது வினைத் தொடர்பறுத்த சீவன்முத்தர்க்கேலாது போலுமென்னும் ஐயப்பாட்டினை நீக்கியவாறு. இதனானே, இனிவருவனவற்றிற்கெல்லாம் தோற்றுவாய் செய்யப்பட்டது.

---

91. Though the soul be released
From anava and tatvas thirty six
And attain the gift of ananda,
Can it do away with ruinous karma
Excepting that it may with detachment look at it ?

ஆனசுக துக்கத் தழுந்துகினும் ஞானிகள்தாம்
யானெனதென் றெண்ணி இயைந்திடினும்—தானதற்கு
வேறென் றருளால் விரளமாய்க் காணிலென்றும்
ஏறுமோ கன்மம் இலை. (௯௨)

இதன் பொழிப்பு:— சீவன் முத்தர்கள் இன்ப துன்பங்களை நுகர்ந்து யானெனதென்று பற்றுச் செய்வாராயினும் அவையெல்லாம் முதல்வன் திருவருளின்றி இயலாமையை அறிந்து, அதனால் தம் சுதந்தர மின்மையை உணர்ந்து, அவ்வுணர்வான் அவற்றினழுந்தாது நிற்ப ராகலின் அவர்க்கு மேலைக்குவித்தாய ஆகாமியம் ஏறுமாறில்லை எ-று.

இதனகலம்:— அழுந்துகினும், இயைந்திடினும்என்னும் உம்மைகள் இழிவு சிறப்பும்மைகள். தானென்பது பன்மையொருமை மயக்கம். விரளம் நீக்கம். அருளால் விரளமாய்க் காணிலென்றதனன் அங்ஙனங் காணுமாற்றினை விரித்துரைத்தாம். காணில் என்பது காண்பதுளதான பொழுது என்னும் பொருட்டாய்நின்றது. [1]"காண்பவன் சிவனே ஆனால்" என்புழிப்போல.

இது, மேல் சீவன்முத்தர்க்கும் நீங்காதென்ற பிராரத்தவினை அவரைத்தாக்கிமேலைக்கு வித்தாய ஆகாமியத்தைச் செய்யாதொழியுமாறு யாங்ஙனமென்னும் ஐயத்தினை நீக்குமுகத்தான் ஈண்டுக் கூறுந் தஞ் செயலறவொழுகுதல் சீவன்முத்தர்க்குச் சிறந்த ஒழுக்கமாதல் கூறியவாறு.

---

92. Though the wise be sinking
In the joys and sorrows that happen
And acquiesce in thinking
In terms of I and mine,
If they see by Grace the body
As distinct from the soul
Can karma ever prevail ? No !

[1] சித்தி, சூ, 2. பா, 27.

சத்துருவும் மித்துருவும் தாரணியில் வேறில்லை
சத்துருவும் மித்துருவும் தன்னெஞ்சே—பெத்தமலம்
வீட்டும் படிக்கு வினைக்கீ டுனைத்தனுவோ
டாட்டுஞ் சிவனென் றறி. (௯௩)

இதன் பொழிப்பு:— உயிர்களை அவற்றின் வினைக்கீடாக இறைவனே உடம்பொடு கூட்டி ஆட்டுவிக்கின்றான் என்பதனை அறியாதார்க்கு மனம் பகையும், அதனை அறிந்து தொழுவார்க்கு மனம் நட்பும் ஆம்; ஆகலான் அதனை அறிந்து ஒழுகுவாயாக. எ-து.

இதனகலம்:— ஆகலான் அதனை அறிந்தொழுகுவாயாக என்பது குறிப்பெச்சம். வினைக்கீடாகத் தனுவோடாட்டுதல் எற்றுக்கு எனும் வினவை விடுப்பார் "பெத்தமலம் வீட்டும்படிக்கு" என்றார். அறியாதார்க்கு, நெஞ்சம் நலஞ்செய்தார்மாட்டு விருப்பும் தீங்குசெய்தார்மாட்டு வெறுப்புங்கொண்டு திரிபெய்தி ஆகாமியத்தைச் செய்தலிற் பகையும், அறிந்தார்க்கு அங்ஙனந் திரிதலின்றி ஒருபெற்றியே நின்று திருவருளை நினைதலின் நட்புமாம் என்க. பகையாதற்கும் நட்பாதற்கும் அறியாமையும் அறிவுமே காரணமாயினும் அதனை அவற்றானிகழும் செயலுக்குப் பற்றுக் கோடாகிய மனத்தின்மேலிட்டுச் "சத்துருவும் மித்துருவுந் தன்னெஞ்சே" என்றார். எனவே,

[1] மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயவா றுயிரின் மேவும் மருளெனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயவா றுயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்.

என்னும் கருத்துப்பற்றி ஓதினாராயிற்று.

இது, பெத்தர்க்கு ஆகாமியம் ஏறுமாறும், முத்தர்க்கு அஃது ஏறாதவாறும் உணர்த்து முகத்தான் திருவருள்வழி நிற்றலின் இன்றியமையாமை கூறியவாறு.

---

93. There is no other foe nor friend on earth
One's own mind is both foe and friend,
That the mala that binds thee may be broken
Siva moves thee in the body
Accordant with thy karma, understand.

[1] சிவப்பிர. சூ. 7, பா. 2

இன்னவினை இன்னதலத் தின்னபொழு தின்னபடி
இன்னதனால் எய்துமென அறிந்தே — அன்னவினை
அன்னதலத் தன்னபொழு தன்னபடி அன்னதனால்
பின்னமறக் கூட்டும் பிரான். (௯௪)

இதன்பொழிப்பு:— உயிர்கள் முற்பிறவிகளில் பல்வேறிடங்களிற் பல்வேறு காலங்களிற் பலதிறப்படச் செய்தவினைகளுள் இவ்வினை இவ்விடத்து இக்காலத்து இப்பயனாய் இதுவாயிலாக விளையற்பாற்றென்பது அறிந்து அங்ஙனம் அறிந்தவாறே அதனை உயிர்கட்கு இறைவனே குறைவின்றிக் கூட்டுவிப்பான்; ஆகலின் அவ்விடங் காலம் பயன் வாயிலென்பன தாமே அவ்வினைவிற்கு முதல் என்று கருதி மயங்கல் வேண்டா எ-து.

இதனகலம்:— ஈற்றில் தந்துரைத்தன குறிப்பெச்சம். எனவே, அம்மயக்கந்தானே மனத்திரிபிற்குக் காரணமாய் விருப்பு வெறுப்புகளைத் தந்து, மேலைக்கு வித்தாகிய ஆகாமியத்தைச் செய்யும் என்றவாறாயிற்று.

இது, "வினைக்கீடு உனைத் தனுவோடு ஆட்டும் சிவன்" என்றதனை வகுத்து உணர்த்தி மனந் திரிபெய்தாமைச்செய்து திருவருள்வழி நிற்பித்தவாறு.

---

94. Knowing that such a deed, in such a place
At such a time, in such a way
By such a thing will reach one,
That deed, in that place, at that time, in that way,
Without difference will the Lord make it reach one.

அன்றே அநாதி அமைத்தபடி யல்லாதொன்
றின்றே புதிதாய் இயையுமோ—என்றுஞ்
சலியா தியற்றுவான் தன்னையே நோக்கி
மெலியா திருந்து விடு. (கூரு)

இதன் பொழிப்பு:— அநாதியாய முதல்வன் உயிர்கட்கு உடம்பைப் படைத்துக்கொடுத்த அன்றுதானே சாதி ஆயுள் போகம் என்பனவற்றை அமைத்துவைத்தபடியன்றி அதற்குவேருக இன்றுவந்து பொருந்துவது ஒன்றில்லை. அதனுல், உயிர்கள்மாட்டுள்ள கருணையால் அவற்றுக்கு ஆவனவற்றை எஞ்ஞான்றும் வெறுப்பின்றிச் செய்கின்ற அவன் செயலை, நாடகங்காணுமவர்போலக் கண்டுகொண்டு கவலையற்று இருப்பாயாக எ-து.

இஃது, இஞ்ஞான்றும் நிகழும் நலந்தீங்குகட்குக் காரணத்தை உள்ளவாறுணர்த்தி, மனத்திரிபினை மாற்றியவாறு.

> [1] கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
> கோடாமை சான்றோர்க் கணி.

என்றும்,

> [2] வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
> தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது.

என்றும் அருளிச்செய்தார் திருவள்ளுவநாயனுரு மென்க.

---

95. Except as the Being without beginning, ordained in the beginning
Will anything afresh happen to-day ?
Look to Him alone, who worketh untiringly for-ever.
Be not distressed.

[1, 2] குறள், பா. 115, 377.

ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆர்உறவர் ஆர்பகைஞர்
சீர்பெரியர் ஆனந்த சிற்சொருபர் — பேர்பெரியர்
எங்கெங்குந் தாமாய் இருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவதா னால். (கசு)

**இதன் பொழிப்பு:—** எல்லாப் பெருமையுமுடைய இறைவனொருவனே எவ்விடத்தும் நீக்கமற நிறைந்துநின்று, சடமுஞ் சித்துமாய எல்லாப் பொருள்களையும் நடத்துவனாயின், அப் பொருள்களுட் சிலவற்றை நல்லனவாகவும் சிலவற்றை அல்லனவாகவும் வேற்றுமைப்படக் கருதுதல் என்னையோ ! எ-து.

**இதனாகலம்:—** எனவே, அவ்வேற்றுமையை இவ்வாறுணரு மதனாற் போக்குக என்றவாறு.

இது, நல்லார் தீயாரென்னும் வேற்றுமைக்குக்காரணம் உணர்த்தி, அது நீக்கியவாறு.

---

நன்கருத்தே தென்கமலை ஞானப்ர காசனே
என்கருத்தே உன்கருத்தென் றெண்ணமல்—உன்கருத்தே
என்கருத்தென் றெண்ணியே யான்பட்ட துன்பமெலாம்
உன்கருத்தே தீரவறி யும். (கஎ)

---

96. Who are great, who are small,
Who are kith, who are foe,
If He whose form is joy and knowledge,
Great in glory, great in name,
Being Himself everywhere,
Everywhere doth make and move
All knowing and unknowing world ?

97. Thou of noble thoughts, of Southern Kamalai, Jnanaprakas,
Thy thoughts know fully well all the trouble I have suffered
For having thought that Thy thoughts were my thoughts,
Instead of thinking that my thoughts were thine own.

இதன் பொழிப்பு:— நன்றாய உள்ளத்தில் வீற்றிருக்கும் எமது அருட்குரவரே! என் செயல்களெல்லாம் உம் செயல்களென்பதை அறியாமல், உம் செயல்களையெல்லாம் என் செயலாக மயங்கினமையால், யானடைந்த துன்பங்களை யெல்லாம் உமது திருவுள்ளமே முற்ற அறியும் எ-து.

இதனகலம்:— கருத்து நான்கனுள் முன்னையது கருத்தில் உள்ளபொருளையும், இடையனவிரண்டும் கருத்தினாலாகுஞ் செயலையும் உணர்த்தின. மயங்கினோர்க்கு வழிகுழியாயுங், குழிவழியாயும் தோன்றிப் பேரிடருண்டாதல் இயல்பாகலானும், எல்லாவற்றையும் உடனின்று அறிவான் அவனன்றியில்லையாகலானும் "யான்பட்ட துன்பமெலாம் உன்கருத்தே தீரவறியும்" என்றார்.

இஃது, இம்மயக்கத்தாலுளதாகுந் தீங்கு கூறுமுகத்தான் அதனை ஒழிக என்றவாறு.

---

அமைத்தவினைக் கீடா அநுதினமுஞ் செய்வ
திமைப்பொழுதும் வீண்செயலொன் றில்லை—உமைக்குரியான்
எல்லாம் அறிந்தெங் கியற்றுவதுந் தன்னடிமை
வல்லார் தமக்குணர்த்து வான். (கூஅ)

இதன்பொழிப்பு:— உயிர்கள் நாடோறுஞ் செய்யுஞ் செயல்கள் எல்லாம் முன்வினையை நுகர்தற்குச் செய்யுஞ் செயல்களே; வேறில்லை. அவ்வுண்மையை முதல்வன் தனக்குத் தொண்டுபூண் டொழுகவல்லார்க்கு அறிவிப்பன் எ-து.

98. Of what one doeth daily, accordant with the determining karma
Not for a wink of time is any deed vain;
Uma's Lord knoweth all and maketh those
Proficient in His service comprehend.

**இதனகலம்:—** அநுதினமுஞ் செய்வது அமைத்த வினைக்கீடா என மாறுக. செய்வது இயற்றுவதென்னும் ஒருமைகள் அத்தொழின்மே னின்றன. வீண்செயலென்றது பிறசெயலென்னும் பொருட்டாய்நின்றது. எல்லாமறிந்து என்பதனை எங்கியற்றுவதும் என்பதன்பின்னுக நிறுத்தி; எவ்விடத்தும் எல்லாருஞ் செய்யுஞ் செயல்களெல்லாவற்றையும் அறிந்து எனவுரைக்க. அறிந்து அறிதலான் என்னும் பொருட்டாய் உணர்த்துதற் குரிய இயைபுணர்கின்றது. தன்னடிமை வல்லார்க்கு என்றதும் உணர்தற் கியைபுகூறியவாறு.

இஃது, உயிர்கள் செய்யும் செயலெல்லாம் வினைவழிப்படுத்தி முதல்வன்செய்யும் செயலே என்பது, அவனடியார்க்கல்லது உணர்தல் அரிது என்பது உணர்த்தியவாறு.

---

கள்ள அரனே கருணையுடன் என்னறிவில்
உள்ளசுகந் தந்துவிட ஒண்ணுதோ—மெள்ள
வருத்துவதுந் தீவினையில் வாட்டுவதும் ஞானம்
பொருத்துவதும் ஏன்தான் புகல். (கக)

**இதன் பொழிப்பு:—** பந்தமும் வீடுமாய செயல்களெல்லாம் முதல் வன் செயலேயாகவும், அம்முதல்வன் கருணையே வடிவினனுகவும் உயிர்க ளெல்லாவற்றையும் ஒருங்கே சிவானந்தவாரியுள் செலுத்திவிடாதது என்னையோ என்பது பெரிதும் ஆராயற்பாற்று எ-து.

**இதனகலம்:—** அங்ஙனம் ஆராயுங்கால் சிவானந்தமாவது ஏனைய இன்பம்போலத் தனக்கு வேருயுள்ள பொருளின்கண்ணதாகாது தன் அறிவின்கண்ணதாகிய பொருட்கண்ணதாகலானும், நுகர்ச்சியாவது அறிதல் விசேடமேயாகலின் உயிர்கள் அதனை யறிந்தவழியே அவ்வின்ப

---

99. Arch Hara, won't it do to give straight away with Grace
The bliss that is of mine intellingence ?
Why is it that slowly Thou dost tease me,
Roast me in wicked deeds,
And unite me to wisdom, say ?

நுகர்ச்சிகூடுவதாகலானும், உயிர்கள் அறிவித்தாலன்றி அறியமாட்டாமையும் அறிவித்தவழியும் படிமுறையானன்றி ஒருங்கே அறிவித்தாலறியமாட்டாமையும், அப்படிமுறைகளும் எல்லா உயிர்கட்கும் ஒருதன்மைப்பட நிகழாது உயிர்தோறும் வெவ்வேறுவகைப்பட நிகழ்தலையும் உடையவாகலானும் அவ்வுயிர்கள் அச்சிவானந்தத்தை அறியுங்காலத்தே அறிவித்து அதன்கணழுத்துவதன்றி அதற்குமுன் அது செய்யாமைக்குக் காரணம் உயிர்கண்மாட்டுள்ள குற்றமன்றி முதல்வன் குற்றமன்றென்பது போதருமென்பது, "அறிவிலுள்ள சுகம்" எனவும், "வருத்துவதும், வாட்டுவதும், பொருத்துவதும்" எனவும் கூறிய சொற்குறிப்புக்களால் உணரப்படும். இங்ஙனம் இவை முதல்வன் குற்றமாகாமையை, [1]"மருதிடங்கொண்ட மருதவாண – நின்னது குற்றம் உளதோ" என்றெடுத்துக்கொண்டு பலபட விரித்துக்காட்டிய அருண்மொழிகளானும் உணர்க. [2]"வெள்ளத்துள் நாவற்றியாங்குன் அருள்பெற்றுத் துன்பத்தினின்றும் – விள்ளக்கிலேனை" என்பதூஉம் இக்கருத்தேபற்றி எழுந்ததென்க.

இது, முதல்வன் "தன்னடிமைவல்லார் தமக்கே யுணர்த்துவான்" என்றதற்குக் காரணங்கூறியவாறு.

---

கேளா தெனைமலத்திற் கிட்டியெடுத் தாளாக்கி
மீளா தளித்தபர வீட்டிலெனை—யாள
உனக்குப் பொறியோ உனைத்தொடர்ந்தா ளென்ன
எனக்குப் பொறியோ இனி. (ஈ)

இதன் பொழிப்பு:— உயிர்கள் ஆணவத்தில் கட்டுண்டு தன்னியல்பு சிறிதுந்தோன்றாது அவ்வாணவமலரூபமேயாய்க் கிடந்த அநாதி கேவலநிலையில் அவைகட்கு அக்கட்டு நீங்கிச் சிறிது அறிவு நிகழ்தற்

100. Now, on whose head is it written,
On Thine, unasked, to approach me in mala,
Take me out, make me Thy servant in the supreme House
Thou hast given me and from which there is no returning?
Or on mine, to follow thee
And pray to Thee to make me Thy servant ?

[1] திருவிடைமருதூர் மும்மணி, பா, 16. [2] திருவாச, நீத்தல். -பா, 14.

பொருட்டுத் தனுகரணங்களைக் கொடுத்துத் தத்துவரூபமாகச் செய்தலும், அதன்பின்னர்த் தத்துவங்களான் மயக்கித் தன்னியல்புணராது கிடக்கும் சகலநிலையில் அத் தத்துவங்களினீக்கி மெய்யுணரவைத்து அவைகளை முத்திநிலையில் வைத்தலும் முதல்வன் தானே தனதுகருணையினுற் செய்வன வன்றி உயிர்களின் வேண்டுகையாற் செய்வனவல்லவென்பது அவற்றிற்கு அந்நிலைகளில் அவ்வறிவு நிகழாமைபற்றி இனிதுணரப்படுதலின், முத்தி நிலையில் மீண்டும் பாசத்தில் வீழாவாறு அவற்றைத் தொடர்ந்து நின்று ஆட்கொள்ளுதலையும் அவன் தானே செய்வன்; அதற்கு அவனை வேண்டிக்கோடல் வேண்டா எ-து.

இதனை கலம்:— சேளாதென்பது யான்வேண்டிக் கோடலின்றியே என்னும் பொருட்டாயும், ஆளாக்கி யென்றது புருடனுக்கி என்னும் பொருட்டாயும் நின்றன. மலத்தில் மலத்திற்கட்டுண்டிருந்த நிலையில் என்க. எழுத்தென்னும் பொருண்மைத்தாய் இலக்கணை வழக்கான் ஊழினை உணர்த்திவரும் பொறியென்னுஞ் சொல் ஈண்டுக் கடனென்னும் பொருட் டாய் நின்றது. ஆளாக்கி யென்றற்கு ஆளாக்கியபின் எனவும், மீளாது அளித்தபரவீட்டில் என்றதற்கு மீளாது பரவீட்டை அளித்து அவ்வீட்டு நிலைக்கண்ணுமெனவும் உரைக்க. "உனக்குப் பொறியோ எனக்குப் பொறியோ" என்றது, அவனுக்கே பொறியாதல் விளக்கிநின்றது.

இஃது, உலகியல்பற்றியே யன்றி மெய்ந்நெறிபற்றியும் முதல் வனைத் தற்போதத்தின்வழிநின்று வேண்டுதல் குற்றமாம் என்பது உணர்த்தியவாறு.

[1] செய்யனே திருவாலவாய் மேவிய ஐயனே அஞ்சலென்றருள் செய்யெனை.

[2] அருளாய் சுருங்கவெ எமதொல்வினையே.

[3] சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்.

[4] தருவா யெனக்குன் திருவடிக்கீழொர் தலைமறைவே.

[5] அடியேன் படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே.

[6] தலைவா உனை வேண்டிக்கொள்வேன் தவநெறியே.

[7] கடையவ னேனைக் கருணையி னுற்கலந் தாண்டுகொண்ட
விடையவனேவிட் டிடுதிகண்டாய்.

---

[1] சம்பந்தர், ஆலவாய், பா, 1. [2] ஷை கோயில், பா, 1. [3] அப்பர், திருவதிகை, பா, 3. [4] ஷை தனித்திருவிருத், பா, 2. [5] சுந்தரர், வடதிருமுல்லை, பா, 1 [6] ஷை துறையூர், பா, 1. [7] திருவாச, நீத்தல். பா, 1.

என்றற் றொடக்கத்தனவாக உலகியல்பற்றியும் மெய்ந்நெறிபற்றியும் வேண்டி எழுந்த அருட்டிரு மொழிகளெல்லாம் தம் நிலையினை வெளிப் படுத்தியவாறல்லது அவனது அருட்பெருந்தன்மையை மறந்து வேண்டின அல்லவென்பது, [1]" தன்கடன் அடியேனையுந் தாங்குதல் " என்றற்றொடக் கத்துத் திருமொழிகளான் இனிது விளங்கிக்கிடத்தலின், அவை தற்போ தத்தின் வழியாயினவாகாமை உணர்ந்துகொள்க.

---

சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மான்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி இரு. (௱க)

**இதன் பொழிப்பு:—** காரணமின்றிக் காரியம் நிகழாதென்பதும், அவையிரண்டற்கும் நிலைக்களன் ஒன்றேயாதல் வேண்டுமென்பதும் எல்லார்க்கும் ஒப்பமுடிந்தனவாகலான் நமக்குளவாகும் உடம்பாகிய சுமைக்கும், பிறவியாகிய நோய்க்கும், இன்பதுன்பங்களாகிய வேறுபாடு கட்கும் காரணக்களன் நாமேயன்றிப் பிறராகாரென்பது இனிதுணரப் படுதலின், அவைபற்றிப் பிறரை நோவாது அவற்றிற்குக் காரணமான வினையைச்செய்த நின்னையே நொந்து யாவர்க்கும் அவரவர் வினையை அறிந்து கூட்டுவிக்கும் முதல்வன் திருவருளைநோக்கி அமைவாயாக எ-து.

**இதனகலம்:—** சும்மா என்றது காரணமின்றி யென்னும் பொருட்டு. சுகதுக்கங்கள் நம்வினைக்கீடாக முதல்வன் திருவருள் யாதானு மொன்றன் வாயிலாக வருவிக்க வருதலின் அவற்றை அவன் செயலாக உணராது அவற்றிற்கு வாயிலாயினர் செயலாகவுணர்தல் குற்றமாம்

---

101. Can the body come without reason
Can illness come without reason
Can joy and sorrow come without reason ?
They are all the deeds of Siva's grace
Accordant with our deeds in the past.
Seek desiring after Him who flings them at you.

[1] அப்பர், கடம்பூர், பா. 9.

என்பதனை, "எய்தவனிருக்க அம்பென்ன செய்யும்" என்னும் பழமொழி காட்டி யுணர்த்துவார் "எய்தவனை நாடி இரு" என்றார். எய்தவன் — சுக துக்கங்களைச் செய்விக்கும் முதல்வன்.

[1] வைதிடினும் வாழ்த்திடினும் இன்பதுன்பம் வந்திடினும் வம்புகோடி
செய்திடினுந் தண்டலைநீள் நெறியார்தஞ் செயலென்றே தெளிவதல்லால்
மெய்தவிர அவர்செய்தார் இவர்செய்தார் எனநாடி வெறுக்கலாமோ
எய்தவர்தம் அருகிருக்க அம்பைநொந்த கருமமென்ன இயம்புவீரே.

என்றார் இவர்வழியடியாருளொருவரும் என்க.

இது நமக்குளவாகும் இன்பதுன்பங்கள் அவன் செயலே யாதலைப் பொருந்துமாற்றின் வைத்து உணர்த்தியவாறு.

---

பொல்லாத தீவினையிற் போகார்கள் போனாலும்
எல்லாஞ் சிவன்செயலே என்றிருப்பர்—நல்லார்கள்
நற்றுங் கமலையில்வாழ் ஞானப்ர காசனருள்
சற்றும் பிரியா தவர். (௱உ)

இதன் பொழிப்பு:— முதல்வன் திருவருளிற் சிறிதாயினும் நீங்காது நிற்கும் பெரியோர்கள் எஞ்ஞான்றும் தாமாக ஒரு செயலைச் செய்தலுமில்லை, ஒன்றை நுகர்தலுமில்லை. ஒரோர்கால் அவற்றைச் செய்தாராயினும் அவனருட்செயலாகக்கொண்டு செய்வர் எ-து.

இதனகலம்:— அவ்வாறு செய்தலைப் பரவையாரை மணந்து வாழ்ந்த வன்றொண்டர் முதலிய பெருமக்கள் செயல்களில்வைத்துக் காண்க. நச்சுமென்றது நற்றுமெனா மரீஇயிற்று. அஃது இக்காலத்து

102. Wicked karma will not be their lot.
Even if it be, they will simply say
It is all Siva's work,—they
Who never separate ever so little
From the Grace of Jnanaprakas
Who dwelleth in Kamalai, which attracteth the good.

[1] தண்டலையார்சதகம், பா, 50.

நத்துமெனவும் வழங்கும். நச்சுதல் – விரும்புதல். நல்லாரென்றது சிவன் முத்தரை.

இது, அவரது இயல்பு உணர்த்துமுகத்தான் அங்ஙனம் நிற்றல் யாவர்க்கும் வேண்டற்பாலது என்றவாறு.

---

கூட்டுவதுங் கூட்டிப் பிரிப்பதுவும் ஒன்றொன்றை
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதும் — காட்டுவதும்
காட்டி மறைப்பதுவும் கண்ணுதலோன் முன்னமைத்த
ஏட்டின் படியென் றிரு. (௱௩

இதன் பொழிப்பு:— ஒன்றோடொன்று மாறுபட்ட செயல்களை இறைவன் உயிர்களின்மாட்டு நிகழ்வித்தல் அவற்றின் வினைக்கீடாக அவன் முன்னமே அமைத்துவைத்த நெறியானன்றிப் பிறவாற்றானன்று. எ-து.

இதனகலம் :— கண்ணுதலோன் என்பதனை முதற்கட்கூட்டியுரைக்க. ஏடென்றது இலக்கணைவழக்கு. ஒன்றொன்றைக் கூட்டுதல் பிரித்தல் - ஒவ்வொரு விடயத்தை உயிர்கட்கு வருவித்தல் நீக்குதல் ஆட்டுதல் - பிறப்பின்கண் விடுதல். அடக்குதல் - கேவலத்தில் அழுத்தல் காட்டுதல்-உணர்த்துதல். மறைத்தல்-மறப்பித்தல். இவையெல்லாம் முன் அமைத்தபடியாதலை,

[1] பேறிழ வின்பமோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்டது.

என்பதனானும் அறிக.

---

103. Uniting and having united, separating,
Moving and having moved, quieting,
Showing and having shown, hiding,
Think all these to be predetermined
According to the will of the brow-eyed God.

[1] சித்தி, சு, 2, பா, 9.

இஃது, உயிர்கள்மாட்டு முதல்வன் தன்செயலை ஒருதிறத்தா னன்றிப் பலதிறப்படச் செய்தற்குக் காரணங் கூறியவாறு.

---

உள்ளதுதான் போமோமற் றில்லா ததுவருமோ
பள்ளமே வெள்ளம் பரவாதோ—கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதைமட நெஞ்சமே
செத்துப்போ னானோ சிவன். (௱௪)

**இதன் பொழிப்பு:—** அவரவர் வினைக்கேற்ப அமைந்துள்ள பயன் விளையாதொழிதலும், அமைந்திலாத பயன் விளைதலும் எவ்வாற்றானும் இல்லை என்பதும், அவற்றை அவரவர்கட்குத் தப்பாமல் கூட்டியும் பிரித்தும் நிற்கும் முதல்வன் எஞ்ஞான்றும் அழிவின்றி ஒருபெற்றியனாய் உள்ளானென்பதும் உரையளவையால் நன்கு துணியப்பட்டன ஆகலான் நமக்கு வரக்கடவனவாய இன்பதுன்பங்கள் பள்ளத்தை நோக்கிவரும் வெள்ளம்போல நம்மை வந்தே அடையும். அதனால் அவற்றை அடையவும் நீக்கவும் கருதிப் பலபட நினைத்துஞ் சொல்லியும் அலமருதல் அறியாமைப் பாலதாம் எ-து.

**இதனகலம்:—** கள்ளமாம் என்றது தனக்கு அமையாததனைக் கவரவும், அமைத்ததனை வீழ்த்தவும் நினைத்தென்றவாறு. பித்து என்பது அதனையுடையதன்மேல் நின்றது. ஒருநெறிப்படச் சொல்லாமையின் "பித்துப்போலே பிதற்றும்" எனவும், பெரியதோர் அறியாமையுடைமையை யென்பார் "பேதைமட நெஞ்சே" எனவும் கூறினர். பிதற்றுதல் சொல்லவே அதன் காரணமாய நினைத்தலும் பெறப்பட்டது.

இஃது, எல்லாம் அவன்செயலேயென்றமைந்திராது நம்செயலெனக்கொண்டு உழல்வோமாயினும் அதனாற் பயனின்மையின் அவற்றான் அமைந்திருத்தலே நன்றென்றவாறு.

---

104. Can that which existeth go?
Can what doth not exist come into being?
Will not the flood ever flow into low land?
Roguish, foolish, simple mind that blabbereth as if mad,
Do you think Siva is dead and gone?

ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தின்
மோசம் வந்ததென்று மொழியலாம்—ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவுந் தானுனால்
நோக்குவதென்! யாம்பிறரை நொந்து. (௱௫)

இதன் பொழிப்பு:— இடத்திலுள்ளாரது வன்மையான் இடம் அழிக்கப்படாமைபோல எல்லாவற்றையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லனுய முதல்வன் வலிமையான் அவற்கிடமாய உயிரும் உடம்புகளும் பிறரால் அழித்தல் கூடாமையான், அவற்றுக்குக் கேடுசூழ்வாராக நினைத்துச் சிலரை வெறுத்தல் வேண்டா எ-து.

இதனைகலம்:—

[1] படமாடக் கோயில் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பற்கங் காகா
நடமாடக் கோயில் நம்பற்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்கங் காமே.

என்றற்றொடக்கத்துத் திருமொழிகளால் இறைவற்குப் படமாடுங் கோயில் நடமாடுங் கோயிலென்று இருவகைக் கோயில்கள் உள என்பது பெறப் படுதலின், ஈண்டு ஆலயமென்றது அவற்றுட் படமாடுங் கோயிலாகிய கல் முதலியவற்றுல் செய்த கோயிலன்றி நடமாடுங் கோயிலாகிய உயிருடம்பினை எனக் கொள்க. மோசம் – அழிவு. மோசமென்புழி நின்ற மகரம், வகரம் வரக் குறுகுதலின் அலகுபெறுதாயிற்று. வரும் வெண் பாவினும் ஈதொக்கும். தான் அசைநிலை. ஆனுலென்பது தெளிவின்கண் வந்தது. [2]"காண்பவன் சிவனேயானல்" என்புழிப்போல. இஃது, உயிருடல்களை யோம்புதற்கண்ணும் நஞ்செயலறுதல் வேண்டுமென்பது உணர்த்தியவாறு.

[3] தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி–தின்னுயிர் நீக்கும் வினை.

என்றருளியதுங்காண்க.

---

105. If we believed the Lord a weakling
We might be afraid of danger to the Temple,
If it is the Lord Himself who buildeth
And having built, destroyeth,
Why should we turn to others and blame them?

[1] திருமந், மகேசுவர, பா, 1. [2] சித்தி, 2, பா, 27. [3] குறள், பா, 327,

தேசஞ் சிவாலயங்கள் சேர வலையொரு
மோசம்வந்த தையோ முதல்வனே—தேசத்து
மன்னைவெறுப் பேனோ வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ உரை. (௱சு)

இதன் பொழிப்பு:— இறைவனே, உலகமுழுவதும் அல்லற்பட்டழுங்குமாறு இஞ்ஞான்று சிவாலயங்களில் ஓர் அழிவுதோன்றுகின்றது. அந்தோ! அதற்கு அவற்றை அழியாவாறு காக்கற்பாலனாய மன்னன் அங்ஙனங் காவாமைபற்றி அவனையே நோவேன்கொல்லோ! அன்றி உலகினர்க்கு அவர்வினையை யறிந்து ஊட்டுவிக்கின்ற உன்னையே நோவேன் கொல்லோ! இன்னது செய்வதென்றறியேன் எ-து.

இதனகலம்:— தேசம் சேர வலையச் சிவாலயங்கள் ஒருமோசம் வந்தது எனக்கூட்டி ஆலயங்கள் என்புழி ஏழாவது விரித்துரைக்க. ஈண்டு ஆலயமென்றது படமாடுங்கோயிலை. இறைவன் திருக்கோயிலிற் குறையுண்டாயவழி உலகங் கேடுறுமென்பது,

[1] ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் றானே.

எனவும்,

[2] முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளங் குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
யென்னரு நந்தி எடுத்துரைத் தானே.

எனவும் வரும் திருமந்திரங்களானும், உலக அநுபவத்தானும் உணர்க. ஓகாரங்கள் ஐயப்பொருள. வினையை ஊட்டுவிக்கும் என்றடைகொடுத்ததனால் உன்னையே வெறுக்கற்பாற்று இந்நிகழ்ச்சியெனக் குறித்தவாறாம்.

---

106. Supreme One, a danger hath come, alas,
The country and the temples are together tossed.
Shall I blame the country's king for that
Or shall I blame Thee that feedeth the karma
That is to come?

[1], [2] திருமந், திருக்கோயி, பா, 3, 4.

எனவே, இங்ஙனம் சிவாலயங்களில் மோசமுண்டாதலைத் தேசங்கெடுதற்கு உற்பாதமாகவுணர்தல் வேண்டுமென்றதாயிற்று.

இது மேல் நடமாடுங் கோயில்பற்றிய வெறுப்புணர்ச்சியை அவனருளுணர்ச்சியால் தவிர்த்து, எஞ்சிநின்ற படமாடுங் கோயில்பற்றிய வெறுப்புணர்ச்சியையும் அவ்வாற்றால் தவிர்க்குமுகத்தான் அறப்புறங் காவற்கண்ணும் நஞ்செயலற்று நிற்றல் வேண்டுமென்ப துணர்த்தியவாறு.

அற்றேல் இஃது, "ஈசர் - மருவும்பெரும் பூசை மறுத்தவர்க் கோறல் முத்தி - தருபான்மைய" தென்னுஞ் சுருதியோடு முரணும் பிறவெனின்; முரணாது, ஆண்டு அது, வெகுளிமுதலிய காரணங்களான் இறைவன் வழிபாட்டிற்கு அழிவுசெய்ய மூற்பட்டோரை அடர்க்கும் ஆற்ற லுடையார் அது செய்யும்வழிப்படும் பயனுணர்த்திற்றெனவும், ஈண்டு இது, அறியாமையான் இறைவன்வழிபாட்டினைச் செய்யாது புறக்கணித்துப் போவார்மாட்டு அறிந்தார் அடையும் உள்ளநிலை உணர்த்திற்றெனவுந் தெரிந்துகொள்ளப்படுமாகலின் என்க.

இம்முப்பத்தாறு வெண்பாக்களானும் நஞ்செயலற்றுத் திருவருள் வழி நிற்றல் வேண்டுமென்பது பல்லாற்றானும் வகுத்துணர்த்தப்பட்டது.

---

துரத்தியுன்னை ஆசை தொடராமல் என்றும்
விரத்தியினால் ஆங்கவற்றை விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப்ர பஞ்சமெலாம்
பொய்யடா பொய்யடா பொய். (௱எ)

இதன் பொழிப்பு:— உலகங்கள்யாவும் கனப்போல உளவாய்த் தோன்றிச் சடுதியின் மறைந்துபோதலுடையவாகலின் அவற்றின்மேல் எழும் அவா நம்மைப் பற்றாதவாறு நீக்கி, அவற்றை உவர்த்து விடுத்து மெய்யாகிய பரம்பொருளிடத்து எஞ்ஞான்றும் நீங்காத அன்பு செய்வா யாக எ-து.

---

107. That desires may not drive and pursue thee
Leave them always with disgust,
Love the Supreme, I say, love Him.
All the universe is lie, lie, lie, I say.

இதனகலம்:— "பிரபஞ்சமெல்லாம் சேரப்பொய்யாகலின் ஆசை உன்னைத் தொடராமல் துரத்தி அவற்றை விரத்தியினுல் விட்டு, என்றும் பரத்தில் அன்புசெய்" எனக்கூட்டுக.

விரத்தி - உவர்ப்பு. விரத்தியினுல் விட்டு என்புழி ஆல் ஏதுப் பொருட்கண் வந்தது. ஆங்கவற்றை யென்பது ஒருசொன்னீர்மைத்து. அடாவென்பது ஏடாவென்பதன் மரூஉ. அடுக்குக்கள் வலியுறுத்தற் பொருள. பொய் என்றது நிலையாமைபற்றி. பிரபஞ்சத்தைப் பொய் எனவே பரம் மெய்யென்பது தானேபெறப்படும். நிலைபேறுடைய இன்பத்தை வேண்டின் நிலையில்லாதபொருளை விடுத்து, நிலைபேறுடைய பொருளைப் பற்றுதல் வேண்டுமென்பார், இங்ஙனங்கூறினுர்.

[1] பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப் - பற்றி விடாஅ தவர்க்கு.

என்றருளியது காண்க.

[2] பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப் - பற்றுக பற்று விடற்கு.

என்றமையின் பற்று நீங்குதற்கும் பரத்தில் அன்புசெய்தல் தானே உபாயமாதலுணர்க. மேற்கூறிய திருவடிஞானத்திற்கு ஏதுவாதனைக்கி, இதுமுதற் பதினன்கு வெண்பாக்களால் உலகப்பற்றினை விடுமாறு கூறுகின்ருர்; இதனைத் துறவின்பகுதியென்ப.

---

அனைத்துலகு நம்பால் அநுக்கிரகம் பெற்றென்
அனைத்துலகு நம்வசமாய் ஆயென் — அனைத்துலகுங்
கொண்டாடில் என்னைவினைக் கொத்தறுத்துப் பேரின்பங்
கண்டாடில் அன்ருே கதி. (௱அ)

108. What though the whole world be obliged to us for favours,
What though the whole world come into our possession ?
What though the whole world sing praise unto us ?
Salvation cometh only - doth it not ?
When the karmic cluster is cut off
When the great Joy is found and bathed in.

[1], [2] குறள் பா, 347, 350.

இதன் பொழிப்பு:— பிறரெல்லார்க்கும் உய்தியை விளக்கி, அதனால் அவரெல்லாரும் நம் வழியராய் ஒருங்கேபுகழ உயர்ந்து நின்றோமாயினும் அதனான் வினை நீங்குதலில்லை. ஆகவே வினையை யறுத்து வீட்டின்பமுற்றவழியே நமக்குய்தியுண்டாம் எ-து.

இதனகலம்:— சொற்பொருட்பின் வருநிலை. இது கல்வி முதலிய வற்றால் புறத்தார்க்குப் பயன்பட்டவழியும் அகத்துப் பற்றறாதார்க்குப் பயனின்றென்பது உணர்த்தியவாறு.

---

அறிவிழந்து நின்றசுக ஆனந்தத் துள்ளே
குறியிழந்து நின்று குலாவிப் —பிறியா
திருந்தாற் பிறப்பறுமோ? விச்சைமால் கொண்டு
திரிந்தாற் பிறப்பறுமோ? செப்பு. (௱௯)

இதன் பொழிப்பு:— உலகப்பற்றற்றுச் சிவத்திலழுந்திப் பின் வாதனைவயத்தானும் அப்பற்றுத் தோன்றாது நீங்கியவழியே பிறப்பறுவதாக, அப்பற்றில் அழுந்தியே நிற்பார்க்குப் பிறப்பறுதலெவ்வாறு! எ-து.

இதனகலம்:— "இழந்து நின்று குலாவியிருந்தால்" எனவும், "திரிந்தால்" எனவும் போந்த சொற்குறிப்புக்களான் அவை அப்பொருள் பயந்துநிற்றலை முறையே எடுத்தலோசை படுத்தலோசைகளானுங் கூறிக் காண்க. வாதனைவயத்தாற் றோன்றும் பற்றும் பிறப்பிற்குக் காரணமாம் என்பதும், அதனான் அஃது அற்றம்பார்த்துவந்து கெடுப்பதொன்று என்பதும், அதனான் அதனைக் குறிக்கொண்டுகாத்தல் கடனென்பதும்,

[1] அவாவென்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

எனவும்,

109. When will the birth be cut off, say,
When one, having lost perception through the body
Dwelleth without separation mingling in the blissful joy
That standeth beyond when all knowledge is lost,
Or when one roameth about maddened with desires ?

[1] [illegible] 36

[1] அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

எனவும் கிளந்தோதியவாற்றானறிக.

---

எத்திசையும் எவ்வுலகும் எத்தொழிலும் எப்பயனும்
நித்தியமென் றெண்ணின் நிலையாதே—புத்தியினாற்
கண்ணாடி யிற்றோன்றி மாய்ந்துவிடுங் காணிவற்றைக்
கண்ணாடி யிற்கனவிற் காண். (௱௧௰)

இதன் பொழிப்பு:— உலகிற் காணப்படுவன பலவும் உயிர்கட்குக் களைகணாவதுபோற்றோன்றிப் பின் விரையக்கெடுதலின் அவை நின்மாட்டுளதாகும் இன்பவேட்கையைத் தணிப்பனவல்ல ஆகலான் அவற்றைத் தோற்றமாத்திரையாற் காணப்பட்டுப் பயன்படாதொழியும் கண்ணாடிக்கண் உருவமும் கனவும்போலக்கண்டு பற்றுச்செய்யாதொழிக எ-து.

இதனகலம்:— கண்ணாடி ஆகுபெயர். முதற்கண் அசைநிலை. புத்தியினாற் காண் என இயையும். ஐந்தனுருபுகள் ஒப்புப்பொருள்.

---

110. Every quarter, every world, every deed, every consequence
Thinkest thou eternal ?—No, they are transient.
They appear like shadows in a mirror
By the working of thy mind and vanish.
Consider them as things seen in a mirror of dream.

[1] குறள், பா, 366.

எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்புறா—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது. (௱௧௧)

இதன் பொழிப்பு:— நிலையுடையனபோலத் தோன்றி நிலையா தொழியும் உலகியல்களெல்லாம் அப் பெற்றியவென்பது அறிவின்கண் அநுபவ மாகத் தோன்றுந் துணையும் கல்வியானுங் கேள்வியானும் போகம் முதலிய முயற்சிகளானும் இன்பநிலை எய்துமாறில்லை எ-து.

இதனகலம்:— உம்மைகள் சிறப்பும்மை. தானென்பது எழுவாய்ப் பெயர். உறுதென்னும் ஒருமையீறு தொக்கது. சித்தமே விளிப்பெயர். விடுதல் ஈண்டு அழிதல். கல்வி முதலியன பற்றறுதியைச் செய்யுமுகத்தான் இன்பநிலைக்குக் காரணமாவனவன்றி நேரே காரண மாவன அல்லவாகலின் அஃதெய்தாதபொழுது அவற்றாற்பயனில்லை யாயிற்று.

---

மின்போலத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
என்போ லிகள்திரமென் றெண்ணுவார்—தன்போதம்
இல்லார் சிவபோகம் என்றும் அருந்தியிடு
நல்லார் திரமிதுவென் னார். (௱௧௨)

111. However much one may learn,
However much one may hear,
However much one may accomplish,
Joy will not come, O mind,
When all worldly life, that seemeth so real
Is not realised untrue.

112. All worldly life
Like a lightning flash,
Fools like me take
To be for ever lasting.
But those free from self-born knowledge,
The good that always enjoy Sivabhoga
Never say that it is everlasting.

23

இதன் பொழிப்பு:— கடிதிற்றோன்றி மாய்தலின் மின்னலோடு ஒப்பதாகிய உலகியலை நிலையினவென மயங்குதல் மயக்க உணர்வுடையார் செயலாவதன்றித் திருவடிஞானம் கைவரப்பெற்ற மெய்யுணர்வுடையார் செயலன்று என்றவாறு.

இதனகலம்:—

[1] நில்லாதவற்றை நிலையினவென் றுணரும், புல்லறி வாண்மை கடை என்றார் திருவள்ளுவநாயனார்.

[2] செடிகளோய் யாக்கையம் பாம்பின்வாய்த் தேரையாய்ச் சிறுபறவை
கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புற லாமென்று கருதினாயே.

என்றதும் இதுபற்றி.

---

தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும்
ஆசையால் நெஞ்சே அலையாதே—நேசப்
பொருப்பானை நின்னறிவிற் போக்கு வரவற்
றிருப்பானைப் பார்த்தே இரு. (௱கங)

இதன் பொழிப்பு:— எனதென்னும் பற்றுக்கு எதிர்ப்புலமாய தேச முதலியவற்றைத் தனித்தனி எனது எனது என்று பற்றுதலானுளதாவது அலமரலையாகலின், அஃதொழிந்து பேரருளுடையனாய் அறிவுக்கறிவாய் நீக்கமற நிற்கும் இறைவனிடத் தன்புசெய்து அதனால் இன்புற்றிருத்தலே செயற்பாலது எ-று.

---

113 Country, town, name, acres,
Felicity, rank and caste,
In desires such as these
Wander not, O, heart,
Remain steadfastly gazing—
On Him, the mountain of love
That dwelleth in thine intelligence
Without going in or coming out.

[1] குறள், பா, 334. [2] சம்பந், ஆரூர், பா, 6.

இதனகலம்:— பெயர் - பொருள்; "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" என்புழிப்போல. பெயர் பேரென மரீஇயிற்று. சீர் – புகழ். வரிசை – பிறரொடு நோக்கும்வழித் தனக்குளதாம் மேன்மை. இவற்றைப் பற்றுதலாவது கெடாது காக்கக் கருதல். நேசம் ஈண்டு அருள். பொருப்பு – மலை. நேசப்பொருப்பாளை என்பது உருவகமடியாகப் பிறந்த உவம வினைக்குறிப்புப்பெயர். [1]"நோயு மின்பமும்" என்னும் சூத்திரத்தில் நெஞ்சினை உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல் கூறலமைதலின் நின்னறிவிலென்றார். இது தன்பொருட்டன்றித் தன்னொடு தொடர் புடையார்பொருட்டுக் கொள்ளும் பற்றும் விடற்பாலதே என்றவாறு.

---

ஆகம் பகையாவ தன்றிப் பகையுண்டோ
மோகந் தவிர்ந்த முனிவோர்க்கிங்—கேகன்
இருவர் அறியாத ஈசனருள் அல்லால்
ஒருவர்துணை உண்டோ உரை. (௱௧௪)

இதன் பொழிப்பு:— மயக்க உணர்வுநீங்கிய சீவன்முத்தர்க்கு உடம்பையன்றி வேறு பகையும், இறைவனையன்றி வேறு உறவும் இல்லை எ-து.

இதனகலம்:— பசியும் நோயும் எஞ்ஞான்றும் விளைத்தும், அற்றமுண்டாயவழிக் காம வெகுளி மயக்கங்களை விளைத்தும் மெய் யுணர்வை அழிக்கவல்லதாகலின், உடம்பு பகையாதலும் தோன்றாத் துணையாய் உடனின்று அப்பகையான்வரும் கேட்டினைப் போக்கிக் காக்கவல்லனாதலின் இறைவன் உறவாதலும், ஏனையோர் அவ் இருதிறனும் மாட்டாமையிற் பகையும் உறவும் அல்லராதலுங் காண்க.

[2] மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பு மிகை.

என்றதும்,

---

114 To the wise, free from delusion,
Is there any foe except the body ?
Is there any help except the Grace
Of the Lord, the One Unknown to the two Gods ?

[1] தொல், பொருள், பொருளியல், சூ, 2. [2] குறள், பா, 345,

[1] சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

என்புழி மெய்ப்பொருளைச் சார்பென்றதுங் காண்க.

[2] தினைத்துணை யேனும் பொறேன்துய ராக்கையின் திண்வலையே.

[3] திருப்பாதிரிப் புலியூர்த்
தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்னடி யோங்களுக்கே.

என்றற் றொடக்கத்துத் திருமொழிகள்பற்றி அவை அவ்வாறுதல் அநுபவமாமாறு உணர்க.

இஃது, யானென்னும்பற்றினல் உளதாகுந் தீங்குணர்த்தியவாறு. என்னை? யானெனப்படுவது உடம்பாகலின்.

---

அளவிலாச் செல்வத் தடைந்தாலும் ஆகத்
தளவிலாச் சித்திகளுண் டாயும்—அளவில்கலை
ஆய்ந்தாலும் என்னைசுக ரல்லார் சிவானந்தந்
தோய்ந்தார்கள் அன்றோ சுகர். (௱கரு)

இதன் பொழிப்பு:— சிவப்பேறு ஒன்றன்றிச் செல்வங்களும் சித்திமுதலியனவுமெல்லாம் இன்பந்தருவன அல்ல எ-து.

இதனகலம்:— ஆகத்தென்றது உடம்பொடு கூடியிருக்குங்கால் என்றவாறு. அதனை எல்லாவிடத்துங் கூட்டியுரைக்க. சுகத்தர் என்புழி நின்ற அத்துச்சாரியை தொக்கது.

---

115 What though they get at limitless wealth
And achieve limitless powers in the body
And study limitless forms of art ?
They are not the Happy.
They alone are the Happy
Who are immersed in Siva's bliss.

[1] குறள், பா, 359. [2] திருவாச, நீத்தல், பா, 39. [3] அப்பர், திருப்பாதிரிப், பா, 1.

இது செல்வம் முதலியவற்றை இன்பந்தருவனவாகக் கருதிப் பற்றுதல் கூடாதென்றவாறு.

---

ஆகாத காரியஞ்செய் தாஞ்சுகமும் ஆங்கதனாற்
போகாத துக்கம் பொருந்துவதும்—ஓகோ
உரைக்கிலணு வுக்கும் உயர்ந்தமா மேரு
வரைக்கும் நிகரா மதி. (௱கசு)

இதன் பொழிப்பு:— மெய்யுணர்வுடையோர்க்கு ஆகாத மயக்கச் செயல்களைச் செய்து அதனால் அடைகின்ற இன்பத்தையும் துன்பத்தையும் நோக்குழி அவை முறையே அணுவுக்கும் மேருவுக்கும் நிகராம் எ-து.

இதனகலம்:— இது நிரனிறை. ஆஞ்சுகமென்புழியும் பின்னதற் கேற்பச் சுகத்திலாவதும் என உரைக்க. ஓகோ என்பது [1]"தெளிவின் ஏயுஞ் சிறப்பின் ஓவும் - அளபினெடுத்த இசைய வென்ப" என்பதனால் "ஓஒ பெரியன்" என்றாற்போல நிற்கும் சிறப்போகாரத்தின் மருஉ என்க.

இஃது, உலகவின்பம் மலையைக் கல்லி எலியைப் பெறும் முறைமைத்தாய் முயற்சியின்கண்ணும், நுகர்ச்சியின்கண்ணும் மிக்க வருத்தத்தாற் சிறிதின்பமும்,

[2] முற்பயக்குஞ் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

---

116 When you compare the pleasure gained
By doing a wicked deed
To the never-leaving sorrow
That springeth from that deed,
Oh, Oh, it is like the atom
To the great and lofty Meru.

[1] தொல், சொல், இடை., சூ, 13. [2] நீதிநெறி, பா, 3.

என்றாங்கு அந்நுகர்ச்சிக்குப் பின்னர்ப் பேரிடரும் விளைத்துநிற்றலின் அதன்கண் பற்றுச் செய்யற்க என்றவாறு. "இன்போ ரணுவாம் இடரதற்கு மாமலையாம் – புன்போகம் வேண்டிப் புலம்பாதே" என்றார் பிறரொருவருமென்க.

---

பொய்யில்வருந் துன்பம் புகுந்தறிந்தும் பூரணமா
மெய்யில்வரும் இன்ப விளைவறிந்தும்—ஐயோ
தெளியாத தென்னநலந் தீங்குகண்டு சற்றுங்
களியாத தென்னமயக் கம். (௱௧௭)

இதன் பொழிப்பு:— நிலையாமையுடைய பொருள்கள் காரணமாகத் துன்பம் விளைதலை அநுபவத்தானும், நிலையுடைய பொருள் காரணமாக இன்பம் விளைதலை அநுபவமுடையராது அருள்மொழியானும் பொருந்துமாற்றானும் இனிதுணரப்பெறலும் அந்நிலையாமையுடைப்பொருளன்றி நிலையுடைப்பொருளே நமக்குப் பற்றாவதென்று தெளியாமையும், அந்நிலையாமைப் பொருள்பற்றி நன்மையுந் தீமையும் மாறிமாறி வரும்வழி அஃது அவற்றதியல்பென்று கண்டு மகிழ்ந்து இருத்தலின்றி அவற்றில் அழுந்தி வருந்துதலும் எத்துணையோ ரறியாமை! எ-து.

இதனகலம்:— பொய் மெய் என்பன ஆகுபெயர்கள். இல் ஒப்புப்பொருளில் வந்த ஐந்தனுருபு. இது, நிலையுடைப் பொருளையறிந்து அதனைப் பற்றுமுகத்தான் நிலையாமையுடைப்பொருளை விடுக என்றவாறு.

---

117. Having known by experience
The pain that cometh from falsehood
And fully known the harvest
Of happiness coming from truth,
Alas, how can they be without understanding ?
And having seen the good and evil,
What illusion keepeth them from rejoicing even a little ?

ஆகம் சிறைச்சாலை அக்கரணங் காவலாள்
போகம் புவனம் பொருந்துமிடம்—ஓகோ
இதனுட் படுமுயிர்கட் கீடேற்றஞ் செய்வான்
அதனுக் கிறைவன் அரன். (௱கஅ)

இதன்பொழிப்பு:— தனுவுங், கரணமும், போகமும், புவனமும், இறைவனும் முறையே சிறைக்கூடமும், அதனைக்காக்குங் காவலாளரும், சிறைத்தண்டமும், அதனை அடையும் இடமும், அதனைச் செய்விக்கும் அரசனும் போல்வர். ஆதலின், அச்சிறைவீடு செய்யவல்லான் இறைவனே எ-து.

இதனகலம்:— அதனது வினையைச்செய்த உயிரை அவ் வினைக்கேற்பவந்து வியாபகவுணர்வைப் பொதுவகையானும், சிறப்புவகையானும் தடைசெய்து தம்மளவிலே நிறுத்தலின் உடம்புங் கரணங்களும் குற்றஞ் செய்தாரைப் புறம்போகாது தடுக்கும் சிறைக்கூடமும், அதனைக்காக்குங் காவலாளர்களும் வினைக்கேற்ப அவ்வுடம்பு நிலைக்களனாக வருதலின் போகங்கள் அச் சிறைக்கூடத்தினெய்துந் தண்டத்துன்பங்களும், அவ் உடம்பிற்கும் போகங்கட்கும் நிலைக்களனாதலிற் புவனங்கள் அத் தண்டத்தையெய்துமிடமும், அவையெல்லாம் இறைவன் ஆணைவழி நடத்தலின், அவன் தனது ஆணையால் தண்டமுதலியவற்றைச் செய் விக்கும் அரசனுமாதல் கண்டுகொள்க. போகமென்பதனை இருகாலோதுக. இது அது என்றது தண்டத்தை.

இது, முதல்வன் ஆணைவழிநிற்றலே பற்றுவிடுதற்கு உபாயம் என்றவாறு.

---

118. The body is tho prison housə
The karanas are the guards
The world is the appointed place of suffering
Oh, oh, to the souls shut up in this prison,
Its Lord, Hara, is the deliverer.

அதிட்டானம் ஈசன் அருளன்றி மற்றை
அதிட்டானம் எல்லாம் அநித்தம்—அதிட்டானம்
பொய்யென் றறியாமற் பூதலத்து நெஞ்சமே
மெய்யென் றுழல்வதெல்லாம் வீண். (௱௧௯)

இதன் பொழிப்பு:— இறைவன் திருவருளாகிய ஆதாரமன்றி மற்றை ஆதாரங்களெல்லாம் நிலையற்றனவாகலின் அவற்றை அப்பெற்றியனவென்றுணராது நிலையுடையனவாகக்கொண்டு அக்கோட்பாட்டினடியாகப் பலவுஞ்செய்து திரிதலெல்லாம் பாழுக்கிறைத்தல்போலும் பயனில்லாத செய்கைகளாம் எ-று.

இதனகலம்:— அதிட்டானம் ஈண்டு ஆதாரமென்னும்பொருட்டு. சொற்பொருட்பின் வருநிலை. நெஞ்சமே ஈசனருள் அதிட்டானமன்றி மற்றை அதிட்டானமெல்லாம் அநித்தமாகலின் அவ்வதிட்டானங்களைப் பொய்யென்றறியாமல் மெய்யென்று பூதலத்தில் உழல்வதெல்லாம் வீண் என இயைக்க.

இதுவும் அவனருளைத் தாரகமாகப்பற்றி ஏனைய பற்றுக்களை விடுதல் வேண்டுமென்றவாறு.

---

நின்னை மதிக்கின் நினக்கதிகர் செல்வநினை
நின்னை அறிஞனென நீநினையின்—நின்னிற்
சிறியார் வறுமைநினை சிந்தைபுக என்றும்
குறியா இடும்பைதுக்கம் கோள். (௱௨௰)

---

119. Except the support of the Grace of the Lord
All other supports do not endure.
Not realising their unreality,
To consider such supports as real in this world,
And fret about them, is all futile, O heart.

120. If thou regard thyself great
Think of the wealth of thy superiors
If thou thinkest thyself poor
Think of the poverty of those humbler than thou,
Then suffering and sorrow will never
Think of entering thy mind.

இதன் பொழிப்பு:— உலகியலிற்பட்டுத் துன்புறுதல் வாழ்வில் மயங்கித் தருக்குதலானும், தாழ்வில்மயங்கி வருந்துதலானுமன்றி இல்லையாகலின், அவற்றைறமுறையே அந்நிலைகளில் தம்மின் மேலாயினரை யுங் கீழாயினரையும் நினைக்குமாற்றான் நீங்கி, அத் துன்பத்தை விடுதல் வேண்டும் எ-து.

இதனகலம்:— இதனானே, அத்தருக்கும் வருத்தமும் மேற் கூறியவாற்றானேக்காது மாறிநோக்குதலான் ஆவனவென்பதூஉம், இங்ஙனமாகவே, அவை மயக்கவுணர்வாதலன்றிப் பிறிதில்லை என்பதூஉம் பெற்றாம். மதிக்கினெனவும், நினையினெனவுங் கூறியதூஉம் இதுபற்றி யென்க. இடும்பை – இடுக்கண்; அது கருதியது முற்றாவாறு இடைப்புகுந்து விலக்குவது. அதனை இடையூறென்ப. துக்கம் அதுபற்றிவரும் மனக் கவலை. கோள் அதுபற்றியெழுந் தீயநினைவு. இடும்பையுந் துக்கமுங் கோளும் நின் சிந்தைபுக என்றுங் குறியா என்க. குறித்தல் கருதுதல் கருதாவென்றது இலக்கணை.

இது, உலகியலில் தொடக்குண்ணுமைக்கு ஓர் உபாயங் கூறிய வாறு. இங்ஙனம் இப்பதினைன்கு வெண்பாக்களானும் உலகப்பற்றை விடுமாறு உணர்த்தப்பட்டது.

---

அநித்தியத்தை நித்தியமென் றுதாிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவார்—தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்தில் மூழ்கி மலத்தைஅறுத்
தானந்த மாயமுழுந்து வார். (௱உக)

இதன் பொழிப்பு:— தனித்திருந்து நிட்டைகூடிச் சிவத்திலழுந் திச் சிவானந்தவடிவாய் நிற்குஞ் சீவன்முத்தர் உலகிலுள்ள நிலையில் பொருளையே நிலையுடையன எனப்பற்றிப் பிறவியிலழுந்துவாரோடு ஒரு ஞான்றுங் கூடார் எ-து.

---

121. They mix not nor mingle with wicked men
Who uphold the fleeting as everlasting.
Keeping alone, immersed in Sivam, the end of silence
Cutting the malas off, they plunge themselves in Joy.

இதனகலம்:— தாமேயன்றித் தம்மொடு தலைப்பெய்தாரையும் பிறவிக்கடலில் வீழ்த்துதலிற் பொல்லா மனிதரென்றார். மோனவந்தம் என்பது குறைந்துநின்றது. மலமென்றது வாதனையை. அழுந்துவார் கூடார் என்றதனன் அக்கூட்டம் கேடுபயத்தலை உணர்ந்து அது செய்யா ரென அவரது சிறப்புணர்த்தியவாறு. அவருடன் கூடாமை கூறவே தாம் அதுசெய்யாமை சொல்லவேண்டாதாயிற்று. இதுமுதல் நான்கு செய்யுட் களான் மேலுணர்த்திய நெறிக்கட்சென்ற பெரியாரது சிறப்புணர்த்து கின்றார். இதனை அறிவோர் புகழ்ச்சியென்ப. இஃது, இவைபுபற்றி உலகியலின்கட் பற்றுவிட்டாரது சிறப்பு உணர்த்தியவாறு.

---

தாகமறந்து சதுர் மறந்து தான்மறந்து
தேகமறந் தட்டமா சித்திமறந்—தாகத்தின்
வந்ததறி யாதிருந்து மாறாச் சிவானந்தம்
சந்ததம்வாழ் வார்க்கார் சரி. (௱௨௨)

இதன் பொழிப்பு:— உடம்பு காரணமாகவரும் வேறுபாடுகளையும் உலகியல் காரணமாகவரும் பெருமை முதலியவற்றையும், யோகமுதலிய வற்றானெய்தும் அரியபேறுகளையும் நோக்காது நீங்காத சிவானந்தத்தின் கண்ணே எஞ்ஞான்றும் இருப்பாரோடொப்பார் ஒருவருமில்லை எ-து.

இதனகலம்:— தாகம் பல்வகை வேட்கை. தானென்றது தானென்னும் உணர்வை. ஆகம் – உடம்பு. வந்ததென்பது சாதி ஒருமை செய்யுள்நோக்கிக் கூறியவற்றை முறையறிந்து வைத்துரைத்துக்கொள்க

இது, நிட்டையில் நீங்காது நின்றாரது சிறப்புணர்த்தியவாறு.

---

122. Who can be the equals of those who,
Forgetting the thirst of desires,
Forgetting their own ingenuity,
Forgetting the I, forgetting the body,
Forgetting the eight great attainments,
Remaining without feeling the sojourn in the body,
Always live in the unchanging joy of Siva ?

உள்ளமல நீங்கி ஒழியாச் சிவானந்த
வெள்ளந் துளைந்து விளையாடும்—பிள்ளைகாள்
அத்துவித மானீர்நம் மாகம் பிரிந்தோமென்
றித்துவிதம் எண்ணுவா னேன். (கஉஙு)

இதன் பொழிப்பு:— மலத்தினை வாதனைதானுமில்லாது நீங்கிச் சிவானந்தப்பெருக்கில் திளைக்கின்றார்க்குத் தமது பண்டைநிலையின் இழிபும் இந்நிலையதுயர்வுந் தோன்றுமாயின் அதுவும் அவர்கட்கேலாது எ-து.

இதனகலம்:— இதனை எண்ணுவானேன் என்றது அதனை மறத்தல் இயலாமையாலோ வென்றவாறு. இதனானே, அதனை மறந்தாரது சிறப்புணர்த்தப்பட்டதென்க. பிள்ளைகளைப் பல்வகை அடைமொழிகளாற் சிறப்பித்ததுமதுபற்றி. இத்துவிதமென்புழித் துவிதம் அந்நியமென்னும் பொருட்டு. அது சிவானந்தநுகர்ச்சியின் நீங்குதலைக் குறித்தது. இது, நிட்டை முதிரப்பெற்றாரது சிறப்புணர்த்தியவாறு.

---

அறிவாய் அறிவிழப்பில் ஆகின்ற இன்பச்
செறிவாய்ச் சுகமாய்த் தினமும்—பிறியா
திருந்தங் கதீதமாய் ஏய்ந்தசிவா னந்தம்
பொருந்துவார் முத்தரெல்லாம் போய். (கஉச)

---

123. O, Ye children ! freed from the malas of the mind
Who gambol plunging in the unceasing flood of Sivananda
And have become non-dual
Why think ye of this dualism
That ye have separated from your bodies ?

124. Becoming intelligence, becoming that intensity of joy
That cometh with the loss of consciousness of knowledge,
Becoming bliss, all muktas go,
And, ever remaining without severance, join
With Siva's joy that is above all.

இதன் பொழிப்பு:— சீவன் முத்தரெனப்படுவார் உலகர் செயல் எல்லாம் நீங்கி ஞானச்செய்திகளின் முற்றுப்பேறுடையராய்ச் சிவானந்தத்தினையெய்தி நின்றோர் எ-து.

இதனகலம்:— எல்லாம் என்றது உலகியலை. இது, சீவன் முத்தரது சிறப்புணர்த்தியவாறு. இங்ஙனம் இந் நான்கு வெண்பாக்களானும் மேலுணர்த்தப்பட்ட நெறிக்கட்சென்ற பெரியாரது உயர்வு கூறப்பட்டது.

---

தனையறியார் ஈசன் தனையறியார் பாச
வினையறியார் ஆனந்த மேவார் — தனைஅறியுஞ்
சிட்டர்தமக் கில்லாத தீங்குரைப்பர் பொல்லாத
துட்டர்தமக் குள்ள தொழில். (௱உ௫)

இதன் பொழிப்பு:— முப்பொருளின் இயல்புகளை உண்மையானுணர்தலும், அதனாற் பாசநீக்கமுஞ் சிவப்பேறும் எய்துதலுமின்றி அதனை யுடையராய நல்லார்கள்மேல் அவர்மாட்டில்லாத குற்றங்களை ஏற்றி இகழ்ந்து கூறித்திரிதலே தீயார்செய்யுஞ் செயல் எ-து.

இதனகலம்:— தனையறியார், தனையறியும் என்புழித் தன் என்பன ஒருமைப் பன்மை மயக்கம். ஏனைத் தன் சாரியை. சிட்டர் தமக்கில்லாத தீங்குரைத்தலை,

[1] உடுப்பதூஉம் உண்பதூஉம் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

125. They know not the soul, they know not the Lord
They know not the action that binds,
They gain not the joy, they slander the good
That have the knowledge of the soul realised.
Such is the work of very wicked men.

[1] குறள், பா, 1079.

என்றருளியவாறுபற்றியும் உணர்க. இதுமுதல் ஐந்து வெண்பாக்களால் மேற்கூறிய நெறிகளில் நில்லாதாரது இழிபு கூறுகின்றார். இதனை மடவோர் பழிப்பென்ப.

---

தன்னை அறியார் தலைவன் தனை அறியார்
முன்னை வினையின் முடிவறியார்—பின்னைக்
குருக்களென்றும் பேரிட்டுக் கொள்ளுவர்கள் ஐயோ
தெருக்கள் தனிலே சிலர். (௱௨௬)

இதன் பொழிப்பு:— தெருக்களிலே திரியுஞ் சில மடவோர், முப்பொருளினியல்புகளை நூலளவாகத்தானும் உணராது, அனுபவமுடைய தேசிகரை அடுத்துக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடிச் சிவானுபவம் பெற்ற பெரியார்க்குரிய ஆசிரியரென்னும் பட்டத்தையும் புனைந்துகொண்டு அறியாமாக்களை வஞ்சித்துப் பொருள்பறித்துத் திரிவர். அந்தோ! இஃதொரு கொடுமை இருந்தவாறு என் எ-து.

இதனகலம்:— தன்னையறியார் என்புழித் தன் என்பதும் மேலனபோல பன்மையொருமை மயக்கம். உம்மை குருக்களது உயர்வேயன்றி மடவோரது இழிபுந் தோன்றநின்றது. குருக்களென்புழிக் கள் கோக்கள் மநுக்கள் என்பனபோல உயர்வுகுறித்து நின்றது. இப்பெற்றியராய போலிக்குரவரும் அவரையணுகினோரும் இடருறுதலை,

[1] அருள்மிகுத்த ஆகமநூல் படித்தறியார் கேள்வியையும்
அறியார் முன்னே
இருவினையின் பயன்றியார் குருக்களென்றே உபதேசம்
எவர்க்குஞ் செய்வார்
வரமிகுத்த தண்டலைநீள் நெறியாரே அவர்கிரியா
மார்க்க மெல்லாங்
குருடனுக்குக் குருடன்கோல் கொடுத்துவழி காட்டிவருங்
கொள்கை தானே.

---

126. O ! some there are, wandering in the streets,
Who call themselves gurus, alas,
Who know not the soul,
Who know not the Lord,
Who know not the result of the actions of the past.

[1] தண்டலையார்சதகம், பா, 40.

என இவர்வழியடியாருளொருவர் விளக்கியவாறுகாண்க.

[1] குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே.

என்றார் திருமூலநாயனாருமென்க. இங்ஙனம் இருபாலாரும் தீராத் துன்பத்திற்காளாதலின் அந்தோ என்று இரங்கிக் கூறினாரென்க.

---

வாயுவெளி தானசையா வாறிருந்தாற் போலென்று
நீயதுவும் பூரணமாய் நிற்கவே—காயத்துக்
குள்ளுள்ளே தான்சிவமென் றுற்றுப்பார்ப் பார்ஊசிப்
பொள்ளலால் வான்பார்ப்பார் போல். (௱உஎ)

இதன் பொழிப்பு:— ஆன்மாவும் சிவமும் காற்றும் விசும்பும் போல வியாபகமாய் நிற்பதறியாது அவ்விரண்டனையும் உடம்பளவினதாக வைத்துக் காணலுறுவார்சிலர்; அஃது ஊசியின் காதுத்துளையால் வானத்தளவை நோக்குதல்போலும் எ-து.

இதனகலம்:— அங்ஙனங் காணின் அதனியல்பு காணவாராது என்றவாறு. ஆன்மா வியாபகமாயினும் சிவத்தைப்போலும் வியாபகமாகாதென்றற்கு வாயுவெளிபோல் என்றார். அசையாவாறு என்றது நீங்காவாறென்னும் பொருட்டு. நீ யென்புழியும் எண்ணும்மை விரிக்க. இது, நல்லாசிரியரைஅடையாதார் தம்மையுந் தலைவனையும் உணர்வான்புக்கு இடர்ப்படுதல் கூறியவாறு.

---

127. Like ether and air that remain unmoving
While It and thou ever in perfection stand,
Those who closely searçh thinking
That Sivam could only be within the body
Are like those that look at the sky
Through the eye of a needle alone.

[1] திருமந், அபக்குவன், பா, 1.

கற்கஇடர்ப் பாடுமிகக் கற்றவெல்லாங் கற்றவர்பால்
தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ—நற்கருணை
வெள்ளம் அடங்கும் விரிசடையார்க் காளாகி
உள்ளம் அடங்கவல்ல வோ. (௱உ அ)

இதன் பொழிப்பு:— நூல்களை வருந்திக் கற்றமைக்குப் பயன் இறைவனுக்குத் தொண்டுபூண்டொழுகி மனம் பொறிவழிபோகாது தன் வழி நிற்கப்பெற்றுச் சிவானந்தச்செல்வம் உறுதலேயாகச் சிலர்அது செய்யாது கற்றோர்மாட்டுக் கொண்டதுவிடாது நாய்போற் குரைத்தலையே அதற்குப்பயனாகக் கொள்வர். அஃது அவர்அறியாமையின்வன்மை எ-து.

இதனைகலம்:—

[1] கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன் — நற்றாள் தொழாஅ ரெனின்

என்பவாகலிற் கல்விக்குப்பயன் இறைவற்கு ஆட்செய்தலே ஆதலறிக. "ரகார ழகாரங் குற்றொற்றாகா" என்பது ஓத்தாகலிற் அப்பெற்றி யனவாய ஆரியச்சொல் பெரும்பான்மையும் ரகரத்தின்மேல் உகர மேற்றியுஞ் சிறுபான்மை றகரவொற்றாக்கியுந் திரிக்கப்படுதலின் ஈண்டுத் தர்க்கமென்பதனை எதுகைநோக்கித் தற்கமெனத் திரித்தாரென்க. இனி இஃதறியாதார் ரகரத்தின்மேல் உகரமேற்றித்திரிக்குந் திரிபொன்றுமே திரிபுபோலுமென மயங்கி,

[2] அண்ணலார்தமை அற்சனை புரிய ஆதரித்தாள்.

[3] வானிடத் தவரு மண்மேல் வந்தரன் தனையற் சிப்பர்.

128. Is all that has been learnt
With so much of trouble in learning
Simply for barking like a dog
In disputations with the learned?
Is it not that one may become the servant
Of Him with the spreading locks
Which hold the flood of divine grace,
That one may become tranquil mind?

[1] குறள், பா, 2. [2] பெரிய, திருக்குறிப், பா, 51. [3] சித்தி, சு, 2, பா, 92.

[1] நின்திருவடி யதனை அற்சித்தார்பெறும் ஆரருள்கண்டு
திகைப்பொன் றின்றிநின் திருவடி யடைந்தேன்.

என்றற் றொடக்கத்திடங்களிலெல்லாம் ஆரியமாகவே வழுப்படப் பாடம் ஓதுப; அவர்,

[2] அற்சனை பாட்டே யாகும் ஆதலான் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்.

என்னுமிடத்தையும் மறந்தனர்போலுமென்பது. ஓகாரமிரண்டும் எதிர் மறை. கருணையென்றது சடையாரென்பதனோடு இரண்டாவதன் பொருள் படத் தொக்கது.

இஃது,

[3] ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

என்றாற்போலக் கற்றறி மடவோரது இழிபுணர்த்தியவாறு.

---

அறியார் கனவினிலும் ஆனந்த ரூபம்
அறிவார் தமையும் அடையார்—அறிவார்கட்
கில்லாத தீங்கே எடுத்துரைப்பார் இவ்வுலகில்
பொல்லார் தலையிற் பொறி. (௧௨௯)

129. They do not know the form of joy
Even in their dreams
They do not mix in the company of those
Who have known such form
They slander the wise and talk about
The evils they never did have,
Such is the lot written on the head
Of the wicked in this world.

[1] சம்பந்தர், புன்கூர், பா, 6. [2] பெரிய, தடுத்தாட், பா, 70. [3] குறள், பா, 834.

இதன் பொழிப்பு:— சிவானந்தமென்பதனை உண்மைமாத்திரையானும் கனவிலுமறியார்; அதனை அறிந்தநுபவிக்கும் அநுபூதிமான்களையும் அடையார்; அதுவேயுமன்றி அப் பெரியார்கள்மேல் இல்லாத குற்றங்களை ஏற்றி யெங்குந் தூற்றுவார்; இவை அவர்கட்கு விதியாய் அமைந்தன எ-து.

இதனகலம்.— இங்ஙனந் தூற்றுவார்க்குந் தூற்றப்படுவார்க்கும் உள்ள சிறுமை பெருமைகள்தாம் அணுவுக்கும் மேருவுக்கும் ஒப்பனவாகவும் அவர் அங்ஙனஞ் செய்தற்குக்காரணம் ஊழன்றிப் பிறிதில்லையகலின் அவரை அது செய்யாவாறு தடுத்தல் கூடாது; அதனன் அவர் செயல் ஒருபொருளாகக் கொள்ளற்பாற்றன்று என்பதாம்.

இது, கல்லாரேயாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி நல்லறிவு தலைப்படமாட்டாதாரது இழிபு கூறியவாறு. இங்ஙனம் இவ்வைந்து வெண்பாக்களானும் மேலுணர்த்திய நெறியில் நில்லாதாரது இழிபு உணர்த்தப்பட்டது.

---

நீதியிலா மன்னர் இராச்சியமும் நெற்றியிலே
பூதியிலார் செய்தவமும் பூரணமாம்—சோதி
கழலறியா ஆசானுங் கற்பிலருஞ் சுத்த
விழலெனவே நீத்து விடு. (௱௩௰)

இதன் பொழிப்பு:— நடுவு நிலையைப் பொருந்தாத மன்னர் அரசாட்சிமுதலியன பயனில எ-து.

---

130. Countries ruled by unjust kings,
Austerities of those without ashes on their brows,
The Guru that knoweth not the feet of the Light that is perfection,
And people without purity—
Abandon these as utterly profitless things.

**இதனகலம்:—** இதுமுதற் பத்து வெண்பாக்களால் இந்நூலால் உணர்த்தப்பட்ட சிறப்புநெறி பயன்படுதற்பொருட்டு வேண்டப்படும் பொதுநெறிகள் சிலவற்றைத் தொகுத்து மேலனவற்றது ஒழிபாகக் கூறுகின்றார். இதனைப் பொதுநிலையென்ப. பூதி திருவெண்ணீறு; சோதி சிவபிரான். கற்பு கல்வி. கற்பிலரென்பதனை ஆகுபெயராக்கிக் கல்வி இல்லாதாரது நல்லொழுக்கமுமெனா மேலனவற்றொடு பொருந்தவுரைக்க.

[1] முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.

என்பவாகலின் நீதியிலாமன்னர் இராச்சியம் பயன்படாமையும், [2]"பராவணமாவது நீறு" எனவும், [3]"நீறில்லா நெற்றிபாழ்" எனவுங் கூறுபவாகலின் நெற்றியிலே பூதியிலார் செய்தவம் திருவருளோடுகூடாது பயன்படாமையும்,

[4] அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

எனவும்,

[5] பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்.

எனவும் கூறுபவாகலின் இறைவன் திருவடியை உணராத ஆசிரியன் பொருளின்பங்களும் பிறவியுமாகிய கடலினெடுத்துக் கரைசேர்த்தல் கூடாமையிற் பயன்படாமையும்,

[6] கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளார் அறிவுடை யார்.

என்பனவாகலிற் கல்லாதாரொழுக்கம் பயன்படாமையுங் கண்டுகொள்க.

---

[1, 4, 5, 6] குறள், பா, 559, 8, 10, 404. [2] சம்பந்தர், திருநீற்றுப், பா, 8
[3] நல்வழி, பா, 24.

ஐந்தறிவாற் கண்டாலும் ஆர்எது சொன்னாலும்
எந்த விருப்புவெறுப் பேய்ந்தாலுஞ்—சிந்தையே
பார விசாரத்தைப் பண்ணாதே எதொன்றும்
தீர விசாரித்துச் செய். (௱௩௧)

இதன் பொழிப்பு:— பொறிகளாற் காண்பனவும், பிறர் சொல்லக் கேட்பனவும், உவகை வெகுளிகளைச் செய்வனவுமாயவற்றுள் யாதொன்றனையும் அவ்வாற்றான் எதிர்ப்புலமாயவழி அதனை அங்ஙனம் புலனாயவாறே துணியாது நன்கு ஆராய்ந்து துணிதல்வேண்டும் எ-து.

இதனகலம்:— சிந்தையே என்பது விளி. விசாரம் - கவற்சி. விசாரித்தல் ஆராய்தல். கயிறு பாம்பாயும் பேய்த்தேர் நீராயுந் தோன்றுத லுண்மையின் பொறிகளாற் காண்பனவற்றை அவ்வாறே துணிய லாகாமையும், காக்கை வெளிதென்பாரும் உளராகலிற் பிறர் சொல்வன வற்றை அவ்வாறே துணியலாகாமையும்,

[1] நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்.

என்பவாகலின் இனியவும் இன்னாதனவுமாய்த் தோன்றுவனவற்றை அங்ஙனமே துணியலாகாமையும் அறிக.

---

131. Even though thou hast perceived a thing with all the five of the senses
Whoever it may be who sayeth, whatever it may be he sayeth,
Whatever thing thou likest or dislikest may happen
O, mind, feel not greatly worried.
Do everything after due consideration.

[1] குறள், பா, 881

பரபரக்க வேண்டாம் பலகாலுஞ் சொன்னேன்
வரவரக்கண் டாராய் மனமே—ஒருவருக்கும்
தீங்கு நினையாதே செய்ந்நன்றி குன்றாதே
ஏங்கி இளையா திரு. (௱௩௨)

இதன் பொழிப்பு:— ஒன்றனை விரைந்து துணியாது, அமைந்து நின்றாராய்தலும், பிறர்க்குத் தீங்கு நினையாமையும், பிறர்செய்த நன்றியை மறவாமையும், ஒன்றனைப் பெறவிரும்பி அவ் விருப்பத்தால் உள்ளுடைந்து மெலியாமையும் வேண்டும் எ-து.

---

மிகுத்தகுலஞ் செல்வத்து மேவுவதும் அத்தை
பகுத்துப்பொய் யென்றுவிடும் பாங்கும்—தொகுத்து
விரித்தால்நல் நெஞ்சே மிகுவா ரணத்தை
உரித்தான் செயலென் றுணர். (௱௩௩)

இதன்பொழிப்பு:— குலமுஞ் செல்வமும் முதலாய வாழ்வுகளிற் பற்றுச் செய்தலும், அவற்றின்கட் பற்று விடுதலும், இறைவன்செய லென்று அறிவாயாக எ-து.

இதனகலம்:— அதனை என்பது அத்தையெனத் திரிந்தது. குலஞ் செல்வம் முதலியன எல்லாம் வாழ்வென ஒன்றாயடங்கலின் அத்தை யென்றார்.

---

132. Be not agitated, I tell you many a time
Perceive and search, O, mind, by grades as time goes on
Think no evil to any one
Be not wanting in gratitude
Languish not away in dejection.

133. That any one desireth for noble birth or wealth
Or discardeth them knowing their nature to be unreal,
To put it briefly, my good heart, understand,
It is all the work of Him who flayed the proud elephant.

ஆறாறு தத்துவம்வைத் தத்திலுறை மூர்த்திகள்வைத்
தேறா மலபாகம் ஏறவே—மாறாமல்
உன்னைவிடா தாள்வான் உனைக்கேட்டோ நெஞ்சமே
என்ன விசாரம் எமக்கு. (௱௩௪)

இதன் பொழிப்பு:— நம்மை அநாதியே பற்றிய மலம் பாகமாதற் பொருட்டு முப்பத்தாறு தத்துவங்களையும் அவற்றைத் தொழிற்படுத்துந் தெய்வங்களையும் அமைத்து நம்மை நீங்காது நின்று ஆட்கொள்ளுகின்ற முதல்வன் அங்ஙனம் ஆட்கொள்ளுதல் நாம் வேண்டிக்கொள்ளும் வேண்டுகோள்பற்றியன்றி அவனது கருணையினாலேயாகலின் நமக்குக் கவலை யாதுளது! எ-து.

இதனகலம்:— எனவே அவன் பொய்யைப் பொய்யென்று உணர்த்தி மெய்யை நமக்கு அளிக்குங்காலம் எக்காலமென நாம் கவலுதல் வேண்டா; அது செய்யவேண்டுங்காலத்து இறைப்பொழுதுந் தாழாது அவன் செய்வன்; ஆகலின் அவனை மறவாதிருத்தலொன்றே நாஞ் செய்யற்பாலது என்றவாறு.

---

தானோ வசத்தல்ல என்றறிந்தால் தாரணியில்
ஏனோ பிதற்றிடுவ தேழைநெஞ்சே—தானே
இறவா ததுதான் இறக்க அருளை
மறவா திருசிவமா வை. (௱௩௫)

---

134. Having ordained the thirty six tatvas
And appointed the spirits that dwell in them
He, who is thy Lord, never changing, never leaving thee,
Maketh the malas, that would not ripe, mature.
Doth He do so, consulting thee ?
Why then worry ourselves, O heart ?

135. If thou know that thou art not the insentient
Why babblest thou, poor heart ?
Forget not the Divine Grace ; then
The ignorance that would not perish by itself will be destroyed.
And thou shalt then become Sivam.

இதன் பொழிப்பு:— உயிர் நித்தப்பொருளென்றறிந்து பின்னர் அதற்குக் கேடெய்துமென்று அஞ்சி, அறியாதார்போல அலமருதல் என்னே! அதற்குத் தீங்கு பயப்பது தற்போதம் இறவாமையே யாகலின் அஃது துறத்தற்குத் திருவருளை மறவாதொழுகுதல்வேண்டும். அங்ஙனம் ஒழுகின் சிவபோதங் கேட்டுச் சிவபோதம் மேலிட்டுச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வெய்தும் எ-து.

இதனகலம்:— முதற்கண்நின்ற தான் உயிரையும் இடைக்கணின்ற தான் தற்போதத்தையுங் குறித்தன. இறுதிக்கண் தான் அசை அசத்தென்றது அநித்தமென்னும் பொருட்டு. தானே என்புழி ஏகாரந் தேற்றம். இறவாதென்பது இறத்தலரிதென்றவாறு. உயிருய்யுமாறு கூறுவார் அதற்குத் தடையாயுள்ளது இதுவென்றற்குத் தானே இறவாதென்றமையின் அதற்கிவ்வாறு உரைக்கப்பட்டது. இஃது, உயிர் நித்தமாகலின் அஃதொருஞான்றும் அழிதலின்றி என்றாயினும் திருவருள்வழி நின்று சிவமாந்தன்மைப் பெருவாழ்வெய்தும் என்றவாறு.

---

ஏற்றா தவையாய் இருப்பதுவும் உள்மயக்கம்
ஆற்றாது தீரென் றாற்றுவதுந்—தோற்றாது
தோற்றுவதும் உன்னைச் சுகபூ ரணனென்று
தேற்றுவதும் ஈசன் செயல். (௱௩௰௬)

இதன் பொழிப்பு:— பெரியார்கூறும் உறுதிமொழிகளைக்கேளாது பாசத்தழுந்திக் கிடப்பதும், பின்னர் அப் பாசத்தொடக்கிற்கு ஆற்றாத அதனை நீக்கியருளென்று முறையிடுவதும், பின்னர் ஆசான்மூர்த்தி

---

136. That thou remain identifying thyself
With the objects that cannot lift thee up,
That thou brookest not thine inward confusion
And criest to have it taken away,
That inconceivable things are conceived in thy mind
To comfort thee by saying that thou art perfect joy,
Are all the work of the Lord.

யிடமாகத் தான் தோன்றுவதும், பின்னர்க் கிரியையானும் உபதேசத் தானும் நூலானும் பயிற்சியானும் உயிருக்கு அதன் உண்மையியல்பைத் தெரிப்பதுமெல்லாம் இறைவன் செயலே எ-து.

இதனகலம்:— ஏற்றுதல் செவிமடுத்தல். அவையென்றது பாசக் கூட்டங்களை. தோற்றாது தோற்றுதல் ஆசான் மூர்த்தியை ஆவேசித்து நின்றருளுதல். சிவன் செயலென்றது அவன் அவ்வந்நிலைகட்கேற்பச் செய்யுஞ் செயலாதல்பற்றியென்க. எனவே, நம்மை உய்விப்பது அவன் கடனாகலின், எந்நிலையினும் அவனை நோக்கியிருந்துவிடுதல் நமது கடனு மென்றவாறு.

---

அன்றே அரனணுக்கள் பாசங்கள் ஐந்தொழில்கள்
நன்றே சிவனும் நடுவனே—சென்றருளில்
நிற்கச் சிலர்சிலர்கள் நீள்நரகில் பூதலத்தில்
சொற்கத் திருப்பதென்னோ சொல். (௱௩௭)

இதன் பொழிப்பு:— பதிபசுபாசம் என்னும் மூப்பொருள்களும் அநாதியேயாகவும், அவற்றுட் பதிசெய்யும் ஐந்தொழில்களும் உயிர்களின் நன்மையின் பொருட்டேயாகவும், அப்பதியுங் கோட்டமின்றிச் செப்ப முடையவனேயாகவும் உயிர்களெல்லாம் ஒருபெற்றியே உய்தியெய்தப் பெறாது சிலவுயிர்கள் முத்தியெய்தவும், சிலவுயிர்கள் நரகத்தழுந்தவும், சிலவுயிர்கள் பூமியிற்பிறக்கவும், சிலவுயிர்கள் துறக்கத்து இருக்கவுமாக நிகழ்தல் என்னையோ எ-து.

---

137. Eternally there dwell in panchakshara, Hara,
The atom-like souls, the bonds and the five-fold deeds of grace ;
And well doth Siva occupy the middle.
While some do go and stand in Grace,
Why, say, are some in extensive hell,
On earth or in the transient world of the Gods ?

இதனகலம்:— அநாதியே அவ்வுயிர்கள்மாட்டுத் தனித்தனி அமைந்த அவற்றது சிறப்பியல்பாய பக்குவ வேறுபாட்டானேயாம் என்பது கருத்து. இவ்வேறுபாட்டான் உயிர்கள் இவ்வாறுமென்றெடுத்துக் கூறிச் சிற்றறிவினர் உளங்கொள்ளமாட்டாமையின், இங்ஙனம் உய்த்துணர்வுபெருகக் கூறினரென்பது. உயிர்தோறும் அறிவுநிலை வேறென்பதும், அதனன் அவை ஒன்றனையறியுங்கால் யாவும் ஒருபடித்தாக அறியாது பலபடியாகவே அறியுமென்பதும் ஓராசிரியன் கற்பிக்கும்வழி அக் கல்வி அவன்மாட்டுக்கற்கும் மாணாக்கர் பலர்க்கும் ஒருபெற்றியாக நிரம்பாது பல்வேறுவகைப்பட நிகழுமாற்றான் உணர்ந்து கொள்க.

---

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய்—சீ சீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய். (ாஙஅ)

இதன் பொழிப்பு:— பொருள்கள்மேற் செல்லும் அவாவை யறுத்தலும், யான் எனது என்னும் பற்றுக்களை விடுதலும், வழுவாது சிவபூசை செய்தலும், அன்புடன் திருவைந்தெழுத்தை எண்ணுதலும், யாவர்மாட்டும் வெகுளியை மறத்தலும், தேவாரம் திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளை ஓதுதலும் உய்திவேண்டுவார்க்கு இன்றியமையாச் செயல்களாம். ஆதலின் அவற்றைச் செய்யாதார் பிற அருஞ்செயல்களைச் செய்தாராயினும் தமக்கு உறுதிதேடாமையின் அறிவுடையோரான் இகழப்படுவர் எ-து.

---

138. Thou dost not cut off thy desires
Thou dost not sever the bonds
Thou dost not adore Siva in desirable worship
Thou dost not meditate with love
The holy letters five. Fie on thee !
Thou dost not leave anger
Thou dost not chant the Thirumurais
O, mind, why then this arrogant prate ?

**இதனகலம்:—** பாசமென்றது பற்றுக்களை. சீ சீ என்னும் இகழ்ச்சிக்குறிப்பு பிற்காலவழக்கு.

---

தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம்—நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும். (௱௩௯)

**இதன் பொழிப்பு:—** வீடுபேற்றிற்கு நெறியாவது உலகிற்பல தலங்களினும் இறைவன் திருமேனி கொண்டெழுந்தருளியுள்ள அருமைப் பாட்டினை நினைந்து அவற்றின்மாட்டு அன்பு செய்தலேயாம் எ-து.

**இதனகலம்:—** முல்லைவனமென்றது திருமுல்லைவாயிலை. வட திருமுல்லைவாயில் தென்திருமுல்லைவாயில் இரண்டுங் கொள்க. இவை சிறந்தன சில தலங்களைக் கூறியவாறு. சென்றிறைஞ்சுதல், இருந்து நினைத்தல் முதலிய செயல்களை, அவரவர்க்கு ஒல்லும் வகையாற் செய்யினும் அன்பு ஒன்றே வேண்டப்படுவதென்பார் "என்" என்று கூறினர். என் என்பதற்கு என்றுநினை என்றுசொல் என் இருவகையாகவும் உரைக்கப்படும்.

[1] மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

என இவர் வழியடியார் கூறினமையானும் இதுவே வீடுபேற்றிற்கு நெறியாதலுணர்க. இஃது இறுதிக்கண் எல்லார்க்கும் ஒல்லும்வகையால் வீட்டுநெறியுணர்த்தியவாறு. இங்ஙனம் பத்துவெண்பாக்களாற் பொது நெறி உணர்த்தப்பட்டது.

**சிவபோகசாரம் முற்றிற்று.**

---

139. Tillai-vanam, Kasi, Tiru-arur, Mayooram
Mullai-vanam, Madura, Mudu-kunram,
Nellai, Kalar, Kanchi, Kalukkunram, Maraikkadu
Arunai, Kalahasti, Vanchiam—O, mind, speak of these
And thine shall be bliss.

[1] தாயுமா, பராபரக், பா. 156.

## தனிப்பாடல்கள்.

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.

கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சை யோஇணங் கார்புரத்தைச்
சினக்குங் கமலையின் ஞானப்பிர காச சிதம்பரஇன்
றுனக்கிச்சை எப்படி அப்படி யாக உரைத்தருளே. (௨

---

1. They study the truth of Pati, Pasu, Pasam,
And having studied and understood
They dislike all worldly life
They rest from the toil of learning and hearing,
They plunge in the ocean of Siva's joy,
With the loss of one and two,
The faithful servants of Jnanaprakas.

2. Hath any one ever consulted the bullock's wish
About the ponderous load he hath to carry ?
Is it my wish that matters
About the nature of the body I get ?
Thou that wert filled with wrath
Against the cities of Thine enemies !
Kamalai Jnanaprakas ! Chidambara !
Whatever be Thy wish to day
Graciously proclaim accordingly.

எல்லாம் உனது செயலென் றறிந்தும் எனதுளத்திற்
பொல்லாத சங்கற்பம் ஏன்வரு மோபுர மூன்றெரிக்க
வல்லாய் கமலையின் ஞானப்ர காச வரதஇது
சொல்லாய் கரண மயக்கமன் றோஎன் தொழிலல்லவே. (௩)

அரவர் வினைவழி அரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமைஉணர் வதுவே. (௪)

கதிவாழ்க வேதநல் ஆகமம் வாழ்கநற் கண்மணிஉன்
பதிவாழ்க சைவம் திருநீறும் கண்டியும் வாழ்கஅருட்
குருவாகும் நின்றன் திருக்கூட்டம் வாழ்கநற் கோநிரைகள்
தெருவாழ் தருமைத் திருஞான சம்பந்த தேசிகனே. (௫)

3. Knowing that all is Thy deed
Why should this wicked resolve sprout forth in my mind ?
Thou Strong One, who destroyed the three cities,
Kamalai Jnanaprakas, Thou bestower of gifts,
Answer this. Is it not of the confusion caused by the karanas?
It is certainly not my deed.

4. Each one did come accordant with his actions
Each one experienced accordant with his actions,
Who helped whom ? who helped not whom ?
But the austere think of knowing themselves.

5. Blessed be the Moksha, Vedas and Agamas great ;
Blessed be the lord enshrined in our hearts pure ;
Blessed be Saivam, ashes and rudrakshas ;
Blessed be the congregation attached to thee ;
Blessed be the wide streets with mansions high
Where cows march in long and stately sight ;
O ! Teacher known as Jnanasambandha
Shedding thy divine grace in Dharmapura.

## GLOSSARY.

1. சித்தி—Siddhi, success, attainment, realisation, final liberation. The eight supernatural powers attainable by Yoga : anima—becoming as tiny as an atom, mahima—becoming as big as the Meru, laghima—becoming lighter than air, Karima—becoming harder than an iron or rock, prapthi—working miracles, prakariyam—realisation of every kind of worldly bliss that one wishes for, Isatvam—powers to create keep and destroy, vasitvam—attracting everything to oneself and influencing the same as desired, and mukti—liberation from bonds of birth and merging in the Supreme.

தென்கமலை—The south or beautiful Kamalai.

2. அருவம்—Formlessness, incorporcity, invisibility—Sivam, Sakti, Nadam and Bindu.

அருவுருவம்—Formless form, the visible and invisibile ; visible form which can be said to be no form as the Sivalinga or a flood of light ; Sadasiva.

உருவம்—Organised body, shape, figure ; Mahesvara, Rudra, Vishnu and Brahma.

அமலம்—That which is spotless, immaculate ; purity cleanliness.

3. தவம்—Ascetic practices, austerities.
சிவதவம்—Charya, kriya, and yoga.
என்போல்—Like me, in my form, in human shape.
முத்தி—Freedom, liberation.
கத்தன்—Karta, lord, author, creator.
அத்தன்--Father, lord.

4. துரியம்—The fourth of the five states of the soul in which it is in the navel with prana and is cognizant of itself alone, state of entire quiescence.

5. அமுதம்—Ambrosia, nectar, final liberation.

6. உள்ளும் புறம்புமாதல்—As the light of wisdom inside and as God riding on the bull.

The outer manifestation is of three kinds. (1) தன்மை Uttama—Paripurna : perfection ; (2) முன்னிலை Madhyama being as Ichcha, Jnana and Kriya (3) படர்க்கை Prathama being as Manas, buddhi, chitta, Ahankara- A. U. M. Bindu and Nada ; Brahma, Vishnu Rudra, Mahesvara and Sadasiva.

7. மருள்—Ignorance, the work of anava-mala ; bewilderment, the work of Maya-mala.

8. விழியாதிருந்து விடல்—புவன போகங்களில் மயங்காமை—Not being tempted by worldy things.

9. பொய்—Asat, Achit ; whatever is not permanent ; that which is illusory, unsubstantial, fleeting ; lie, that which misleads ; that which is unreal. This technically connotes the idea that all those are unreal which are not what they seem to be ; all that are seen or perceived howsoever by the sense of man and all that assume perceptible shapes or forms are transitory and changeable. Everything changes like this until the ultimate cause is reached which alone is termed மெய்.

10. மெய்—Sat, chit, *vide. 9*, that which is true, eternal, real.

வீற்றிரு—To appear enter and dwell. தோன்றிப் புகுந்து இருத்தல்.

11. ஓங்கு—Grow, increase.

தூங்கு—Commune, be lapped, sleep everlastingly ; commune with Grace.

12. தற்போதம்—Love of self, feeling of self, recognition of the ego ; self-conceit, arrogance ; consciousness. This word may also mean self-knowledge, knowledge of the self and the deity, intuitive knowledge, inherent and eternal knowledge as possessed by the deity.

13. தேவு—God as immanent in the universe can be worshipped in the forms of worship ; but, God who is transcendental is realised only by dint of the infinite wisdom which His Grace awakens in highly evolved souls.

14. கூப்பிடு—Call out, cry hoarse.

15. இரு—To remain, practice, realise.

16. உண்மை வை—Keep or reserve the truth, reveal the truth to such சாதன சதுட்டய முற்றின அதிகாரிகளுக்கு உபதேசிக்க.

17. வெளி—Space, space infinite.

18. அகன்ற—Apart from, transcending.

19. அத்துவிதம்—Advaita, non-duality, distinct or non-different union. It is not here the monism of one who holds the doctrine of ekanmavadam.

According to Saiva Siddhanta doctrine God and the soul are distinct entities but because of their union they are not dual. Their advaitic relationship is illustrated by the following similies of Introductory verse of Sivajnana Swamigal's commentary on Siddhiar.

A. ஒன்ருய் நிலேத்தல்.

க. பண், இசை—Tune and sound ; சிவனுகிய சித்தன்ருய்ச் சித்தின் பேதமாகிய சீவன் சிவனேயின்றித் தனித்து நில்லாமை.

உ. பரிதி மதி—The sun and the moon ; நிற்றல் இல்லேயாயினும் பொருளால் வேறுண்டு.

ங. தில தயிலம்—The Till seed and oil ; சீவனே விட்டுச் சிவனேப் பிரித்தறிய முடியாது.

B. வேருய் அறிதல்.

ச. தீ இரும்பு—Fire and iron ; உயிரின் வேருய்ச் சிவன் நிற்பன்.

ரு. பாணி உப்பு—Water and Salt ; தனித்து நிற்பன்.

சு. விண் அநிலம்—Ether and air ; உயிர் எக்காலத்தும் சிவனே விட்டுப் பிரிந்திராது.

C. உடனாய் அநுபவித்தல்.

௭. உடல் உயிர்—Body and soul; இறைவன் உயிருடன் நின்று செலுத்துவன்.

௮. நீர் நிழல்—Water and shadow; எக்காலும் பிரிப்பின்றிப் பரவி நிற்பன்.

௯. உச்சிப்பளிங்கு—Sunlight and crystal; இறைவனோடு உயிர் கலந்து விஷயங்களை அறியாதிருக்கவும் கூடும்.

௧0. பகல் விளக்கு—Daylight and lamp; உயிர் தற்போதம் கெட்டு நிற்கும்.

௧௧. பால் நீர்—Milk and water; தன் இன்பம் முழுதும் உயிருக் காக்கித் தன்னுள் அடங்கிநிற்கச் செய்வன்.

௧௨. கண் இரவி—The eye and the sun; உயிர் சித்தாயினும், சிவனையின்றி என்றும் அறியாது.

௧௩. உணர்வு ஒளி—Consciousness and the eye. வேறிடத்திருப்ப தில்லை; ஓரிடத்திற் கலந்து நிற்கும்.

20. தத்துவம்—Coats or vestures of different textures at different times and stages to the soul undergoing evolution with interest to rid itself of its coil,—anava. Thirty-six tatvas *vide* notes on Siddhanta: Reals.

23. தாயுமானவர் குருமரபு—(Siddhiar, Sut. VIII, St. 30.)

24. இரவு—the kevala state.

பகல்—the sakala state.

இரவு பகலற்ற இடம்—the suddha state.

நேதி பண்ணல்—Analysing and rejecting whatever is seen is not thou. This is the process of analysis wherein all that are seen are taken one after another and examined and it is found and realised that neither God nor soul is found in any of them.

25. கரணம், அந்தக்கரணம்—Antah-karana—inner seat of thought, feeling and volition, consisting of four aspects : Chittam as considering, manas as doubting, ahankaram as wrongly concluding and buddhi properly determining.

26. முப்பொருள் —Three varieties, categories of Saiva Siddhanta, Pati, Pasu and Pasam—Vide note on Saiva Siddhanta.

27. மும்மலம்—Three malas : anava, maya and karma. Mala generally refers to anavamala which is called the darkest, the fast and the last fetter of the soul. இருண்மலம்.

31. The three factors of knowledge, tribuddhi : Jnatru Jnanam and Jneyam—the knower, knowledge and object of knowledge are referred to here.

32. சிற்பரன்—God as transcending human understanding. Supreme Being, the Highest.

33. நிஷ்டை—Religious meditation which has become nature by long practice, union.

அநுபூதி—Perception, apprehension, realisation.

34. அநாதி—That which has no beginning, which is immemorial: God who has no beginning, Siva.

35. கரணம்—Cognition ; அந்தக்கரணம்.

38. தநு—body, கரணம்—manas etc., புவனம் worlds, போகம் enjoyment.

அத்துவாக்கள்—Ways ; physical envelopes of the soul through which it ascends. Sabda, mantra—pada—varna ;—artha, tatva, bhuvana and kalai.

39. காட்சி—Perceptive consciousness. அவஸ்தை ; *vide* Note—Siddhanta.

41. நிலை—State, place.

43. The author maintains the Saiva doctrine refuting the mayavadins.

Guru Jnanaprakas was also known as Chidambaranath.

46. சத்து—The Existent.

சித்து—Intelligenc .

ஆநந்தம்—Happiness.

50. வெறும்பாழ்—வெட்டவெளி—The state where all kinds of form-perception or conscious experience have gone and where truth and intelligence only are existing in their nascent state.

55. திரிகரணம்: மனம், வாக்கு, காயம்—Mind, speech and body

59. தானெல்லாமாயது—Here Maya.

63. சும்மா இருத்தல்—*Vide* Maunam.

சுட்டறிவு—Cognition by the senses.

65. சிவயோகம்—*Vide* விநாயக புராணம்—வியாசர் உபதேசம் பெறுபடலம்.

சிவபோகம்—The state of the fullest communion with God's Bliss and standing as Himself.

66. யோகசமாதி, சகச நிஷ்டை—*Vide* glossary. தாயுமானர், "ஆசையெனும்". 21 கரந்தமதை.

70. பூதம்—Elements.

73. பணி—Work, service.

83. சடம்—Matter × சித்து

திரும்ப Again; in return.

101. சும்மா—With reason, cause.

104. Stanzas 104-106 refer to some religious disturbances due to non-Hindu invasions in South India during the author's time. These stanzas were chanted by Sri Thiruvambala Desigar, seventh in succession from Guru Jnansambandhamurthi and some miracles were performed when some harm was about to be done to the Mutt.

107. The author speaks of the saiva sanyasa which is the love of God.

108. The five acts of Grace are:— சிருஷ்டி—Creation. ஸ்திதி—Protection. ஸம்ஹாரம்-Destruction. திரோபவம்-Observation, Obscuration. அநுக்கிரகம்—Salvation.

109. குறி—Indication, mark.

119. அதிட்டானம்—Support, place, abode.

121. நித்தியம்—Sat, that which is eternal, real, changeless.

அநித்தியம்—Asat, that which is transient, unreal, changing.

மோனம்—Silenee, quiescence, peace, tranquility of Thayumanavar. "ஆசையெனும்".

123. சிவாநந்தம்—சிவபோகம்.

124. அதீதம்—That which has gone beyond. முத்தர்—The liberated. பெத்தர்—The souls in bondages.

127. This points out the superiority of Jnanam over Yoga as Jnanam comprehends the infinite in the soul and yoga comprehends it through the body.

(இரண்டாவது)

# சொக்கநாத வெண்பா

# CHOKKHANATHA VENBA



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிய

# சொக்கநாத வெண்பா

ஆடரவஞ் சூழ்மதுரை அம்மானே அன்பருடன்
கூடவிளை யாடிவருங் கோமானே—நீடுபுகழ்
மென்மேலும் என்தனக்கு மேவியிடப் பொல்லாத
என்மேல் வினைகெடுப்பா யே. (1)

புண்கட்டு தோலைப் புதுக்கி மயக்கமுறக்
கண்கட்டு வித்தைபோல் காட்டுவாய்—பண்கட்டுப்
பூணுவேன் தன்னைஇன்ப பூரணத்தில் பூணஅருள்
தாணுவே சொக்கநா தா. (2)

---

1. Lord of Madura, girdled by the dancing serpent sovereign that merrily goeth forth to meet thy devotees, destroy my wicked action so that enduring glory may come to me increasingly.

2. Renewing the rind that wrappeth the sore Thou showeth a delusive jugglery. Grant that I who am tied in bonds may dwell in the perfection of joy, O everlasting Chokkhanatha.

ஏடாரும் நாரியரை ஐயோ யமன்பிடிக்கும்
பாடா விதியென்று பாராமல்—கேடாரப்
பூண்டஆ பாதன்என்று போடா தெனையருளில்
ஆண்டவா சொக்கநா தா. (3)

காக்கைநரி ஞாளி கழுகுபருந் துக்கிரையாம்
ஆக்கையினை யானென் றலையாமல்—வாக்குமனம்
எட்டாத வீட்டில் எனைக்காட்டு துட்டருளம்
தட்டாத சொக்கநா தா. (4)

பஞ்சமா பாதகனை ஆண்டபுகழ் பார்மீதிற்
கொஞ்சமா வீறுபுகழ் கூறுமே—வஞ்சமே
பூண்டளவில் பாதகஞ்செய் பொல்லாத நாயேனை
ஆண்டளவிற் சொக்கநா தா. (5)

வறிஞர் தமையொக்க வைக்குமன்னர் போல
அறிஞர் தமையாள்வ தன்றிப்—பொறிபுலனால்
வெம்புவேன் தன்னை விடுத்தாள்வ தேபாரம்
சம்புவே சொக்கநா தா. (6)

---

3. Scorning me not as a renegade, who, without rejecting the flower-bedecked women as evil fates meetest for death, has indulged fully to his ruination, Thou, Chokkhanatha, hast condescended to make Thy servant, in Thine infinite Grace.

4. Chokkhanatha that art beyond the feel of wicked hearts, show me into the house beyond the reach of word and mind that I may not roam about confusing that my body, a prey for the crow, jackal, dog, vulture and kite, is myself.

5. When Thou savest me, a deceitful dog doing countless wicked acts, Thy fame shall spread so much on earth that the fame of Thy having redeemed the man of fivefold heinous crimes would shrink into littleness, O Chokkhanatha.

6. It is Thy burden not merely to save the wise, but also to release and save scorched as I am by the organs and the senses, even like kings who show equal consideration to the poor, O Sambhu, Chokkanatha.

என்னால் உனையடைய வல்லேன் எனில்இடரில்
இந்நா ளளவும் இருப்பேனோ—பன்னகம்
பூண்டவா வேணிப் புனிதா மதுரைநகர்
ஆண்டவா சொக்கநா தா. (7)

எல்லாமும் வல்லசித்தர் என்றக்கால் என்னுடைய
பொல்லாக் கருத்தகற்றப் போகாதோ—வல்லாடும்
பொங்கரா வேணிப் புனிதா மதுரைநகர்ச்
சங்கரா சொக்கநா தா. (8)

பேசானு பூதி பிறக்க எனதுளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய்—தேசாருஞ்
சிற்பரா நந்தா திருவால வாயுறையும்
தற்பரா சொக்கநா தா. (9)

இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரந்தா—சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா. (10)

---

7. If it were in my power to reach Thee, would I remain in pain so long, Thou that wearest the serpents on thy locks, O, pure One, Lord of Madura, Chokkhanatha!

8. If Thou art the siddha for whom nothing is impossible canst Thou not drive off my wicked thoughts, Thou that wearest the angry serpents on Thy locks, O pure One, Sankara of Madura, Chokkhanatha?

9. Drive off the devil of desire from my heart that the ineffable realisation may spring in it, Thou effulgent joy of wisdom, transcendant One, dwelling in sacred Alavoi, Chokkhanatha.

10. I have grown weary of births and deaths. Grant me the boon that I be not born again even in forgetfulness, Chokkhanatha of Alavoi, the supreme gem set in the crown of the world of great fame.

உலக வெறுப்பும் உடல்வெறுப்பும் உள்ளத்
திலகு மலவெறுப்பும் எல்லாம்— அலகிறந்த
நந்தாத இன்பசுக நாட்டின் விருப்பமுறத்
தந்தாள்வை சொக்கநா தா. (11)

எப்போது மும்மலம்விட் டேறுவேன் பூரணமாய்
எப்போதுன் இன்பசுகத் தெய்துவேன்— எப்போதும்
நித்தியா சுத்தா நிராமயா சொல்தவறாச்
சத்தியா சொக்கநா தா. (12)

காயமோ காலன் கருத்தோ மகாகாலன்
ஞாயமோ சற்றும் நடப்பதில்லை— பேயனேன்
மாளுவனோ தென்மதுரை மாமணியே என்னையுகந்
தாளுவையோ சொக்கநா தா. (13)

எரிசுடுவ தல்லால் இரும்பு சுடுமோ
அரியயற்கும் வாசவற்கும் யார்க்கும்— பெரியவர்க்கும்
பூணுமே தந்தொழில்நின் பொன்னருளால் தென்மதுரைத்
தாணுவே சொக்கநா தா. (14)

---

11. Put in me a disgust for the world, disgust for the body and disgust for the malas that thrive in the mind, so that I may have a desire for the estate of limitless, imperishable and blissful joy, Chokkhanatha.

12. When shall I get ashore from the three malas? When, shall I get in perfection Thy blissful joy, eternal, pure, taintless, truthful One of unfailing words, Chokkhanatha?

13. Neither the body, nor the will of Death, nor the judgment of Mahakala can ever prevail against Thee. Shall I, satanic, perish, or wilt Thou save me in love, O jewel of beautiful Madura.

14. It is the heat that scaldeth, not the iron, is it not? Is it not through Thy sweet grace that the allotted work devolveth on Hari, Aja, Indra and the great ones, O eternal Chokkhanatha of charming Madura?

ஆரிடத்தில் வந்தும் அடியேன் உளத்திருந்தும்
ஓரிடத்தில் உற்பவித்தும் உள்ளபடி—பாரிடத்தில்
நாயேன் உளமகிழ நன்று உணர்த்திடுவாய்
தாயேநீ சொக்கநா தா. (15)

நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப்
புத்தி மிகமிகவும் போதித்துச்—சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா. (16)

மறைஆ கமவிதியும் வந்தவுடல் தன்னின்
நிறையூழ் விதியுமுன்னை னின்றுன்—மறைவிதிக்கே
ஏற்கவே செய்வோன் இசைந்தாலூழ் வேறதனோ
யார்க்காவென் சொக்கநா தா. (17)

நலம்விளைக்கும் உன்பதத்தில் நாடவைப்ப தல்லால்
மலம்விளைக்குஞ் சோறருந்த வைத்தாய்—சலம்விளைக்குஞ்
சென்னியா மாமதுரைச் செல்வாஎல் லாமும்வல்ல
தன்னியா சொக்கநா தா. (18)

---

15. Entering the great ones, abiding in Thy servant's heart, manifesting Thyself in the symbol of Lingam, reveal Thou well the truth unto me on this earth, so that I may feel the bliss in my heart, O mother Chokkhanatha.

16. Come unto me day by day, O taintless One, instruct me more and more, remove the delusion of my mind; make me united, the idea of two being lost, in the perfection of blissful joy, Chokkhanatha.

17. Born with the burden of Karma about me, I merge my individuality into the sacred rules of Vedagamas and become purified from all sins of fates. I wonder, then, why and to whom fate exists?

18. Instead of making me set my desire on Thy feet that yieldeth good, Thou hast made me eat the food that yieldeth evil, Thou, from whose head the waters flow, O happy One of great Madura, bounteous Lord, all-capable Chokkhanatha.

ஆர்வந்தென் ஆர்போயென் ஐயாஉன் ஆநந்தச்
சீருளத்தே என்றுஞ் செறிந்திலதேல்—காரிருண்ட
கண்டனே ஓர்புருடன் காதல்கொண்டாள் போல்மதுரை
அண்டனே சொக்கநா தா. (19)

கான்றசோ றாயுலகங் காணவில்லை இன்பவெள்ளத்
தூன்ற அடியேன் உறங்கவில்லை—ஏன்ற
இருள்சகல நீங்கவில்லை ஏழையேற் குன்றன்
அருளுறுமோ சொக்கநா தா. (20)

நீயே பரமசிவன் ஆனக்கால் நின்மலனே
நாயேன் உளமகிழ நன்றாகப்—பேயேன்
கருத்தடங்க நின்கருணை காட்டியின்ப வெள்ளம்
அருத்திடுவை சொக்கநா தா. (21)

விதிமார்க்கம் எப்பொழுது மேயறியேன் ஊழின்
விதிமார்க்கம் அல்லாது மெய்யாங்—கதிமார்க்கம்
காட்டுவாய் நாயேன் கரையேற எவ்வுலகும்
ஆட்டுவாய் சொக்கநா தா. (22)

---

19. Sir, what matters it whoever comes or whoever goes, if the felicity of Thy bliss fills not my heart for ever, even as the love of a woman for her beloved husband? O dark throated One, Andha (Siva) of Madura, Chokkhanatha.

20. The world appeareth not like vomitted food; nor do I sleep steeped in the flood of joy. The kevala and sakala states have not been crossed. Will Thy grace come unto me, wretched as I am, Chokkhanatha?

21. If Thou art the supreme Siva, O pure One, show me Thy grace that I may feel the joy, that my mind may be still and feed me with the flood of bliss, Chokkhanatha.

22. I never do know the prescribed Path. Show me, not the way of my fate, but the Path of truth that I may be saved, O Chokkhanatha who urgest every world.

அருவருப்பே மெத்தியிடும் ஆகத்தைச் சற்றும்
அருவருக்கத் தோற்றுதில்லை ஐயோ—அருவருக்கத்
தோற்றியிடா தென்னவினை துய்ப்பித் தறுப்பதற்கோ
சாற்றியிடாய் சொக்கநா தா. (23)

தவமோ சிறிதறியேன் தாரணிமேற் செய்யும்
அவமோ அளவில்லை யானால்—சிவமோ
பெறுமாறென் கூடற் பிரானேமுப் பாசம்
அறுமாறென் சொக்கநா தா. (24)

அனைத்துயிர்க்கும் பாசம் அறுத்துமுத்தி கூட்ட
மனத்துயரஞ் செய்தல் மருந்தோ—மனத்துயரஞ்
செய்யாமல் தீர்மருந்து சித்தா அறிந்திலையோ
ஐயாஎன் சொக்கநா தா. (25)

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன்
கணத்தும் உணரும்வகை காணேன்—உணர்த்திஎன்னுட்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா. (26)

---

23. Alas, it never doth cccur to me to abhor the body which is full of abomination. What karma is there to be fed and consumed that I do not so feel to abhor? say, O Chokkhanatha?

24. Tapas I know not even a little. There is no limit to the evil that I do on earth. How then can I get to Sivam, O Lord of Madura; how is the triple bond to be severed, Chokkhanatha?

25. Is causing pain to the minds of living things the cure that cutteth their bonds and uniteth them in bliss? Dost Thou not know, O, Siddha, a remedy that cureth without giving pain, O Sire, my Chokkhanatha?

26. If Thou enlightenest me, I understand; If not, I know not how I can understand even for a moment. Enlighten me remove the mala, maya and karma that are in me and enslave me, in Sivanand, Chokkhanatha.

பிறிந்தேன் மலத்துனது பேரருளி னாலே
அறிந்தேன் உனைநன்று ஐயா—செறிந்த இன்ப
பூரணா செங்கமலப் பொற்பாதா கூடலில்வாழ்
ஆரணா சொக்கநா தா. (27)

கெடுங்காலம் வந்தால் கெடுப்பை கதியில்
விடுங்காலம் வந்தால் விடுவை—கொடுந்தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடினும் ஆரேனும்
அண்ணலே சொக்கநா தா. (28)

என்னவினை நாயேற் கிருக்குதோ இக்காயத்
தென்னவினை நின்தாள் இயற்றுமோ—என்னவினை
வந்திடுமோ என்றறியேன் வந்தாலும் நின் அருளை
தந்திடுவாய் சொக்கநா தா. (29)

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்தும் கன்மத்தும்
மாறாதெந் நாளும் மயங்காமல்—பேறாக
நித்தனே நின்மலனே நின்பதத்தில் ஆள்மதுரை
அத்தனே சொக்கநா தா. (30)

---

27. I was freed from malas by Thy great grace, O Sire, and I came to know Thee well, O perfect One full of joy, with lovely feet like the red lotus, God of the Vedas that dwellest in Madura, Chokkhanatha.

28. Whether one doth practise severe asceticism or indulge in wickedness, Thou will ruin one when the time for ruin comes or lead one into freedom when the time for liberation comes O Lord, Chokkhanatha.

29. Whatevr karma awaiteth me, lowly as a dog, whatever karma Thy feet will make me do with this body, whatever karma will come to me, I do not know, But whatever may come, give me Thy grace, Chokkhanatha!

30. That I may never change nor be deluded by the thirty-six tattvas, anava and karma, that I may obtain Thy bliss make me the slave of Thy feet, O eternal taintless Lord, Chokkhanatha.

அடியேன் உனைவேண்ட அப்படியே என்றுங்
கொடியேன் கருத்திசையக் கூறி—அடியேனை
மீண்டுபிற வாதுன் விரைமலர்த்தாள் சூட்டிஎனை
ஆண்டவனே சொக்கநா தா. (31)

ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும்
மாசார் மலத்தை அறுத்தருளி—நேசா
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்றஉயிர்க்கு என்றும்
அளிப்பவன்நீ சொக்கநா தா. (32)

ஆற்றையணி வேணி அமலனே மெய்யதனில்
நீற்றைப் புனையும் நிமலனே—கூற்றைக்
குமைத்தவனே என்சிரத்துன் கோகனதத் தாளை
அமைத்தவனே சொக்கநா தா. (33)

கால வசமோ கடியேன் வினைவசமோ
ஞாலவச மோஅருளை நாடியே—கோலமறச்
சிற்பரா நந்தவெள்ளம் சேர்ந்தறிந்தும் சேர்கிலேன்
தற்பரா சொக்கநா தா. (34)

---

31. When I Thy wicked servant prayed to Thee, Thou didst answer my prayers always, Thou didst crown my devoted head with Thy fragrant flower-like feet lest I be born again, Thou madest me Thy servant, Chokkhanatha!

32. Dwelling in the heart of the guru, and dwelling in the heart of the soul, Thou dost sever the foul malas, O Friend, and makest the soul unite with the flood of joy that hath been remaining hidden, Chokkhanatha.

33. O pure One, wearing the river on Thy locks, O taintless One wearing the sacred ashes on Thy body, O vanquisher of Death, Thou hast placed Thy golden feet on my head, Chokkhanatha.

34. Is it my misfortune, or the result of my hard-hearted actions of the past or is it even the attendant evil of this ill-fated world? I know not what. Seeking Thy grace, though I did shuffle off my mortal coil and attune my heart to a flood of joy in the vision beatific, yet I cannot reach Thee, O supreme Chokkhanatha.

நீள்நாள் பிறந்திறந்து நின்றதுயர் நீயறிவை
வீண்நாள் கழித்து விடாமலே—பூண அருள்
நண்ணரிய பேரின்ப நாடி அதுவாக
அண்ணலே சொக்கநா தா. (35)

ஆறாறு தத்துவத்தும் ஆணவத்தும் சாராமல்
மாறாத பேரின்ப வாரிதியே—பேறாகச்
சார்ந்திருக்க வல்ல சதுரர் உளத்ததுவாய்
ஆர்ந்திருக்குஞ் சொக்கநா தா. (36)

காடோ வனமோ கனகிரியோ காசினியோ
நாடோ சகலகலை ஞானமோ—வாடி
ஒடுங்குவதோ மெய்வீ டுயிர்க் ளித்தல் போதம்
அடங்குவதோ சொக்கநா தா. (37)

துன்றுபர மானந்தச் சோதியிலி ரண்டற்று
நின்றுவிட என்னை நிறுத்துவாய்—அன்று
கமலனே காண்பரிய கண்ணுதலே கூடல்
அமலனே சொக்கநா தா. (38)

---

35. Thou knowest my travail from births and deaths through long ages. Grant me Thy grace that I may not waste my days, but, may seek after the bliss difficult to approach, and become that bliss, O Lord Chokkhanatha!

36. Thou abidest well always in the hearts of those clever ones that join not the thirty-six tattvas or the anava but can remain united with the unchanging ocean of bliss, Chokkhanatha.

37. Where is the true Salvation that you afford to life?
Is it the jungle or the desert?
The Mountain high or the vast expanse of earth
The fine firmament above or the
Quintessence of Science, Arts and sacred texts below...
Is it selg-abnegation or merging the 'I' in the universal soul?
Tell me, O Chokkhanatha!

38. Make me remain, losing the perception of two, in the radiance of supreme bliss, O brow-eyed One, whom even the lotus-eyed Vishnu could not find, pure One of Madura, Chokkhanatha.

எக்காலம் இக்காயம் இற்றிடுமோ என்வினைகள்
எக்காலம் மும்மலங்கள் இற்றிடுமோ—எக்காலம்
ஆனந்த சாகரத்தில் ஆடிடுமோ என்னுளந்தான்
ஆனந்தா சொக்கநா தா. (39)

எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ—எக்காலம்
பேசாநு பூதி பிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே சொக்கநா தா. (40)

வாக்கிலுரை பொய்யே மனம்நினைப்ப தும்கவடே
ஆக்கைதினம் செய்வ துகிர்த்தியமே—நோக்கில்
திரிவிதமும் இப்படிநீ செய்வித்தால் முத்தி
தருவிதமென் சொக்கநா தா. (41)

இக்காலத் தின்னவினை என்றமைப்பை அப்படியே
அக்காலத் தவ்வூழ் அருத்திடுவை—இக்காலம்
தப்புவார் உண்டோ தமியேற்கும் தப்பரி(து)என்
அப்பனே சொக்கநா தா. (42)

39. When will this body drop, when my karmas, when will the three malas drop? When, when will my heart bathe in the ocean of bliss? O joyful One, Chokkhanatha!

40. When will the feeding of my body cease? When will this karma cease? When will the ineffable realisation spring in my heart? O Master Chokkhanatha!

41. The words of my mouth are false; The thoughts of my mind are deceitful; The deeds of my body from day to day are wrongful. If Thou makest me do like this in all the three ways, how art Thou going to give me liberation?

42. Thou arrangest that such deed shall happen at such time; Thou feedest such deed at the proper time accordingly. Can any one escape that time? I cannot escape, O, my Father, Chokkhanatha!

மோகாபி மானமின்னும் முற்றும் மறக்கவில்லை
தேகாபி மானம் சிதையவில்லை—ஓகோ
உனையடைந்தும் பாசம் ஒழியவில்லை கூடல்
தனையடைந்த சொக்கநா தா. (43)

பத்திமெத்தச் சித்தம் பதியவில்லை அட்டமா
சித்தி அவாவெறுக்கச் செய்யவில்லை—முத்தியுளம்
கூடவில்லை எந்நாளுங் கூடலிலே மாறிநடம்
ஆடவல்ல சொக்கநா தா. (44)

என்னைவளை பாசஅரண் இன்னமுநீ கொள்ளவில்லை
அன்னையனே நீபதனை மாறினும்—முன்னைமலம்
ஓடவே எவ்வுயிர்க்கும் ஓட்டும் அருட்சேனை
தாடியிடுஞ் சொக்கநா தா. (45)

சேகரத்தி னுச்சியின்மேற் செந்தேனுக் கிச்சித்தே
போகவசம் ஆகுமோ போகாதார்—தாகம்
மிகஅறவே யுள்ளத்தில் வேண்டினுன் தாட் செந்தேன்
அகமுறுமோ சொக்கநா தா. (46)

---

43. The conceit born of delusion hath not been fully forgotten. The attachment to the body hath not been destroyed. Alas, even after union with Thee the bond hath not broken, O Chokkhanatha that resideth in Madura.

44. The mind yearneth not for devotion. The desire for the eight-fold siddhis hath not yet gone. The heart panteth not for liberation, O Lord that ever dancest in Madura with changed steps.

45. Thou hast not taken the fortification of the Pasa that encircleth me, O God like unto a mother. Even if Thou becomest a fortification Thyself, the army of Thy grace will charge and drive off the ancient malas from the souls, Chokkhanatha!

46. Will the honey on the summit of the hill be his who striveth for it or will it come to quench the thirst of him who doth not go seeking for it? If one merely wisheth for the nectar of Thy feet would it come into his heart?

அடியார் பரிபாகம் எல்லாம் அறிந்து
படிகீழ்ப் பதமேற் பதத்திற்—கொடுபோய்
இருத்திடுவை சேர இனுமேலாம் போகம்
அருத்திடுவை சொக்கநா தா. (47)

வாழ்ஐம் மலத்தால் வருந்தி மிகஉடைந்த
ஏழையனுக் கையோ இரங்குவாய்—கோழையனாய்ப்
போனேன் புலப்பகையாற் பொன்னடியை நின்னருளால்
தானேதா சொக்கநா தா. (48)

எக்காலம் தாகங்கள் இற்றிடுமோ காயங்கள்
எக்காலம் ஆசைசினம் இற்றிடுமோ—எக்காலம்
நல்லார் குணம்வருமோ நாதாஎல் லாமுமாய்
அல்லானே சொக்கநா தா. (49)

உள்ளம்உனை அல்லாலொன் றுள்ளவில்லை நின்றெளிக்குங்
கள்ளமற நீயும் கருதவில்லை—எள்ளளவும்
நற்றவமோ செய்யவில்லை நாயேன் உனையடைதற்
கற்றதென்ன சொக்கநா தா. (50)

---

47. Thou knowest the fitness of Thy devotees and accordingly placeth them in lower or higher states or makest them enjoy the still higher state of realisation, Chokkhanatha.

48. Take pity on me who am crushed down by the troubles of the eternal five malas. I have grown timid and dread my enemies, the senses. Grant me Thy golden feet in Thy grace, Chokkhanatha.

49. When will the thirstings stop? When will the bodies end? When will the likes and dislikes cease? When will the qualities of the good be mine? O Lord, who art all things, yet none of them, Joyful Chokkhanatha.

50. My heart meditateth on nothing but Thee. Thou hast not willed that my lurking roguery should go. I have not to my credit even the slightest act of good tapas. Ah, what more is wanting for me to reach Thee? Chokkhanatha.

ஆர்க்குக் கிடைக்கும் அடியேன்முன் வந்துமறைக்(கு)
ஏற்கக் கருத்துக்(கு) இசையவே—ஆர்க்கும்
தெரிவரியா வேதசிகை சித்தா உரைத்தாய்
அரிஅறியாச் சொக்கநா தா. (51)

எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார்கள் இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல்போல்—செவ்விதாய்த்
துன்மார்க்கம் செய்வார்க்குத் தோன்றும் பிறப்புமுத்தி
சன்மார்க்கஞ் சொக்கநா தா. (52)

எல்லார் கருத்தும் இதமா உரைக்கறியேன்
நல்லாங்கு தீங்கிதென நாடறியேன்—எல்லாரும்
நீரூரும் வேணி நிமலா மதுரையில்வாழ்
ஆரூரா சொக்கநா தா. (53)

உரைஇறந்த பேரின்ப உல்லாச வீட்டில்
திரைஇறந்து தூங்கித் திளையேன்—வரைபெருகப்
பேசுவேன் யான்என்றே பெற்றவர்தம் உள்ளத்துக்
காசுவே சொக்கநா தா. (54)

---

51. Who could be so fortunate? O, Siddha, Thou camest before me and taught me the crown of the Vedic teachings in a way that my mind could grasp it, the Vedas which even Hari could not understand, Chokkhanatha.

52. Whatever seed men have sown, the harvest thereof the very men shall reap. Even so, Chokkhanatha, the wicked would be taking births, while the good attain liberation.

53. I know not how to please all hearts. I cannot choose between right and wrong; O, taintless One with shining locks from which the waters flow, O God of Arur that hath Thy abode in Madura, Chokkhanatha.

54. I enjoy not the sleep with the screen rent asunder in the happy home of bliss beyond expression. I talk of myself in heaps that grow like mountains, O armour for the hearts of those that have attained Thee, Chokkhanatha.

ஆறாறு தத்துவமும் அத்திலுறை மூர்த்திகளும்
பேறும் வினையினையும் பெந்தித்து—மாறாமல்
ஆட்டுவது நீயானால் ஆகா மியம்என்பால்
சாட்டுவதென் சொக்கநா தா. (55)

முன்அளவில் மாக்களுக்கு முத்தி கொடுத்தஅருள்
என்அளவில் சும்மா இருப்பதேன்—முன்அளவில்
சீர்பெற்றா ரேல்உன் திருவருளொத் தாசையன்றி
ஆர்பெற்றார் சொக்கநா தா. (56)

நோயால் வருந்தியுனை நூறுகுரல் கூப்பிட்டால்
நீயாரெ னாதிருக்கை நீதியோ—தாயாய்
அலைகொடுத்த கேழல் அருங்குழவிக் கன்று
முலைகொடுத்தாய் நீயலவோ முன். (57)

தாயர் மகவருத்தஞ் சற்றுந் தரியார்கள்
ஆயவினைக் கீடா அமைத்தாலும்—காயம்
பரிக்குந் துயரமெல்லாம் பார்க்கஉனக் கென்றும்
தரிக்குமோ சொக்கநா தா. (58)

---

55. O Chokkhanatha When you unerringly guide the tattvas thirty-six and the presiding deities thereof, as also karma and its effects, what effect can action yet to come have on me?

56. O Chokkhanatha! Why should Thy grace that bestowed salvation to many a soul in days of yore, deny it to me? The great attained immense fame only through Thy benediction. Are there any that became great without Thy grace?

57. I cry unto Thee a hundred times tormented by the ills of life; is it just that Thou shouldst remain even without inquiring who I am? Art Thou not the One who came in the past like a mother and suckled the suffering litter of the boar?

58. Mothers can never bear to see the sufferings of their children. Though one is placed in accordance with one's karma, wouldst Thou ever bear to see the sufferings borne by one's body, Chokkhanatha?

தீவினையால் இன்னம்இன்னம் தேகமுறச் செய்வையோ
தீவினையற் றுன்மயமாய்ச் செய்வையோ—தாவிதமாய்
இன்னபடி மேல்விளைவ தென்றறியேன் ஈதறிந்த
அன்னையே சொக்கநா தா. (59)

என்னதியான் என்பதுவும் யான்பிறர்செய் தாரெனலும்
மன்னுமதி பாதகமேல் வாஞ்சைகளும்—இன்னமின்னம்
சொல்லுகின்ற இச்செயல்நீ தூண்டுதலற் றென்செயலால்
அல்லவே சொக்கநா தா. (60)

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம்—பாலொளியாம்
அத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா. (61)

எல்லாம் உனதுபதம் எல்லாம் உனதுசெயல்
எல்லாம் உனதருளே என்றிருந்தால்—பொல்லாத
மாதுயரம் நீங்கும் மருவும் உனதடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநா தா. (62)

---

59. Wouldst Thou make me incarnate further and further through wicked karma? Or wouldst Thou change me into Thy form with the loss of wicked karma? I know not what would certainly happen. Thou knowest this, O mother Chokkhanatha.

60. To speak of mine and I, to blame that others did such things, the heinous offences and desires that continue, such acts as these are, are not my work but are through Thy urging, O Chokkhanatha!

61. O Lingam, that weareth the venom, Chokkhalingam of Alasya, Lingam that springeth everywhere as the cause, Father, of milk-white lustre, who shareth Thy form with Uma of Kudal, God of Madura.

62. If it is considered that everything is of Thy beatitude, everything is of Thy doing and everything is of Thy grace then the great and painful sorrow will leave and there will be a loving yearning for Thy feet, Chokkhanatha.

தீதாம் அவாநந்தச் செய்மதுரை வாழ்வேந்தா
நாதா சிவாநந்தம் நல்குவாய்—வேதச்
சிரகரா நித்தா நிரபரா சுத்தா
அரகரா சொக்கநா தா. (63)

மற்றொருவர் தஞ்சமின்றி வந்தடைந்தக் கால்எனைநீ
சற்றுமிரங் காதிருக்கை தன்மையோ—கொற்றவா
பாவலா கூடற் பரமா பரதேசி
காவலன்நீ தானெனக் கால். (64)

தன்னந் தனியே தமியேன் முறையிட்டால்
இன்னந் திருச்செவியில் ஏறாதோ—மன்னவனே
தென்மதுரை மேவித் திருந்தியசெங் கோல்செலுத்துந்
தன்மதுரை நீயலவோ தான். (65)

என்போல் மலகடினர் எவ்விடத்துங் கண்டதுண்டோ
இன்பே மதுரைக் கிறைவனே—அன்(பு)ஏதும்
இல்லா தெனையாண்ட எண்ணத்தால் தேவரீர்
எல்லாமும் வல்லசித்த ரே. (66)

---

63. Hara Hara, Chokkhanatha O King of Madura that consumed the evil desires in me! O Lord, the incarnation of all the eminent truths of the Upanishads eternal! O Hara, Lord Siva the destroyer! the everlasting and pure, bestow on me the supreme feliciiy.

64. When I come to Thee for shelter having no other refuge, is it noble that Thou takest not the slightest pity on me, though Thou art the protector of the helpless, O, Sovereign, Poet, Supreme God of Madura.

65. When I the forlorn cry out to Thee all alone do not my cries reach Thine ears still? O king, art Thou not the Lord of dharma that holdest a righteous sceptre in charming Madura.

66. Hast Thou ever seen anyone hardened with malas like me anywhere? O sweet One, Lord of Madura! Yes, Thou art really a siddha capable of doing everything for Thou hast made me Thy servant, me, who am without any love.

நீயே யொளித்திருப்பை நீஎன்றுங் காணமல்
நீயே யொளித்தபடி நின்னருளால்—நீயேதான்
காட்ட அனன்னியமாக் கண்டேன் உனதுவிளை
யாட்டதென்ன சொக்கநா தா. (67)

பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன்—பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா. (68)

இட்டா சனத்தில் இரவுபக லற்றிடத்தில்
முட்டா திருக்கஅருள் முற்றுந்தா—அட்டாங்க
யோகந்தான் நீங்கி ஒழியாச் சிவானந்த
ஆகந்தா சொக்கநா தா. (69)

மோகங் கரைய முழுதும் மலங்கரைய
ஆகங் கரையஅறி வானந்த—மேகமாய்ப்
பூரணமாய் எங்கெங்கும் பொங்கி எழவிழித்த
ஆரணனே சொக்கநா தா. (70)

---

67. Thou residest hidden and ever unseen. When Thou didst reveal Thyself in Thy grace, I saw Thee not as separate from me. What prank of Thine is this ? O Chokkhanatha.

68. My love is not great. Nor am I without faults. I am, a covetous creature having no love in me. Show me Thy great love, show me myself, show me Thyself and nurture me in the cradle of joy, Chokkhanatha.

69. Enable me to sit in posture desirable
And dwell at rest in the place
Where Night and Day prevail not
and free from the trance of the eight forms of yoga;
O Chokkhanatha grant me the body of bliss eternal !

70. Thou hast opened Thy eyes and lo, the delusion has melted away, the malas have melted entirely, the body has melted away and the joy of wisdom has bubbled up everywhere, O Revealer of the Vedas, Chokkhanatha.

ஊனது வானவுட லோடும்அணு காமலருள்
ஆனசிவ போகமது வாயருள்வாய்—ஞானக்
கரும்பொருளே வாழ்மதுரைக் கண்ணுதலே ஆர்க்கும்
அரும்பொருளே சொக்கநா தா. (71)

பூண்டமலம் மாண்டுவிடப் போந்தசிவா நந்தவெள்ளத்
தாண்டுமெனை மீண்டுவிட லாகுமோ—நீண்டமால்
வீரென்பார் தாரா விமலா எனைக்கண்டார்
ஆரென்பார் சொக்கநா தா. (72)

முன்னை மலமகற்றி மூதறிவா நந்தமயந்
தன்னை அறிந்த தபோதனருள்—என்னையுநீ
ஆண்டுபரிச் சொக்கநா தாந்தமருள் கூடலிலே
தாண்டுபரிச் சொக்கநா தா. (73)

கருணை நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே—ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா நந்தமே
ஆங்காண்நீ சொக்கநா தா. (74)

---

71. Grant that I may not unite with the body made of flesh but that I may become united with Sivabhoga which is Thy grace, O great being of wisdom, brow-eyed god of Madura, precious to every one, Chokkhanatha.

72. O Chokkhanatha the immaculate!
Thou that wearest the wreaths of hard bones of Trivikrama
Hast cut off all my earthly bonds and made me happy.
And yet if Thou leadest me to bewilderment
To whom will the seers take me?

73. Make me a servant among the sages who, having thrown away the ancient mala, have experienced the joy of ripe wisdom and bestow on me the high and pure nadantha, O Chokkhanatha, that rideth on the prancing steed in Madura.

74. O treasure house of love, God, wealth of Thy devotees, charm of supreme blissful joy that abideth, never separating, in mine intelligence, lo, Thou art I Chokkhanatha.

நீரிலே மூழ்கிலுமென் நித்தமருச் சிக்கிலுமென்
பாரிலே சுற்றிப் பணியிலுமென்—வேரிலே
உற்றிருந்தா லன்றோ உயிர்க்குறுதி ஒன்றிரண்டும்
அற்றவனே சொக்கநா தா. (75)

என்செயலே என்றென் றியற்றுவதும் என்செயலும்
உன்செயலே என்றென் றுணர்த்துவதும்—நின்செயல
தாகுமே என்ன அடியேற் குணர்த்தலும்நீ
ஆகுமே சொக்கநா தா. (76)

ஈண்டும்எனை ஆண்டிலையேல் என்வினைக்கீ டாயானே
வேண்டும் பவங்களில்நீ விட்டாலும்—பூண்டருளால்
அங்கங்கே என்னோ டனனியமாய் என்னுருவில்
தங்கியருள் சொக்கநா தா. (77)

உன்னைவிட நீங்குமுயிர் ஒன்றில்லை ஆகவினால்
என்னைவிட நீங்குவதும் இல்லைநீ—பொன்னைவிடப்
பூந்தேன் அலருடையாய் பொங்குமது ராபுரியில்
வேந்தே பிரியா விடை. (78)

---

75. Of what avail is it to bathe in the sacred waters? Of what avail is it to perform the puja daily? Of what avail is it to go round the world in pilgrimage? The good of the soul lieth in abiding steadfastly at the Root, doth it not? O Chokkhanatha who art neither one nor two.

76. O Sokkhanatha what I do as my own act
Thou showest that it is all Thine
None else but Thou can illumine the soul.

77. If Thou dost not make me Thy servant even now, but leave me to take my births according to my deeds, Lord, dwell graciously within me, inseparably whatever form I take.

78. Oh King of flourishing Madura
That wearest the golden hued garland of flowers
Overflowing with sweet honey! Thou art my life
Thou never gettest away from me;
Ours is an inseparable union.

அன்பர்க் கருள்புரிவ தல்லாமல் தேவரீர்
வன்பர்க் கருள்புரிய மாட்டீரேல்—உம்பர்தொழு
நல்லார் புகழ்மதுரை நாதரே தேவரீர்க்
கெல்லாமும் வல்லசித்த ரேன். (79)

நரகம் இனிநாட நாடோம் உமையாள்
விரகர் தமிழ்மதுரை மேவித்—துரகநரி
ஆக்கினார் வைகையில்நீர் ஆடினோம் அவ்வெல்லைப்
போக்கலாம் யாம்திரிந்திப் போது. (80)

நானோ தனுகரணம் நானோ மலமாயை
நானோ இவைகள் நடத்துவது—நானோதான்
பூண்ட வினைஅறுப்போன் புண்ணியபா வம்புரிவோன்
ஆண்டவனே சொக்கநா தா. (81)

அரும்பாச நன்மைதின்மை ஆகம் அதன்மேல்
விரும்பாது நிட்டையிலே மேவித்—திரும்பாத
மானந்தா என்னறிவில் மாறாது பொங்கிஎழும்
ஆநந்தா சொக்கநா தா. (82)

---

79. If thou, O God, wouldst only bless those that love Thee and not those that are wicked, why art Thou called the Siddha who could do everything, O Lord of Madura praised by the great souls whom even the Gods revere ?

80. We no longer desire the path to hell; we have bathed in the Vaigai of Uma's Lord, who having come to Madura of Tamil fame changed the horses into jackals. Now we can pass beyond the bounds of hell.

81. Am I the body and the karanas, am I the malas and the maya ? Am I one who urges these ? Severs the karma ? Am I the person who does the good and evil deeds ? O Lord, Chokkhanatha !

82. O Chokkhanatha—the ever increasing bliss of my intellect !
Dissociate me from all the cruel bonds of the material body
and its acts good and bad.
Give me endless joy by wrapping me
In communion with Thee.

துஞ்சப் பிணமென்னச் சுற்றத்தார் இட்டத்தார்
அஞ்சச் சலிக்க அருவருக்கக்—கொஞ்சமுற
வந்த தனுஇருந்து வாழ்ந்துநான் என்னவைத்த
தந்திரமென் சொக்கநா தா. (83)

தனுவாதி ஆக்கிஉயிர் தன்னிலிசைத் தாட்டி
எனுமாக மம்கருணை என்றுந்—தினமுமீ
ஆச்சரியம் யானெனதென் றுட்டல்மறந் தொன்றுரைத்தல்
ஆச்சரியஞ் சொக்கநா தா. (84)

தேகாதி எல்லாஞ் சடம்பிணம்பொய் என்றிருக்க
மோகாதி எல்லாம் முடிந்திருக்க—வேகமாய்
எப்போதும் இன்பவெள்ளத் தேஇருக்க வாழ்வைஎன்னுள்
அப்போதே சொக்கநா தா. (85)

---

83. O Chokkhanatha ! What is the corpse worth
When the soul passes out of this body ?
It is something to be dreaded against and detested
Nay—deemed base by friends and kindreds.
What is the magic of Thy art
That residing, as I do, in this transient body
I feel that everything about me is mine ?

84. O Chokkhanatha ! Agamas say that
Thou art the creator of this body
Where Thou hast infused life
And hath made it act at Thy sweet will;
But, how strange
That I should forget this beneficence and supremacy
Over the two forces the 'I,' and 'My' in me
And talk of something as if they are different from Thee !

85. The moment when the body and such things are considered insentient, dead and false, when the delusion and such things are at an end, when I dwell for ever in singleness in the flood of joy, that moment Thou takest Thy happy abode in me, Chokkhanatha.

நின்பாடல் என்று நினைப்பாடல் அன்றியே
என்பாடல் எங்கே இறைவனே—நின்பாடல்
ஆமே தனுவாதி ஆகமநால் வாக்காதி
யாமேநீ சொக்கநா தா. (86)

நீயியற்ற ஓர்பொருளை நிச்சயித்த நாயேனும்
போயியற்றல் செய்யப் புரிகுவேன்—நீயியற்றல்
ஆக்கா தனுவும் அசையுமோ அவ்விகற்பந்
தாக்காத சொக்கநா தா. (87)

அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்
கென்றுநீ நன்மைசெய்வ தன்றிநான்—ஒன்றேனுஞ்
செய்யுமா(று) எங்ஙன் சிவனே இனிநாயேன்
உய்யுமா(று) எங்ஙன் உரை. (88)

அறிவுபரம் ஆநந்த மாகவில்லை ஆகம்
பொறிகரணம் யானெனதும் போக—நெறிதவஞ்சேர்
பேரன்போ இல்லை பினைநான் உனக்கடிமைக்(கு)
ஆர்என்பேன் சொக்கநா தா. (89)

---

86. Chokkhanatha! I sing Thy praises in songs
Dedicated unto Thee. My songs ?
Indeed, Thine are mine. Thou art
The body and its train, the Agamas and the Vacs four.

87. Thou doth pre-ordain everything. But the dog of me acts with deliberate thought. Nothing moves without Thee. In creating many a phenomenon in this world O Chokkhanatha! Thou art unchanged.

88. From that day to this, and even in days to come it is only Thou that art doing good to Thy servant. How can I be of any service to Thee O Siva ? Say, how can I be saved ?

89. My intelligence hath not become supreme joy. Body, senses, karanas, I and mine, these have not perished. There is not that great love that leadeth me to austere ways. In what manner, then, can I call myself Thy servant ? O Chokkhanatha !

நின்னளவி லாநந்த நின்கருணை சற்றேனும்
என்னளவில் தோற்றா திருந்தக்கால்—நின்னளவில்
பூரணம்பொய் ஆநந்தம் பொய்கருணை பொய்உரைத்த
ஆரணம்பொய் சொக்கநா தா. (90)

தேவே மதுரைநகர்ச் சிற்பரனே எவ்வுயிர்க்குங்
கோவே எனையாளுங் கோவேஎன்—நாவே
உனைத்துதிக்கச் சிந்தை உனைநினைக்க என்றுங்
கனத்தில் உனைவணங்கக் காண். (91)

உன்னைச்சிங் காரித் தனதழகு பாராமல்
என்னைச்சிங் காரித் திடர்ப்பட்டேன்—பொன்னை
அரிவையரை யேநினையும் அன்பிலேற் குன்தாள்
தருவையோ சொக்கநா தா. (92)

சொக்கநா தாஉனையே சொல்லும் அடி யேனுடைய
பக்கமாய் நின்றுவினை பாற்றியே—எக்காலும்
மீண்டுவா ராதகதி மேவுவிப்பாய் தென்மதுரைத்
தாண்டவனே சொக்கநா தா. (93)

---

90. If Thy limitless joy and Thy loving grace do not exist for me, Thy limitless perfect joy is false, They grace is false and what the Vedas say is also false.

91. O God of Madura, beyond all knowledge, Lord of all life, my sovereign, make that my tongue praiseth Thee, my mind meditateth on Thee and that I worship Thee in solemnity.

92. Not adorning Thee and looking at Thy charms, I have adorned myself and got into distress. Wilt Thou bestow Thy feet on me, who am without love and who think only of women and wealth ?

93. Chokkhanatha, stand by the side of Thy servant that calleth on Thee alone. Put my actions to flight. Lead me into that path wherefrom there is never a return ; O Chokkhanatha that danceth in beautiful Madura.

ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலர்இல்லை—வேறெனக்குத்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சி
சொக்கேசநின் தாளே துணை. (94)

சொக்கநாத வெண்பா முற்றிற்று.

94. Comfort there is none. Few there are who in loving kindness would console Thy servant. There is no other help for me. O Siva, afraid of blame to Thyself through mishap to Thy devotees, Chokkanatha, Thy feet alone are my refuge.

## சிலபிரதிகளில் காணப்படும் அதிகப் பாடல்கள்

புண்டரிகத் தாளைப் புகழ்ந்து புகழ்ந்துதினம்
மண்டமரர் கொண்டிறைஞ்சும் ஆதியே—தொண்டுபடு
நாயேனை ஆண்டுகந்து நன்னெறிகள் காட்டுவித்த
தாயேநீ சொக்கநா தா. (1)

மிண்டுசெய்யு மும்மலமும் மிக்கவினை நல்குரவும்
பண்டுபோல் என்னைவந்து பற்றாமல்—கொண்டுபோய்
நின் அருளிற் சேர்க்க நினைகண்டாய் தென்மதுரை
மன்னவனே சொக்கநா தா. (2)

கூரியவெம் பாசக் குளிர்நீங்க நின் அருளாஞ்
சூரியன்எப் போதுவந்து தோன்றுமோ—பார் அறியக்
கொட்டமிட்ட சண்டனுயிர் கொள்ளையிட்ட மாமதுரை
இட்டமிட்ட சொக்கநா தா. (3)

உனக்குப் பணிசெய்ய உன்தனைஎந் நாளும்
நினைக்க வரம்எனக்கு நீதா—மனக்கவலை
நீக்கின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்கின்ற சொக்கநா தா. (4)

சன்மார்க்கம் செய்யுந் தபோதனரோடு என்னையு(நீ)
நன்மார்க்கம் செய்யஅருள் நாடுமோ—துன்மார்க்கம்
செய்கின்ற முப்புரத்தைத் தீயாக்கித் தென்மதுரை
வைகின்ற சொக்கநா தா. (5)

வந்த பொருளாசை மண்ணாசை பெண்ணாசை
இந்தவகை ஆசைஎல்லாம் என்மனத்தில்—வந்தும்இனிச்
சேராமல் வாழ நினைகண்டாய் தென்கூடற்
போராத சொக்கநா தா. (6)

தண்டுவரும் குண்டுவரும் தானைவரும் ஆனைவரும்
வண்டில்வரும் மாடுவரு மாடுவரும்—மிண்டிப்
பெருங்கோட்டை யும்சுமையும் பின்புவரும் கூடல்
அருங்கோட்டை வாசலில்சென் றால். (7)



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிய

# முத்தி நிச்சயம்

சீர்மேவும் ஆரூர்ச் சிதம்பர நாதனெனும்
பேர்மேவு ஞானப் பிரகாசன் — தார்மேவு
சேவடிகள் போற்றித் திகழ்முத்தி நிச்சயமொன்
றுவ தெனமொழிவேன் யான். (1)

சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம்
நந்தாது தோற்றுவித்த நற்குரவர் — முந்தவே
எந்தமுத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம். (2)

---

1. Adoring the rosy feet adorned with wreaths, of famous Chidambaranatha Jnanaprakasa of prosperous Arur, I shall proceed with this world Mukti Nischayam declaring that it is the Holy union.

2. What conclusions the good and worthy Santanacharyas Samayacharyas who checked the growth of other religions and spread their own, arrived at regarding Mukti as proclaimed in the Saiva authorities of the past, that Mukti proceed to define and determine.

அந்நிலையா னும்பிறவு மான்மாநந் தத்திறமாம்
என்னிலையே சித்திக்கு மென்றியம்பில் — உன்னிலைதான்
இல்லதென வோதி யியம்பு மளவைமுதற்
சொல்லுமது கேளாய் துணிந்து. (3)

ஈசன் றனதுசத்தி யின்பருந்து மீசனால்
ஆசறத்தன் சத்தியின் பான்மாவு — நேச
முடனருந்து மென்னின்முத்தி யொவ்வாது பாசம்
விடஅதுவாய் நிற்பதுவா மே. (4)

சிற்றின்பம் பேரின்பஞ் சீவகுண மென்றனைநீ
உற்றின் பிரண்டு முணர்ந்திலையோ — சிற்றின்பம்
நாடிற் கருமபல நாதனுருப் பேரின்பம்
நீடிப்ப டிகம்போல் நீ. (5)

பெறுவானும் பேறுநான் பெம்மானுள் ளுண்டேல்
அறிவாயோ வாநந்த மன்றி — யறிவேனுள்
ஆநந்தங் காட்டி யகத்திருப்ப னென்றலது
மானந்தான் கண்டறியாய் மற்று. (6)

---

3. If you say that according to these authorities and others, the Mukti is the attainment of the ananda that is in the nature of the atman itself, your position is a figment refuted by the very authorities on which you rely.

4. If you say that just as Siva enjoys the ananda by his sakti, so does the soul enjoy the desired ananda by its sakti, it, when the mala is removed by Siva, cannot be; for when the bonds separate, the soul stands in advaitic union with Siva's ananda that comes to it.

5. You say that limited joy and supreme bliss are both qualities of the soul. Wordly joy is a form of Karma. Supreme bliss is Siva's form. Your nature is that of a crystal.

6. You say that the enjoyer and the enjoyment are both yourself and that God resides within you. How do you perceive His presence other than through the feeling of joy ? If you say that you are the perceiver and He dwells in you, making you feel the joy, that is merely an inference and you do not realise otherwise.

வேதாகம மத்தின் விதித்த முத்தி தானன்றி
நீதானே யின்பமென்றல் நீதியோ — பேதாய்
பெறுவானீ யானந்தம் பேறென் றுரைத்த
தறியா திருந்தனை நீ யம். (7)

உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்திசிவன்
தன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே — முன்னறிஞர்
ஓது சிவன்றோற்ற மொன்றுமே காண்பரெனும்
போத மறந்தனையிப் போது. (8)

ஈசனையே காண வெனத்தவமுன் செய்ததெலா
மோசமாய் வந்து முடிந்ததே — பாச
வினையகன்ற போதும் விமலனே நின்றாள்
தனையறியா மூடர்க்குத் தான். (9)

தானன்றி நிற்கவெழுஞ் சச்சிதா னந்தனை நீ
யானென் குணமென் னிதெம்பென்றோ — ஊனநீ
ஞானகுணம் பெற்றினு நானென னநவிலும்
ஈனகுணம் போனதிலை யே. (10)

---

7. Is it right that you should set aside what the Vedas and Agamas declare to be Mukti and should say that you are yourself the ananda? If it is so, fool, you are ignorant of the fact that you are the enjoyer and ananda is what is enjoyed or got by you.

8. Ah! Is it Mukti to remain in enjoyment or perception of yourself? Mukti, it is perception and enjoyment of Siva's form. Have you forgotten the words of the wise that as enjoyment in Mukti they perceive only the form of Siva?

9. O spotless One, for the foolish, who have not been able to perceive Thy feet, even after the binding malas have been removed, all the austerities they had performed to perceive the Lord have come to naught and been in vain.

10 What iniquity is this that you style yourself and your quality the Satchidananda, which becomes manifest only when the ego has been lost. O you in bondage, if you continue to say. I, I, even after the attainment of divine wisdom, surely you have not realised Mukti and your bondage has not been removed.

தோன்றுபர மாநந்தச் சோதியன்றி நின்னறிவிற்
றோன்றுசுக முண்டென்றாய் சுத்தப்பொய் — தோன்றுமின்பம்
ஈச னுயிரறிவ திதன்றி வேறுண்டேற்
பாசமலா தேதுண்டு பார். (11)

அண்ணலைப்போ லாநந்த மான்மாவிற் குண்டாகில்
எண்ணில் பிறப்பிறப்பை யெய்துமோ — கண்ணிருளை
ஓட்டாதோ ஆதவனுக் கொத்தவொளி யுண்டாகிற்
கேட்டாயோ கேட்டிலையேற் கேள். (12)

ஓரின்ப மில்லா துறுமலங்கள் போக்கியிடும்
பேரின்ப நின்குணமென் பேதாய்கேள் — பேரின்ப
நின்குணம்போற் றோன்றுமது நீயாகை யான்இரும்பு
தன்குணமோ தீயியல்பு தான். (13)

ஆசகற்றி நின்னறிவி லாநந்த மாஞ்சிவனைக்
கூசகற்றி யுன்றன் குணமென்று — பேசியிடும்
பேயாவா திக்கேது பேசிடில்நீ தானந்த
மாயாவா திக்கே மகன். (14)

---

11. You say, that there is, besides the effulgence of the supreme joy, a joy that springs in your intelligence. This is utterly false. The joy that springs is Sivam. The soul is the perceiver. If there is aught else, what can it be except the bond ?

12. If you say that the soul has the quality of joy in it just as God has, why should it take countless births and deaths ? Though both be forms of light, can the light of the eye, if it has light similar to that of the Sun, dispel darkness like the light of the Sun ? Have you heard of this ? If not, listen.

13. Hear you. Oh ! fool, who call that supreme joy which removes the malas that hide the unique joy, Siva's form, from being perceived, as your quality, simply because it springs in you. It appears like your quality because it stands one with you. Are the glow and warmth the qualities of the iron ? They are the qualities of the fire.

14. Come on, you, devilish one ! that shamelessly called your quality as the Sivam, who dispels the malas and who stands as the joy in your intelligence. Where is any refuge for you ? You are the (descendant) son of that Mayavadin

என்றும் பிரியா விருளருளா னீங்கவின்பாய்த்
துன்றுசிவ போகமெனச் சொல்லாமல் — உன்றன்
நலம்போக மென்றுரைத்தாய் நாமறிவோ நீயு
மலம்போக முத்தியென்ப வன். (15)

தன்பிரம கீதைவே தாந்தஞ் சிவாகமநூல்
இன்பமுயிர்க் குண்டென் றியம்பியதேல் — இன்பஞ்சீ
வான்மாவிற் குண்டென் றறைந்ததன்று நின்றபர
மான்மாவிற் குண்டென்ற தாம். (16)

சிவசத்தி யைத்திளைப்பர் சீவன்முத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் — சிவசத்தி
தன்னைப் புணர்ந்ததன்று சாற்றுவமை யுந்தெரியா
தன்னைமுலைப் பாலென் றறி. (17)

சிவசத்தி யைத்திளைப்ப ராதிமுத்த ரென்னு
மவசத்த மாபா தகமென் — சிவசத்தி
தன்னைக்கண் டாங்கருளாற் சச்சிதா நந்தமெனு
மன்னைத் திளைத்துவாழ் வார். (18)

15. When the anava that without beginning had remained inseparably with the soul has left it by God's grace, Siva comes and unites with it in the form of joy. You do not call it Sivabhoga, but call it your own joy. We know who you are. You are the one who says that Mukti consists in the removal of the malas.

16. If ever the Brahmagita, his own authority, the Upanishada and the Saiva Agamas say that the soul has got joy in it, it does not mean that the joy is inherent in the soul. It means that the joy is of the Supreme Being that stands in advaitic relation with the soul.

17. That the Jivanmuktas enjoy Sivasakti, sounds so wicked; it is a great sin, you say. You know not the use of a figure of speech. It is like the child enjoying milk from the mother's breast.

18. That the Jnanamuktas enjoy Sivasakti, sounds so wicked; it is a great sin, you say. They realise Sivasakti first and then by grace dwell enjoying the Lord who is sat chit and ananda.

